## வாழ்வில் முடிவெடுத்த அந்தத் தருணம் என்றும் பசுமையானது...



**அதற்கு ஈடான மற்றொரு தருணம் நீங்கள் யெஸ்டி அஸோஸியேடட் பில்டர்ஸிடம் இல்லம் வாங்கும் இனிய தருணம்தான்!**




**அண்ணா நகர், தி. நகர், நங்கநல்லூர், வேளச்சேரி மற்றும் பிற இடங்களில் அழகிய தரமான டீலக்ஸ் ஃபிளாட்டுகள் மற்றும் தனி வீடுகள் வாங்க அணுகுங்கள்**




**YESDE ASSOCIATED BUILDERS LTD.**

FLAT PROMOTERS & PROPERTY DEVELOPERS

26, Ranganathan Street, IInd Floor, T. Nagar, Madras - 600 017.

Phone: 4340224/4340210/-4342667. Fax: 044-2344333

E.Mail:yesde@md3.vsnl.net.in Web:www.yesdebuilders.com

# மடோனாவின் மாஸ்டர்!

• வாகீசர்



• மடோனா

இருபத்திரண்டு மொழிகள் அறிந்தவர், பதினாறு புத்தகங்கள் எழுதியவர், எழுநூறு சூத்திரங்களை மொழி பெயர்த்தவர், டால்ஸ்டாய் கதைகளை சமஸ்கிருதப்படுத்தியவர், யோகத்தின் மூலம் குண்டலினி சக்தியை எழுப்பும் வித்தையைக் கற்றவர், இளம் வயதிலேயே சம்ஸ்கிருத ஆராய்ச்சி மையத்தின் இயக்குனரானவர், 'காளிதாஸ் புரஸ்காரை'ப் பெற்றவர். இன்ன பிற சிறப்புகளையுடைய வாகீச சாஸ்திரியாரின் வீடு எங்கே என்றால், எத்தனை பேருக்குத் தெரிந்திருக்குமோ?

'மடோனா மாஸ்டர்' எங்கிருக்கிறார் என்றதும் 'டக்'கென்று புரிந்து கொண்டு வழி காட்டி விடுகிறார்கள்! (அண்மையில் ஸ்டார் டீ.வி.க்காரர்கள் வேறு அமர்க்களப்படுத்தியிருக்கிறார்களே!)

இத்தனை தூரம் காசிக்குப் போய் விட்டு மடோனாவின் குருவைப் பார்க்காமல் வந்தால், கங்கையில் நீராடியும் புண்ணியமில்லாமல் போய் விடப் போகிறதே என்று, வாரணாசியின் சந்து பொந்துகளிலெல்லாம் புகுந்து புறப்பட்டு, மாடு, நாய், சாணம், பரங்கியர், யாத்ரீகர், சந்நியாசிகள் முதலானோருக்குப் போக, மிஞ்சிய இடத்தில் நிலா வெளிச்சத்தில் (கரண்ட் கட்) ஒரு மாதிரியாக கேட் வாக்(!) செய்து, 'சிவாலா காட்'டிலுள்ள வாகீச சாஸ்திரிகளின் இல்லத்தை அடைந்தபோது...

மடோனாவாக இருந்தால் ஒரு சாந்தி அஷ்டாங்கியை அவிழ்த்து விட்டிருப்பார்.

அறுபத்தைந்து வயதிலும் தினம் பதிமூன்று மணி நேரம் உழைக்கும் அந்தப் பேரிளைஞர் நம்மை இன்முகத்துடன் வரவேற்றார். சுற்றுச் சுவர்களிலெல்லாம், கல்கியின் பிரதான தெய்வம், வெவ்வேறு போஸ்களில்!

"உங்களுக்கு இஷ்ட தெய்வம் விநாயகரோ?"

"ஆமாம்! அவர் தும்பிக்கையிலேயே 'ஓம்' என்ற வடிவமைப்பு இருக்கிறதே! ஞானத்தை வழங்குபவன் அவன்" என்றவாறே, ஒன்பது என்ற எண்ணுக்கும் பிள்ளையாருக்குமுள்ள தொடர்பை விளக்கினார்.

"பிள்ளையார் பெருமைகளைப் பேச ஆரம்பித்தால் நான் கணக்கே தெரியாது..."

பிள்ளையாரை விட்டு, இவர் யார் பிள்ளை, இவருக்குப் பிள்ளை யார் என்ற 'பெர்சனல்' தகவலுக்குத் தாவினோம்.

விந்திய மலைப் பிரதேசத்தில், சாகருக்கும் சாஞ்சிக்கும் இடைப்பட்ட, ஆரம்பப்

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com ஈ மெயில் : kalkiweekly@vsnl.com

பள்ளியேயில்லாத சிறிய கிராமத்தில், ஒரு ஜமீந்தார் குடும்பத்தில், ஆறு அண்ணன் தம்பியரிடையே 1934ல் ஜனித்த இவருக்கு, மூன்று வயதிலேயே முற்பிறவி நினைவு வந்துவிட்டதாம்.

"ஐயையோ... முற்பிறவியில் யாராக இருந்தீர்கள்?"

"என் அப்பாவின் அப்பாவாக..."

"அதாவது தாத்தாவே பேரனான கதை! இதனால்தான் தாத்தா பெயரை பேரனுக்கு வைக்கும் வழக்கம் வந்ததோ...?"

"அதென்னவோ தெரியாது, ஆனால் நானே என் அப்பாவுக்கு அப்பா, அப்பாவுக்குப் பிள்ளையுமாயிருந்திருக்கிறேன் என்பது உண்மை!"

"மை காட்!" என்று நாம் வியக்கையில், "பிரம்மகாட்" என்ற இடத்தில், பேய் பிசாசுகளுக்குச் சவாலாய் இவர் தபஸிருந்த 'த்ரில்'லரை அவிழ்க்கிறார்.

"ஆவிகளிடமிருந்து ஏதாவது கற்க முடிந்தால் கற்கிறேன். இல்லாவிட்டால் எனக்குத் தெரிந்ததை அவற்றுக்குச் சொல்லிக் கொடுக்கிறேன்" என்றாராம், இவரைத் தடுத்தவர்களிடம், பிடிவாதமாக.

"கற்றீர்களா? கற்பித்தீர்களா?" என்றால், சிரிக்கிறார்.

"சில ஸித்திகள் கைவரப் பெற்றேன்! ஆனால் கடுமையாக உழைத்தேன்; ஒரு பொழுதே உணவு; மூன்று மாதம் தொடர் மௌனம்..."

இயற்கையிலேயே தெய்வீகம், அமானுஷ்யம், அற்புதங்கள் போன்றவற்றுடன் சம்ஸ்கிருதத்திலும் இவருக்கிருந்த ஈடுபாடு, ஐந்து வயதிலேயே இவரை வாரணாசிக்கு விரட்டிவிட்டது. 1956ல் தன் குருவை அடைந்து, அவ் வழியில் பிருந்தாவனத்திலும் இமயத்திலும் தவமியற்றியிருக்கிறார். குருவின் மூலமாகச் சில அபூர்வ சக்திகளைப் பிராப்தித்து, அவர் உபதேசப்படியே முதல் இருபத்தைந்து வருடங்களுக்கு அவற்றை வெளிப்படுத்தாதிருந்திருக்கிறார்.

அதன் பிறகே யோகத்தின் மூலம், குண்டலினி சக்தியை எழுப்பி, அதன் பயனாய் ஒழுக்கம், அமைதி, ஆரோக்யம், வெற்றி முதலியவற்றை அடையும் வழியை ஏனையோருக்குக் கற்றுத் தரத் துவங்கினார்.

இன்று இவரது யோகா பள்ளியில் பயில்பவர்களில், அநேகர் அமெரிக்கா, ஆஸ்திரேலியா, ஐரோப்பா பகுதிகளிலிருந்து வரும் தூரப் பறவைகள். (600 மாணவர்களாம்!) ஆறு வார கோர்ஸுமுண்டு! ஆறு மாத கோர்ஸுமுண்டு! ஃபீஸ், டாலர்களில்!)

யோகம் மூலமாக நோய்களைக் குணப்படுத்தும் வழியைத் தம் மனைவிக்கும் கற்றுத் தந்தாராம். அவருக்குக் கொஞ்சம் 'ஈகோ' வந்துவிடவே, கொடுத்த சக்தியை மீண்டும் 'வாபஸ்' பெற்று விட்டாராம்!

முறையாக இசையே பயிலவில்லையாம்; ஆனாலும் உலகத்திலுள்ள எல்லா இசைக் கருவிகளையும் இசைக்கும் வல்லமை பெற்றிருக்கிறாராம்!

கண்ணை உருட்டி, கையை ஆட்டி அபிநயித்துப் பேசுவதைப் பார்த்து, "நாட்டியம் தெரியுமா?" என்றால் "ஓ" என்கிறார்.

'ஆ' வென்று நம்மை வாயைப் பிளக்க வைக்கும் மற்றொரு விஷயம் – இவரது சிறப்புத் தொழில் நுட்பத்தை உபயோகித்து சம்ஸ்கிருதமே தெரியாதவர்களைக்கூட, நிமிட நேரத்தில் சம்ஸ்கிருத சுலோகங்கள், வாக்கியங்களைத் திருப்பிச் சொல்ல வைக்க முடியுமாம்! பெங்களூரிலிருந்து பாரீஸ் வரை 'காம்ப்'கள் நடத்தியிருக்கிறார்!

---

**"தலைவரே, நீங்க தண்ணீர் தொட்டி வெச்சுக் கொடுத்ததுக்காக தொகுதி மக்கள் உங்களைப் பார்க்க வந்திருக்காங்க?"**

**"என்னவாம்?"**

**"தண்ணீர் எப்போ வரும்னு கேட்கணுமாம்!"**

**– ரேஸ். கிருஷ்ணரத்னம்**

---

ஆன்மிகம் ஒரு கண் என்றால், இலக்கியம் இவரது மற்றொரு கண்! காவியம், இலக்கணம், சரித்திரம் என்று சம்ஸ்கிருதத்தை ஒரு கை பார்த்திருக்கிறார்.

புயங்கப் பிரயத்தம் என்று, தீவிரவாதத்தைப் பற்றிக்கூட ஒரு காவியமியற்றியுள்ளார்! குரு கோவிந் சிங்கே பாராட்டினாராம்!

"உலகிலேயே மஹா பெரிய தீவிரவாதி ருத்ரன்தான்! அவனது உருவப்படத்திற்கென்று நிறைய அலைந்தேன். கடைசியில் மூன்று முகங்கள் கொண்ட ஒரு சிவலிங்கத்தின் படம்தான் கிடைத்தது" என்கிறார்.

1965ல் பாணினிக்கு சவால் விட்ட வில்லியம் வீட்னியை தனி ஒருவராய் சமாளித்த கதை, ஐந்து வருடங்கள் தினம் 15 மணி நேர உழைப்பால் பெற்ற P.HD, UDC உதவித் தொகையில் உருவான புத்தகங்கள் (தலையணை சைஸ்) எல்லாவற்றையும் சுவைபட

அசை போடுகிறார்.

''அப்போதெல்லாம் ரிடையர்டு ப்ரொஃபஸர்களைத்தான் ரிஸர்ச் டைரக்டராக்குவார்கள் அந்த அடிப்படையிலும், என் பெயரில் வெளியான புத்தகங்களையும் படித்துவிட்டு, என்னைத் தொண்டு கிழம் என நினைத்து, வெளியூரிலிருந்து சதஸுக்கு அழைத்திருந்தார்கள். முப்பது வயதில் நான் போய் இறங்கியதும் அடித்ததே அவர்களுக்கு ஷாக்!'' என்று ஹாஸ்ய நினைவுகளில் மலர்ந்தார்.

அவற்றிலிருந்து மீண்டு, இவரை 'ஷாக்' அடிக்க வைத்த விஷயங்களுக்குத் தாவினோம்.

ஒருநாள் டீ.வி.யில், வாஜ்பேயி ஏதோ உரையாற்ற, அவர் மேற்கோள் காட்டிய சம்ஸ்கிருதக் கவிதையில் மூன்று உச்சரிப்புத் தவறுகள் இருந்ததை இவர் கண்டுபிடித்து



விட்டார். மொழியை அறிந்த பிரதமர், இப்படி சம்ஸ்கிருதக் கொலை செய்ததைப் பொறுக்காமல், எல்லா தினசரிகளுக்கும் கார சாரமாகக் கடிதமெழுதினார்; ஒன்றும் பிரசுரமாகவில்லை!

ஆனால் ஸுஃபல் ஷர்மா என்ற யு.என்.ஐ செய்தியாளர், இவர் கடிதத்தைப் படித்துவிட்டு, நேரே இவர் வீடு தேடி வந்துவிட்டார்.

''வாஜ்பேயியை விடுங்கள், மடோனா என்ற பெண்மணி 'ரே ஆஃப் லைட்' என்றொரு ஆல்பம் வெளியிட்டிருக்கிறார். அதில் இடம் பெற்றுள்ள சம்ஸ்கிருத ஸ்லோகங்களின் உச்சரிப்பைக் கொஞ்சம் கவனியுங்களேன்'' என்றிருக்கிறார். கேஸட்டைக் கேட்டவுடன் காதைப் பொத்திக் கொண்டு விட்டார் சாஸ்திரி!

இவரது எதிர்ப்புக் குரல் பி.பி.சி.யை எட்டி, அங்கிருந்து தொலைபேசியிருக்கிறார்கள். இவர் விளக்கங்கள் அவர்களுக்கு விளங்காமல், நேராக மடோனாவையே அழைத்து ஒரு 'டெலி கான்ஃபரன்ஸு'க்கு ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

"எம் பாடலில் யாது குற்றம் கண்டீர்? சொற் குற்றமா, பொருட் குற்றமா?" என நக்கீரர் பாணியில் மடோனா வினவ, இவர் 'உச்சரிப்புக் குற்றத்தால் பிறந்த சொற் குற்றத்தால் தோன்றிய பொருட் குற்றம்'' என்றிருக்கிறார். அவர் குழம்பவே, இவர் ஒழுங்காகப் பாடியும் காட்டியிருக்கிறார்.

"பாப் பாடல்தானே? உச்சரிப்பு அப்படி இப்படி இருந்தால் பாபமா?" என்றிருக்கிறார் பாவமாய்!

"சிவ சிவா... சம்ஸ்கிருதத்தில் 'த' 'ப'ச' போன்ற அட்சரங்களில் நாக்கு கொஞ்சம் தப்பிப் பிறழ்ந்தாலும் அனர்த்தமாகிவிடுமே?

'ஸ்வஜன' என்றால் உற்றார்; 'ஷ்வஜன' என்றால் நாய்கள்! 'சகல' என்றால் முழுமை; 'ஷகல' என்றால் பாகம்... இப்படியா உங்கள் உச்சரிப்புகள் மூலமாக நீங்கள் "ஓம் சாந்தி... சாந்தி" என்று சாந்தியை பரப்புவது? உண்மையில் அசாந்தியை அல்லவா இது பரப்புகிறது?'' என்றிருக்கிறார்.

அடுத்த நிமிடமே, "நான் சம்ஸ்கிருதம் கற்க எத்தனை நாளாகும்?'' என்றிருக்கிறார் மடோனா!

"அது ஆகலாம்... குறைந்தது ஆறு மாதம்" என இவர் அனாயாசமாகச் சொல்ல, "அட்லீஸ்ட் உச்சரிப்புகளைக் கற்கவாவது..." என்றவுடன் "ஒரு ஆறு நாள்" என்றிருக்கிறார். உடனே மடோனா "நான் எப்போ வருவது?" என்று கேட்டார்.

அவ்வளவுதான்; இந்தச் செய்தி காட்டுத் தீயாய்ப் பரவ, 'எப்ப வருவாரோ?' என்று இவர் வாயிலில் அவர் தரிசனத்துக்காகக் காத்து நின்ற கூட்டத்தை சமாளிப்பதே வாகீசருக்குப் பெரும்பாடாகி விட்டது!

இந்திய அரசாங்கம் வேறு மடோனாவுக்கு 'செக்யூரிட்டி' மறுத்து விட்டதால், காதும் காதும் வைத்தாற் போல்தான் மடோனாவும் கூடவே ஒரு பெண்ணும் வந்தது, கற்றது, சென்றது எல்லாம் நிகழ்ந்திருக்கிறது. (அதற்கு மேல் டீடெய்ஸெல்லாம் வெளியிட வேண்டாமே என்கிறார்)

''கற்றபின் உச்சரிப்பு திருப்திகரமாகி விட்டதா? இப்போது பாடல் எப்படி இருக்கிறது?''

"ம்... ஏதோ முன்பிருந்ததற்கு இப்போது எவ்வளவோ மேல்... அவ்வளவுதான்..."

வாகீசர் வாயிலிருந்து இந்த அளவு வந்திருப்பதே மடோனாவுக்கு பிரம்மரிஷி... ஸாரி... 'பாப்'ரிஷி மாதிரிதான்!

— ஜெயஸ்ரீ ராஜ்



• ராஜாஜியுடன் மாறன் - இளம் வயதில்

உங்களுக்கு நாராயணஸ்வாமியைத் தெரியாது; ஆனால் நெடுஞ்செழியனைத் தெரியும்! ராமையாவைத் தெரியாது; அன்பழகனைத் தெரியும்! அதுபோலவே தியாகராஜ சுந்தரத்தைத் தெரியாது. ஆனால் முரசொலி மாறனைத் தெரியும். ஆம்! முரசொலி மாறனின் இயற்பெயர்தான் தியாகராஜசுந்தரம்! இது தி.மு.க.காரர்களிலேயே பலருக்குத் தெரியாது!

கலைஞர், முரசொலி மாறனைத் தமது மனச்சாட்சி என்று குறிப்பிட்டதும், மாறன் தி.மு.க. அமைச்சர்களின் மெத்தனப் போக்கை ஒருபிடி பிடித்ததும் நாடறிந்த விஷயம். பாராளுமன்றத்தில் தி.மு.க. சார்பில் சில பல பொறுப்புகளை மாறன் வகித்திருக்கிறார் என்றாலும் அமைப்பு ரீதியில் அவர் எந்தப் பொறுப்பிலும் இருந்தது இல்லை. தி.மு.கவில் இத்தனை செல்வாக்குடன் இருக்கும் மாறன், கலைஞருக்கு என்ன உறவு? மாறனின் தாய் மாமன்தான் கலைஞர். மாறனை வளர்த்து ஆளாக்கியவர்.

திருவாரூர் போர்டு ஹை ஸ்கூலில் படித்தவர் மாறன். அப்போதே அரசியல் ஆர்வம் உண்டு. கையெழுத்துப் பிரதிகள் நடத்துவது அந்தக் காலத்தில் ஃபாஷனாக இருந்தபோது, கலைஞர் முரசொலி கையெழுத்துப் பத்திரிகை நடத்திக் கொண்டிருந்தது போல, மாறனும் அவரது தோழர் சுப்பிரமணியனுடன் (பிற்காலப் பெயர் மன்னர்மன்னன்) சேர்ந்து, 'திருவிடம்' என்று ஒரு கையெழுத்துப் பத்திரிகை நடத்தினார். மற்றவர்கள் ஒரேயொரு பிரதியைக் கையால் எழுதி கையெழுத்துப் பத்திரிகை நடத்தியபோது, மாறனின் 'திருவிடம்' மட்டும் மூன்று பிரதிகள் தயாராகும். எட்டுப் பக்கப் பத்திரிகை. அதிலே அரசியல்தான் வெகு தூக்கலாக இடம்பெறும். கார்ட்டூன்களும் இருக்கும். பத்திரிகையின் மூன்று பிரதிகளும் முறையே குமரி நிலையம் என்கிற புத்தகக் கடை, பாரதிதாசன் பதிப்பகம் மற்றும் மாறனின் பள்ளி மூன்று இடங்களிலும் வாசகர்களுக்குப் படிப்பதற்காகக் கிடைக்கும். மூன்று இடங்களிலும், அந்தந்த இதழின் 'ஹை லைட்ஸ்' போஸ்டர்களும் கையாலேயே எழுதி, ஒட்டப்பட்டிருக்கும். மத்திய நிதி அமைச்சராக இருந்த ஆர்.கே. சண்முகம், காங்கிரசுடன் பிணக்கு ஏற்பட்டு ராஜினாமா செய்தபோது, மாறன் தமது கையெழுத்துப் பத்திரிகையில் எழுதிய, 'சறுக்கி விழுந்த சண்முகம்' என்ற விமர்சனக் கட்டுரை பெரும் பரபரப்பேற்படுத்தியது!

திருவாரூரிலிருந்து சென்னை வந்து பச்சையப்பன் கல்லூரியில் பி.ஏ. மற்றும் எம்.ஏ. முடித்தபின், கலைஞர் நடத்தி வந்த முரசொலி நாளிதழிலேயே



• கலைஞருடன்...

செய்தி ஆசிரியரானார் மாறன். அப்போது தான் வெறும் மாறன், முரசொலி மாறன் ஆனார்.

அரசியல் விமர்சனக் கட்டுரைகள் மட்டு மின்றி சிறுகதைகளையும் மாறன் எழுதியுள்ளார்!

கருணாநிதி கூட, பல சமயங்களில் தமது திரையுலக அனுபவங்களைப் பொது மேடையில் பேசுவது உண்டு. ஆனால் கதை, வசன கர்த்தா மற்றும் திரைப்பட இயக்குனரான மாறன், தனிப்பட்ட முறையில் கூடத் தமது திரையுலக நாட்கள் பற்றிப் பேசாமல் தவிர்த்து விடுவார்! காரணம், அவர் தம்மை ஒரு அரசியல்வாதியாக மட்டுமே அடையாளம் காட்டிக் கொள்ள விரும்பியதுதான்!

மாறன் கதை வசனமெழுதிய முதல் படம் ஜெனோவா. (எம்.ஜி.ஆருக்கும் முதல் படம்)

கதை, வசனம் மற்றும் டைரக்டராக சுமார் நாற்பது படங்களுக்குப் பணியாற்றியுள்ளார் மாறன். இவரை அடையாளம் காட்டிய முதல் படம் என்று குலதெய்வம் படத்தைச் சொல்லலாம்.

கலைஞர் போல, திரைப்படங்களில் இவர் ஓரங்க நாடகக் காட்சிகளைப் புகுத்தியது உண்டு. இதற்கு உதாரணமாக அன்னையின் ஆணை படத்தில் இவர் எழுதிய 'சாம்ராட் அசோகன்' ஓரங்க நாடகத்தைக் குறிப்பிடலாம். அதில் அசோகராக நடித்தவர் சிவாஜி.

கலைஞரும் எம்.ஜி.ஆரும் இயக்குனர் காசிலிங்கமும் பங்குதாரர்களாக இருந்து படமெடுத்த மேகலா பிக்சர்ஸ் படங்களையும், பின்னாளில் பூம்புகார் பிக்சர்ஸ் படங்களையும் டைரக்ட் செய்திருக்கிறார். இவரது டைரக்ஷனில் வெளியான ஹிட்களில் எங்கள் தங்கம், அவன் பித்தனா, மறக்க முடியுமா? முதலியனவும் அடங்கும்.

அரசியலில் தீவிரமாக இறங்கியதும், சினிமாவுக்கு குட்பை சொல்லி விட்டார்.

## Mr. கட் அண்ட் ரைட்!

• முரசொலிமாறன்

**தீ**விர அரசியல் பிரவேசத்திற்குப் பின்னரும் கூட, ஓர் அரசியல் எழுத்தாளர் என்ற முகத்தைப்




பெற்றிருந்தார் மாறன். திராவிடத் தனி நாடு கேட்ட காலத்தில் 'திராவிடப் பிரிவினை' பற்றி விரிவான நூல் எழுதினார். மொழி வழி பிரிந்து, இன வழி ஒன்றுபடவேண்டும் என்று முழக்கமிடப்பட்ட காலகட்டத்தில் இவர் எழுதிய நூல் 'ஏன் வேண்டும் இன்பத் திராவிடம்?' தனிநாடு கோரிக்கையைக் கைவிட்டு, மாநில சுயாட்சியை தி.மு.க. கையில் எடுத்துக் கொண்டபின் மாறன் மாநில சுயாட்சி என்றால் என்ன? அதற்கு என்ன அவசியம்? என்றெல்லாம் விவரித்து மாநில சுயாட்சி என்ற விரிவான நூல் ஒன்றை எழுதினார்.

**மா**றன் எப்படிப்பட்டவர்? கட் அண்டு ரைட்டாகப் பேசி விடுபவர். ஒருவர் ஒரு கருத்தைச் சொன்னால், அது மாறனுக்குத் தவறு என்று பட்டால் மழுப்பல் எதுவுமில்லாமல், முகத்தில் அடித்தாற்போல அந்தக் கருத்து தவறு என்று சொல்லி விடுவார். கலைஞரிடம் கூட இப்படித்தான் நடந்து கொள்வார். இதனாலேயே கட்சியின் இரண்டாம் கட்டத் தலைவர்களுக்கும், மாறனுக்கும் இடையே இடைவெளி ஏற்படுவதைத் தவிர்க்க முடியவில்லை. தொண்டர்களுக்கும் இவருக்கும் பெரிய இடைவெளி என்பது பகிரங்கம்.

**மா**றுபட்ட கருத்து கொண்டிருந்தாலும், அதை அடுத்தவர் மீது திணிக்க அவர் ஒருபோதும் முற்பட்டதில்லை.

மாணவராக இருந்தபோது, இந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்து கொண்டு, சிறைக்குப் போனவர் மாறன். நெருக்கடி நிலையின் போது, மிசாவில் கைது செய்யப்பட்டு, சென்னை மத்திய சிறையில் எட்டாம் நெம்பர் கொட்டடியில் குறிவைத்துத் தாக்கப்பட்டவர்களுள் இவரும் ஒருவர். அப்போது, முதுகிலும் இடுப்பிலும் இவர் பட்ட அடியின் பாதிப்பு இன்னமும் இவருக்கு உண்டு.

கலைஞர் கைது செய்யப்பட்டு, சிறையில் இருந்த காலத்தில் 'one man army' போல இருந்து வியூகங்கள் வகுத்து, திட்டங்கள் தீட்டி, கட்சியை நடத்திச் சென்றவர் மாறன் தான்.

67 தேர்தலில், தி.மு.க. அமோக வெற்றி பெற்று, அண்ணா முதல்வர் பொறுப்பேற்க வேண்டிய சூழ்நிலையில், தமது எம்.பி. பதவியை ராஜினாமா செய்தபின், நடந்த இடைத்தேர்தலில் அண்ணாவின் தென் சென்னைத் தொகுதி வேட்பாளராகப் போட்டியிட்டு வென்று முதல் தடவையாக, பாராளுமன்றம் சென்றார் மாறன்! அதன் பின் ராஜ்ய சபாவிலோ, லோக் சபாவிலோ தொடர்ந்து எம்.பி. ஆக இருந்து வருகிறார். இடையிடையே, மத்திய அமைச்சர் பொறுப்பு.

**மா**நில அரசியலில் அதிகம் ஈடுபடாமல், டெல்லி அரசியல்வாதியாக மாறன் ஆகி விட்டார் என்று ஒரு கருத்து உண்டு. இதன் பின்னணி என்ன?

ஒரு மாநிலக் கட்சி என்பது அந்த மாநிலத்துடன் முடிந்து போகிற ஒன்றல்ல என்பது சமீபத்திய இந்திய அரசியல் சரித்திரம் சொல்லும் செய்தி. எனவே, எந்த ஒரு மாநிலக் கட்சியின் நலனையும் கருத்தில் கொண்டு டெல்லியில் இருந்து கொண்டு மற்ற கட்சியினருடன் ஒருங்கிணைந்து செயல்பட நம்பகமான நபர் மிக அவசியம். இதைக் கலைஞர் உணர்ந்திருக்கிறார். அதன் வெளிப்பாடே இந்த முடிவு.

மாறன் ஒரு தீவிர வாசகர். ஏகப்பட்ட புத்தகங்கள் படிப்பவர். சாடிலைட் டெலிவிஷன் வந்தபின் படிக்கிற பழக்கம் குறைந்து போய் விட்டது என்பதற்கு இவரும் ஒரு உதாரணம். உடையில் கூட சஃபாரி ஷர்ட், வேட்டி என்று புதிய காம்பினேஷன் இவருடையது. மனைவி மல்லிகா கும்பகோணத்தைச் சேர்ந்தவர். இரண்டு மகன்கள். மூத்தவர் கலாநிதி சன் டீ.வி.யைப் பார்த்துக் கொள்கிறார். இளையவர் தயாநிதி குங்குமத்தை கவனித்துக் கொள்கிறார். ஒரே மகள் அன்பரசி. டாக்டருக்குப் படித்தவர்.

ஒருவிதத்தில் மாறன் ஒரு அபூர்வப் பிறவி.

எம்.பி. என்கிற முறையில் தரப்படும் டெலிபோன், காஸ் கனெக்ஷன் கோட்டாக்களைக் காசுக்கு விற்பதில்லை; டெல்லியில் வீட்டை வாடகைக்கு விடாத எம்.பி. இவர்.

— மௌலி

# வேர்க்குரு என்பது வெறும் அரிப்பல்ல.
# அது ஒரு சருமக்கோளாறு.



## விரைவில் நிவாரணம் பெற நைஸில்.

வெயில் காலத்தில் வியர்த்துக்கொட்டி, பிசுபிசுவென்று உடல் இருக்கையில் உங்கள் சருமத்தின் வியர்வை சுரப்பிகள் அடைத்துக்கொள்ளும். அதனால் அரிப்பு ஏற்படும், கடுமையாக சொரியத் தூண்டும்.

அப்போது சருமத்தில் தொற்று ஏற்பட வாய்ப்புண்டு.

நைஸிலில் மட்டுமே உள்ளது கிருமிகளைக் கொல்லும் க்ளோர்ஃபெனஸின். இந்த முக்கிய உட்பொருள் வேர்க்குருவுக்கு எதிராக கடுமையான செயல்புரியும். அதனால் வேர்க்குருவிலிருந்து விரைவான நிவாரணம் தருவது மட்டுமல்லாது, அதைச்செய்கையில் இதமும், சுகமும் கூடுதலாய் தரும்.




**நைஸில்**

வேர்க்குரு பவுடர்

**கிருமிகளைக் கொல்லும் க்ளோர்ஃபெனஸின் அடங்கியது.**

# அரசியலில்

**‘சு.சுவாமி சொன்னது போல் துர்கா, லக்ஷ்மி, சரஸ்வதி அல்ல அவர்கள்... தாடகை, பூதனை, சூர்ப்பனகை என்று வர்ணிப்பதே பொருத்தமாயிருக்கும்’ - இந்தியன் எக்ஸ்பிரஸ் நாளிதழில் இவ்வாறு எழுதிய டி.ஜே.எஸ். ஜார்ஜ், அரசியலில் சில பெண்கள் இழைக்கக் கூடிய அழிவு மகத்தானது என்கிறார். ‘தாடகை, சூர்ப்பனகை, பூதனைகளின் பிடியிலிருந்து இந்தியாவை துர்கா, லக்ஷ்மி, சரஸ்வதி தேவிகள்தான் காப்பாற்ற வேண்டும்’ என்று கட்டுரையை முடித்திருக்கிறார்... பெண்கள் அரசியலில் புகுவதால் அழிவு உண்டாகுமா? கருத்துக் கேட்டபோது....**

***நிர்மலா சுரேஷ் (தி.மு.க. இலக்கிய அணி துணைச் செயலாளர்) :***

அரசியலில் பெண்கள்; அழிவுக்கு வழியா? கேள்வியே அநியாயம்! இப்போது நடந்த ஆட்சிக் கவிழ்ப்புக்கு இரு பெண்கள்தான் காரணம் என்ற அடிப்படையில் எழுந்திருக்கும் சிந்தனை இது. பா.ஜ.க. அரசைக் கவிழ்த்ததற்கு இந்தப் பெண்மணிகளுக்கு ஆயிரம் சொந்த, அரசியல் காரணங்கள் இருக்கலாம். அதற்குள் நான் புக விரும்பவில்லை. இதற்கு முன் கூட மத்திய அரசு பலமுறை கவிழ்க்கப்பட்டிருக்கிறதே! அப்போதும் பெண்கள்தான் காரணமாக இருந்தார்களா? ‘அரசியலில் ஆண்கள் அழிவுக்கு வழியா?’ என்ற கேள்வியை அப்போது எழுப்பியிருக்கலாமே. எனவே நான் சொல்ல விரும்புவதெல்லாம், இரு பெண்மணிகள் செய்த தவறான செயல்களைக் காட்டி, ஒட்டுமொத்தமாகப் பெண்களைக் குற்றம் சாட்டாதீர்கள் என்பதுதான்.

நீங்கள் ஒரு விஷயத்தை கவனித்து இருப்பீர்கள். ஆட்சி கவிழ்ந்து இத்தனை நாட்கள் ஆகியும் பா.ஜ.க. தரப்பிலிருந்து ஜெயலலிதாவை நேரடியாக யாரும் குற்றம் சாட்டவில்லை. மம்தா போன்றவர்கள் அவர்கள் பக்கம் இருப்பதால் கூட இருக்கலாம். ஜெயலலிதா ஆட்சியிலிருந்தபோதும், பின்னரும் செய்த அட்டூழியங்களை நாடே அறியும். அதிகாரத்தில் இருக்கும் ஆண்கள் ஊழல் செய்வதில்லையா? ஆணா, பெண்ணா என்று பார்க்காதீர்கள். தவறு செய்தவரை ஒரு நபராகப் பார்த்து தண்டனை கொடுங்கள். அப்படிச் செய்தால், செய்த தவறுகளை நியாயப்படுத்தும் தைரியமும் யாருக்கும் வராது.

அந்தக் காலத்திலிருந்தே எதாவது ஒரு வழிமுறை அல்லது பழமொழியைச் சொல்லி பெண்களை வீட்டுக்குள்ளேயே முடக்க சதி நடந்து கொண்டிருக்கிறது. இதற்குக் காரணம்

• ஜெயந்தி நடராஜன்



• டாக்டர் லட்சுமி விஜயகுமார்



• நிர்மலா சுரேஷ்



• மலைச்சாமி



• உதயமூர்த்தி

ஆணாதிக்க சமுதாயம்தான்.

இந்திரா காந்தி, பேனசிர் புட்டோ, ஜெயலலிதா போன்றவர்களுக்கு அரசியலில் உயரே வர ஒரு பின்புலம் இருந்தது. அந்த பின்புலம், பல தவறுகளுக்குக் காரணமாய் அமைந்தது. 'Iron lady' என்று போற்றப்பட்டவர் மார்க்ரெட் தாட்சர். அவர் மீது எந்த ஊழல் புகாரும் இல்லையே.

பேனசிர் புட்டோ, ஜெயலலிதா வரிசையில் மம்தாவைச் சேர்க்காதீர்கள். அவர் உழைத்து முன்னேறியவர். முன்கோபக்காரரும் அவசரக் குடுக்கையுமான ஜெயலலிதாவை 1996 தேர்தல் தோல்வியைத் தொடர்ந்து கட்சியிலிருந்து துரத்தி விட்டுப் புதிய தலைமையுடன் செயல்பட அ.தி.மு.க. ஆண் வர்க்கம் துணியவில்லையே! அது ஏன்?

மட்டும் உயர் நிலையில் உள்ள பெண்களின் கட்டளைப்படி ஆண்கள் செயல்பட வேண்டியிருக்கிறது. இதனால் ஏற்படும் எரிச்சல் காரணமாக ஒட்டு மொத்த பெண் சமூகத்தை எரிச்சலுடன் பார்ப்பது, இகழ்வாகப் பேசுவது போன்றவை நடந்து கொண்டிருக்கின்றன. பேனசிர் புட்டோ, ஜெயலலிதா ஆகியோர் தவறு செய்தால், பெண் வர்க்கமே தவறு செய்ததைப் போல் ஏன் பேசுகிறீர்கள்? அவர்கள்தான் பெண்களின் ஏக போகப் பிரதிநிதிகளா?

# பெண்கள்: அழிவுக்கு வழியா?

• வாசுகி

**ஜெயந்தி நடராஜன் (த.மா.கா.) :**

பெண்கள் இன்று புகாத துறையில்லை. கட்டட வேலை, வயல் வேலை, என்று துவங்கி, கணினி, காவல் துறை, கப்பல் துறை என்று சகல துறைகளிலும் வலம் வந்து கொண்டிருக்கிறார்கள். அதே போல் சமையல் செய்வது முதற்கொண்டு குழந்தைகளைப் பார்த்துக் கொள்வது, கணவனின் தேவைகளை கவனிப்பது என்று வீட்டுப் பொறுப்புகளையும் நிறைவேற்றுகிறார்கள். அரசியல் துறையில் மட்டும் அவர்களை அழிவு சக்தி என்று குறிப்பிடுவது எந்த வகையில் நியாயம்? எல்லாத் துறைகளிலும் பெண்களுக்கு மேல் ஆண்கள் மேஸ்திரிகளாக, கண்காணிப்பாளர்களாக உட்கார்ந்து கொண்டு, உழைக்கும் பெண்களுக்குக் கட்டளைகள் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அரசியலில்

அவர்களை ஒரு தனி நபராகப் பாருங்கள். செய்த தவறுகளுக்கு தண்டனை கொடுங்கள். 'அழிவு சக்தி' வரிசையில் இந்திரா காந்தி பெயரைக் குறிப்பிடுவதை என்னால் ஏற்றுக் கொள்ள முடியாது. மம்தா ஓர் அதிரடி அரசியல்வாதியாக இருந்தாலும் இதுவரை சொந்த லாபத்துக்காகச் செயல்படாதவர் அவர். கலைக்கப்பட்ட பாராளுமன்றத்தில் 35 ஆண் உறுப்பினர்கள் மீது கடுமையான கொலைக் குற்றங்களும், கிரிமினல் குற்றங் களும் இருந்தன. இதன் காரணமாக ஒட்டு மொத்த ஆண் உறுப்பினர்களும் மோசமான வர்கள் என்று சொல்லிவிட முடியுமா?

இப்போது உள்ளாட்சி நிர்வாகத்தில் பெண்களின் பங்கு கணிசமாகக் கொண்டு வரப்பட்டிருக்கிறது. தன் சொந்த கிராமத் தின் முன்னேற்றத்துக்காகச் சிறப்பாக உழைக் கும் பெண் ஊராட்சி மன்றத் தலைவிகள் நிறையவே இருக்கிறார்கள். எந்தப் பின்புல மும் இல்லாமல் சமுதாயச் சேவையில் மட் டுமே நாட்டமுடைய பெண்கள் எதிர்காலத் தில் நிறையவே அரசியலில் வருவார்கள். இப் போது சுமத்தப்பட்டிருக்கும் அபாண்டமான பழியை அவர்கள் துடைத்தெறிவார்கள் என் பது நிச்சயம்.

**வாசுகி** *(ஜனநாயக மாதர் சங்கம்)* :

அரசியல் துறையில் பெண்கள் எண்ணிக்கையே மிகக் குறைவு. அதிலும், முடிவுகள் எடுக்கக் கூடிய உயர் இடத்தில் இருக்கும் பெண்கள் மிக மிகக் குறைவு. அப்படிப்பட்ட வாய்ப்பு கிடைக்கப்பட்ட பேனசிர் புட்டோ, ஜெயலலிதா போன்ற வர்கள் செய்த ஊழல், முறைகேடுகள் காரண மாக ஒட்டுமொத்த பெண் சமுதாயமும் அர சியலுக்கு உகந்தவர்கள் இல்லை என்று சித் திரிக்கப்படும் காட்சி, அநியாயம் மட்டுமல்ல; அபத்தமும் கூட. இப்போதைய அரசியலில் கொள்கையைத் துணையாகக் கொண்டு செல்பவர்களுக்குப் பின்னடைவு இருக்கிறது என்பதுதான் யதார்த்த நிலை. ஆண் அர சியல்வாதிகளிலேயே மிகச் சிறுபான்மை யோர்தான், சொந்த நலன்களைப் பற்றிக் கவலைப்படாமல், கொள்கைச் சிலுவையை ஏந்தி அரசியலில் இருக்கிறார்கள். இந்த நிலையில், கொள்கை அடிப்படையில் அர சியலில் எதிர் நீச்சல் போடும் பெண்களின் எண்ணிக்கை குறைவாகவே இருப்பதில் ஆச் சர்யம் இல்லை. இந்த யதார்த்தப் பின்ன ணியில் பார்த்தோமானால் சுசிலா

## அம்மாவின் எதிர்காலம் என்ன?



**தில்லியில் ஆட்சியைக் கவிழ்த்துவிட்டு, மாற்று ஆட்சி அமைக்க முடியாமல் திக்கித் திணறி சென்னை வந்து சேர்ந்த ஜெ.வை வரவேற்க விமான நிலையம் வந்த ரத்தத் தின் ரத்தங்களிடம் உற்சாகம் மிஸ்ஸிங். கோட்டையைப் (செங்கோட்டை!) பறி கொடுத்த சோகம் முகத்தில் வழிந்தது. காங்கிரஸோடு கூட்டணி உண்டா? தேர்தலில் இந்த முறை வெற்றிக் கூட்டணியை உருவாக்கும் சாணக்கியம் தலைவியிடம் உண்டா? கணிச மான இடங்களைப் பெறாவிட் டால் கட்சியின் எதிர்காலமே கேள்விக்குறியாகி விடுமே!**

கோபாலன், கீதா முகர்ஜி, மாலினி பட்டா சார்யா, பாப்பா உமாநாத் போன்றவர்கள், எந்த விதச் சறுக்கலும் இல்லாமல், குற்றச் சாட்டுகளுக்கும் ஆளாகாமல் அரசியலில் மேல் நிலைக்கு வந்திருக்கிறார்கள். முடிவு களை எடுக்கும் இடங்களுக்கு இவர்களைப் போன்றோர் வந்திருப்பார்களே ஆனால் நமக்கு ஜெயலலிதா போன்ற சில தவறான முன்னுதாரணங்கள் அரசியலில் காட்ட வேண்டிய அவசியம் வந்திருக்காது.

பிரச்னை ஆணா, பெண்ணா என்பது அல்ல! ராஜீவ் பெயர் போபர்ஸ் ஊழலில் சம்பந்தப்படவில்லையா? நரசிம்மராவ் ஊழல் நாறவில்லையா? ஹர்ஷத் மேத்தா

இது போன்ற கேள்விகளைச் சில அ.தி.மு.க. பிரமுகர்களிடம் கேட்டோம். 'நம்மை மாட்டி விட்டுடாதீங்க' என்ற கண்டிஷனோடு பேசினார்கள்.

''சென்ற முறை யாருமே எதிர்பாராத வகையில் பா.ஜ.க.வுடன் கூட்டணி அமைத்து சாதனை படைத்தோம். எங்கள் மீது மதவாதத்தோடு கைகோத்து விட்டோம் என்ற குற்றச்சாட்டு விழுந்தாலும், அது தேர்தல் வெற்றியை பாதிக்கவில்லை. இப்போது 'மதச்சார்பற்ற கூட்டணி' அமைக்கப் போகிறோம். தமிழக வாக்காளர்கள் இரட்டை இலையைக் கைவிட மாட்டார்கள் என்பது எங்கள் அழுத்தமான நம்பிக்கை. பா.ஜ.க.வுடன் கருணாநிதி கூட்டணி வைத்துக் கொண்டால் எங்கள் வேலை சுலபமாகிவிடும். தி.மு.க. + பா.ஜ.க. கூட்டணி இங்கு எடுபடாது. ஏனென்றால் ஒருவருக்கொருவர் பரஸ்பரம் நம்பிக்கை இல்லாமல் செயல்பட்டு காலை வாரிக் கொண்டு விடுவார்கள். நாங்கள் என்ன கூட்டணி அமைக்கிறோம் என்பது முக்கியமல்ல; இரட்டை இலை பல மாயங்களைச் செய்யும் சக்தி வாய்ந்தது என்பது பலமுறை நிரூபிக்கப்பட்டுள்ளது'' என்றார் முன்னாள் அமைச்சர் ஒருவர்.

காங்கிரஸோடு கூட்டணி வைத்துக் கொள்ள வேண்டும் என்பதில் அ.தி.மு.க. வினர் அவ்வளவு உற்சாகம் காட்டவில்லை. ''இரவும் பகலும் உழைத்து அவர்களை வெற்றி பெற வைத்தால் எங்களுக்கே தண்ணீர் காண்பிப்பார்களே'' என்ற சந்தேகம் இருக்கிறது. எப்படி இருந்தாலும், கட்சியின் எதிர்காலம் ஆகட்டும், அம்மாவின் எதிர்காலம் ஆகட்டும், பிரைட்டாகவே இருக்கிறது. 1996ல் கடுந்தோல்விக்குப் பிறகு நாங்கள் எழுந்து நிற்கவில்லையா? அது போன்ற நிலையையே சமாளித்து விட்டோம்'' இனி எந்தச் சூழலையும் சமாளிப்போம்'' என்கிறார் வட மாவட்டச் செயலாளர் ஒருவர். ஜெ.யின் மீதுள்ள நீதிமன்ற நடவடிக்கைகள் மூடிய ஒரு மாமாங்கம் ஆகலாம் என்பது இவரின் கணிப்பு.

கலைஞர் பி.ஜே.பி.யுடன் கூட்டு வைத்தால் அவரைக் குற்றஞ்சாட்டுவது எளிது; மக்களிடம் அது எடுபடும் என்று அ.தி.மு.க.வினர் நம்பிக்கையுடன் கூறு கிறார்கள். ''கலைஞர் எடுத்து விடும் எல்லா வாதங்களுக்கும் எங்களிடம் பதில் உண்டு. தி.மு.க.வைச் சமாளிப்பது பெரிய விஷயமல்ல. ஆனால் இப்போது காங்கிரஸ் தவிர, சி.பி.ஐ., சி.பி.எம்., போன்ற கட்சிகளைக் கூட எங்களுடன் கூட்டணி அமைக்க விடாமல் த.மா.காவினர் தடுக்கப் பார்க்கிறார்கள். தனியாகப் போவதற்கும் நாங்கள் தயார். என்றாலும் பா.ம.க. எங்களுடன் தொடர்ந்து இருக்கும் என்று நம்புகிறோம். இப்போது இருக்கும் இடங்களுக்கு ஒன்று கூடக் குறையாமல் நாங்கள் வெற்றி பெறுவோம்!'' என்றார் கலைக்கப்பட்ட பாராளுமன்றத்தில் உறுப்பினராக இருந்த அ.தி.மு.க. தோழர் ஒருவர்.

— தில்லப்பா

அட்டை வண்ணப்படம், படம் : சௌந்தர்ராஜன்

---

*பங்குச் சந்தை மோசடி உலகப் பிரசித்தி அல்லவா! இப்படி ஆண்கள் செய்த ஊழலை சொல்லிக் கொண்டே போகலாம். அதற்காக ஆண்களே அரசியலுக்கு வரக் கூடாதுன்னு சொல்லலாமா? இன்றைக்குள்ள சமூக நிலையில் ஊழல், மற்றும் அதிகார துஷ்பிரயோகங்களையும் ஒழித்துக் கட்டி கொள்கை வழி நடக்கும் ஆணோ, பெண்ணோ அரசியலில் முன்னணிக்கு வர மக்கள் ஆதரவளிக்க வேண்டும். அப்போது தான் அரசியல் சுத்தமாகும்.*

*பெண்கள் 33 சதவீத இட ஒதுக்கீடு கேட்கும்போது ஜெயலலிதா போன்றவர்களை உதாரணம் காட்டி பிரச்னையைக் கொச்சைப்படுத்தக் கூடாது. ''ஆண்கள்தான் பொது வாழ்க்கைக்கு லாயக்கானவர்கள், பெண்கள் வீட்டிற்குள்ளேயே முடங்கிக் கிடக்க வேண்டியவர்கள்'' என்று பொருந்தாத வாதம் செய்வதை ஆண்கள் விட்டொழிக்க வேண்டும். உள்ளாட்சியில் நிர்வாகம் செய்ய இப்போதுதான் பெண்களுக்கு வாய்ப்புக் கிடைத்திருக்கிறது. இன்னமும் இரண்டு, மூன்று தேர்தல்களுக்குப் பிறகு யாரையும் சார்ந்திராமல், சுயமாகச் சிந்தித்து செயல்படும் பெண்களின் எண்ணிக்கை நிச்சயம் உயரும் என்பதில் சந்தேகமில்லை.*

(தொடர்ச்சி 16ம் பக்கம்)

# 15

# தேனுறையாக்ஷர் பேச்சுக்கள்

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்

எல்லாவற்றையும் தரிக்கிறவன் விஷ்ணு என்று வேதம் சொல்கிறது. அந்த விஷ்ணு யார் என்று கேள்வி வரும்போது, 'விஷ்ணு ஸ்தூபோதி' என்கிறது. அவன் யாரென்றால், பர்வத குகைக்குள்ளே வாசம் பண்ணக்கூடியவன். மிருகமும் அல்ல; மனிதனும் அல்ல.... மிருகமும் மனிதனும் கலந்த ரூபன். அவன்தான் விஷ்ணு என்கிறது வேதம்.

விஷ்ணு சப்தத்தால் சமஸ்தத்தையும் தரிப்பவன் யாரென்றால் சாக்ஷாத் நரம் கலந்த சிம்மமாய், குகைக்குள்ளே வாசம் பண்ணக்கூடியவனான சாக்ஷாத் லக்ஷ்மி நரசிம்ஹனே!

அதனால்தான் 'நரசிம்ஹ வபு ஸ்ரீமான் கேசவ புருஷோத் தம' என்று சஹஸ்ர நாமத்திலேயே வருகிறது.

விஷ்ணு கஹா?
விச்வம் கிம்?
வஷட்கார : கஹா?
பூத பவ்ய பவத்ப்ரபு : கஹா?

என்று ஒவ்வொரு நாமாவுக்கும் பக்கத்திலே எவன்? எவன்? எவன்? என்று கேள்வியை நாம் போட்டுக் கொண்டே போனால், 'நரசிம்ஹ வபு:' என்று,

நரம் கலந்த சிம்மம்தான் நரசிம்ஹன் தான் விச்வம்
நரசிம்ஹன்தான் விஷ்ணு
நரசிம்ஹன்தான் வஷட்காரன்

என்று பதில் கிடைக்கும்படியாக பீஷ்மாசார்யர் இங்கே எடுத்துக் காட்டுகிறார். வேதம் சொல்வதைத்தான் அவர் அப்படியே சஹஸ்ர நாமத்திலே எடுத்துச் சொல்லியிருக்கிறார்.

கிரிஷ்ட : குசர : - குசரம் என்றால் குகை - கிரி - பர்வதம். பர்வத குகைக்குள்ளே வாசம் பண்ணுகிறான். பெரிய பர்வதம்!

சிம்மங்கள் எல்லாம் குகைக்குள்ளே படுத்துக்கொண்டிருக்கும். வெளியிலே வந்து கம்பீரமாக நாலு பக்கமும் திரும்பிப் பார்க்கும்.

வேறு பிராணிகள் தங்கள் எல்லைக்குள்ளே நுழைந்ததா என்று பார்க்கும்.

இப்படி சர்வமுமாகப் பார்ப்பதற்குத்தான் சிம்ஹாவலோகனம் என்று பெயர். எல்லாவற்றையும் பார்ப்பவர்களை இப்படி சிம்ஹாவலோகனம் பண்ணுவதாகச் சொல்வார்கள். சகலமும் அவர்களுடைய கண்ணுக்குத் தெரியும்.

'அவரைப் பார்த்தீரா?' என்று கேட்டால் 'அன்றைக்கு வந்திருந்தாரா? அப்படியா?' என்பார்கள். இப்படிக் கேட்பவர்கள்தான் அதிகம். எதிரே இருக்கும் எல்லாவற்றையும் பார்க்கிற திருஷ்டி அவர்களுக்கு இருக்காது. சில பேருக்குத்தான் அந்த சிம்மாவலோகனம் அமையும். அதுவும் நரசிம்ஹ சிம்மாவலோகனம் என்றால் பார்ப்பது மொத்தமும் அவனுக்குத் தெரியும்.

ஆக, பர்வத குகையிலே சிம்மம் இருக்கிறது. இந்தப் பர்வதம் என்றால் என்ன, குகை என்றால் என்னவென்று தெரிந்து கொள்ள வேண்டும். வேதம் சொல்கிறது :

பர்வதம் என்றால் வேதம். சமஸ்த வேதமும்! வேதங்கள் எல்லாமும் சேர்ந்து பர்வதமாக நிற்கிறது.

பர்வத குகை எதுவென்றால், வேதாந்தம்.

ஆகையினாலே உபநிஷத் இருக்கிறதே, அது குகை போன்றது. திடீரென்று ஒரு குகைக்குள்ளே நுழைய முடியுமா...?

மட்டபள்ளி க்ஷேத்திரத்துக்குப் போனால் அங்கே குகை போகிறது. பகவான் சன்னதியிலிருந்து கிருஷ்ணா நதிக்குள்ளே ஒரு குகை. எதிர்ப் பக்கத்திலே ஒரு குகை. அந்த குகைக்குள்ளே போக வேண்டும் என்றால், தீவட்டி எடுத்துக் கொண்டு போனால் மட்டுமே நம்மால் போய்விட முடியுமா?.... குகை வழி தெரிந்தவன் முன்னே தீவட்டியைக் காட்டிக் கொண்டு போனால்தான் நம்மால் போக முடியும்.

அந்த மாதிரி, வேதாந்த அர்த்தத்தை நாமாகத் தெரிந்துகொள்ள முடியாது. நாமாகப் படித்தால் தப்பாக அர்த்தம் பண்ணிக் கொண்டுவிடுவோம் - கோணலாக.

இப்படி, தப்பான அர்த்தமே கிடைக்கும்

என்பதாலே வெறுமே புத்தகத்தை எடுத்துப் படித்தவனின் ஞானம் அவையேறாது!

ஸ்வாமி தேசிகன் சொல்கிறார் : 'களவு கொண்டு ஆபரணம் பூண்டாற்போலே' என்று!

பெரிய கல்யாணம். கல்யாணம் நடந்து கொண்டேயிருக்கிறபோது குளியலறையிலே யாரோ ஒரு ஸ்த்ரீ கழுத்து ஆபரணத்தைக் கழற்றி வைத்திருக்கிறாள். வெளியே வருகிற போது போட்டுக் கொண்டுவர மறந்து விடுகிறாள்.

இன்னொரு ஸ்த்ரீ குளிக்கப் போனால், 'நெக்லஸ்' அங்கே நிராதரவாக இருக்கிறது!

உடனே அதை எடுத்து வைத்துக்கொண்டு விட்டாள் அவள்! கல்யாணம் நடந்து கொண்டிருக்கிறது. இதுதான் சமயம் என்று இவள் புறப்பட்டுப் போய்விட்டாள்.

தன் வீட்டுக்குப் போனவள் கதவைச் சாத்திக் கொண்டு, அலங்காரம் பண்ணிக் கொண்டு, கண்ணாடி முன்னால் நின்று கொண்டு பார்த்தால், ரொம்ப அழகாகயிருக்கிறது. அனுபவிக்கிறாள்.

நான்கு நாட்கள் கழித்து இன்னொரு கல்யாணத்துக்குப் போக வேண்டியதாயிருக்கு. அந்த



நகையைப் போட்டுக் கொண்டு போக வேண்டும் என்று ஆசை. போட்டுக் கொண்டு அலங்காரம் பண்ணிக் கொண்டு போனாள். இந்தக் கல்யாணத்துக்கு வந்தவர்கள் மொத்தப் பேரும் அந்தக் கல்யாணத்துக்கும் வந்திருக் கிறார்கள்! இவள் என்ன செய்தாளென்றால், கழுத்து ஆபரணத்தை நன்றாக மறைத்துக் கொண்டு விட்டாள். வெளியிலே அதைக் காட்ட முடியவில்லை. போட்டுக் கொண்ட அனுபவமும் ஏற்படவில்லை. யாரைப் பார்த் தாலும் பயமாக இருக்கிறது. 'கையைப் பிடித் துக்கொண்டு விடுவார்களோ! தொலைந்து போன அந்த 'நெக்லஸ்' இதோ இருக்கிறதே!' என்று கையும் களவுமாகப் பிடித்துவிட்டால் என்ன பண்ணுவது!

ஒவ்வொருத்தரும் வரும்போது, 'இந்த ஆபரணம் இவர்களுடையதோ என்னவோ! இவர்களுடையதோ என்னவோ!' என்று யாரைப் பார்த்தாலும் பயமாகயிருக்கிறது. போட்டுக் கொண்ட ஆனந்தமும் அனுபவ மும் இல்லை. 'எப்போதடாப்பா இங்கே யிருந்து போவோம்!' என்று ஆகிவிட்டது.

அந்த மாதிரிதான் புத்தகத்தைப் பார்த்துத் தானே மனப்பாடம் பண்ணியவன் எங்கே யாவது ஏறிப் பேசவேண்டுமானால் அவனுக் குச் சந்தேகம் வந்து விடும்! இவருக்கே சந்தே கம் வந்ததென்றால் அப்புறம் எதிரேயிருப் போருக்கு என்ன சொல்வது?! எதிரே உட் கார்ந்திருப்பவர் யாரைப் பார்த்தாலும் இவ ருக்குப் பயமாய் இருக்கிறது. 'அவரென்ன கேட்பாரோ? இவரென்ன கேட்பாரோ' என்று இப்படியே யோசனை பண்ணிக் கொண் டிருக்கிறார் – பயம்!....

தானே தரிக்க வழியில்லாதவர்கள் இதரர்களை எப்படி தரிக்கப் பண்ண முடி யும்? அதனால், களவுகொண்டு ஆபரணம் பூண்டால் அந்த ஆபரணத்தையும் ரசிக்க முடி யாது; இதராளைப் பார்த்தாலும் பயமாயிருக் கும். அது மாதிரிதான் ஆசாரியரிடத்திலே பெறாத வித்தையானது சிரமத்தை உண்டு பண்ணும். ஆசார்யரிடத்திலே உட்கார்ந்து கேட்டு சிக்ஷை பெற்று கற்கும் வித்தை இருக் கிறதே, அதுதான் நன்கு பிரகாசிக்கும்.

ஆகையினால் இங்கே, குகை என்றால் வேதாந்தம். உபநிஷத் அர்த்தத்தை நாமாகப் படித்துத் தெரிந்து கொள்வது முடியாத காரி யம். தெரிந்து கொண்டாலும் அபவார்த்தங் கள் வரும். அதனால், தேர்ந்த – நல்ல வேதார்த்திகளான மகான்களிடத்திலே உட் கார்ந்து கேட்க வேண்டும்.

வேதாந்த குகை என்னும் இருட்டுக் குள்ளே தீவட்டிப் பிடித்து அழைத்துப் போய் முன் சென்று வழிகாட்டக்கூடியவர்கள்

## அருள்வாக்கு

**ராஜாங்கத்தில் ஒரு 'மினிஸ்ட்ரி' அமைக்கிறபோது ஒருத்தர் ஃபைனான்ஸ், ஒருத்தர் மராமத்து, ஒருத்தர் போலீஸ் என் றெல்லாம் பொறுப்பு கொடுக்கிறார்கள். எவருக்கும் எந்த இலாகாவும் வஹிக்கிற யோக்யதை இருக்கலாம். அல்லது ஜன நாயக ஸெட்–அப்பிலே எதிலுமே இல்லா விட்டாலும், எதுவானாலும் தெரிந்த மாதிரி எடுத்துக்கொண்டு ஒரு மாதிரி ஒப்பேற்றி விடலாம்! எப்படியானாலும் அவருக்கு என்று ஒரு இலாகா இருக்கும்போது இன் னொன்றில் ஒரு மந்த்ரி பிரவேசித்து உத் தரவு போட முடியாது. ஒருத்தரே இன்**

ஆசார்யர்கள்.

உள்ளே இருக்கிற பரதத்வம் யார் என் றால், அவன்தான் நரசிம்ஹன்!

மிருகமும் மனிதனும் கலந்து நிற்கும்படி யான அந்த ரூபம் – அந்த நரசிம்ஹ பிரபா வம் – எத்தனை நேரம் சொன்னாலும் முடி யாதது. வேதாந்தத்தின் விழுமிய பொருளாய் இருக்கக்கூடியவன் நரசிம்ஹன்.

ஆகையினாலே, வேத வேத்யன் விஷ்ணு, வேதாந்த வேத்யன் விஷ்ணு.

'வேதாந்தத்தால் சொல்லப்படக்கூடிய வன் நரசிம்ஹனாகிற விஷ்ணு – யாதொரு பரபிரும்மம் உண்டோ, அது.' என்கிறோம்.

பரமாத்மாவை அது இது என்று சொல் வதா...?

ஆழ்வார்கள் சொல்லியிருக்கிறார்கள்! – எது விது?

'அவன்' என்றெல்லாம் சொல்லியிருக் கிறார்கள். இப்படி சாமான்யமாக அது இது என்று சொல்லலாமா என்றால் சொல்ல லாம்! ஏனென்றால் பரமாத்மாவானவன் நாம் குழந்தையாய்ப் பிரார்த்தித்தால் குழந்தையாய் வருவதனாலே, எடுத்தாற் கைப் பிள்ளையாய் இனிமையாய் இருப்பதனாலே 'அவன்' என்று சொன்னால் பரம சந்தோஷத்தை அடை கிறான்.

பரமாத்மாவை 'அவர்' என்று சொல்ல வேண்டியதில்லை. 'அவன்' என்று சொல்ல லாம். அதனால் தோஷம் கிடையாது.

அதே மாதிரி அந்த பரப்ரும்மம் இருக் கிறதே அது என்று சொல்கிறோம். அது இது என்று எல்லா சித் பதார்த்தத்திலும் அசித் பதார்த்தத்திலும் இருக்கிறான் அவன். அந்தர்யாமி!

மலை என்று ஒரு வஸ்துவை எடுத்துக் கொண்டால் அதற்குள் அந்தர்யாமியாய் இருக்கிறான். நம்மைப் போன்றவர்கள் மலை

றைக்கு ஒரு இலாகா மந்த்ரியாயிருந்துவிட்டு நாளைக்கு வேறு இலாகாவுக்கு மாற்றப் படுகிறார், அல்லது இன்றுவரை இரண்டு இலாகாக்களுக்கு மந்த்ரியாயிருந்துவிட்டு நாளைக்கு ஒன்று அவரிட மிருந்து எடுபட்டுப் போகிறது என்றால், நாளையிலிருந்து எந்த இலாகாவில் மாத்திரந்தான் தனக்குப் பொறுப்போ, அதிலேதானே அவர் அதிகாரம் வஹிக்க முடியும்? 'நேற்றைக்கு நான் அந்த போர்ட்ஃபோலியோ பார்த்தேனே, அதிலே இன்றைக்குச் சட்டம்



போடுவேன்' என்று அவர் பண்ண முடியாதோல்லியோ?

லோக நிர்வாஹம் நடத்துகிற தெய்வ ராஜாங்கத்திலும் இப்படியே தேவதைகள் அவாவாளுக்குப் பொறுப்புத் தந்து, பலன்களைக் கொடுத்து அநுக்ரஹிப்பதுதான் பொது வழக்கு.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.

யைத்தான் பார்க்கிறோம். ஆனால் மகான்கள் மலைக்குள் அந்தர்யாமியாய் இருக்கிற பரமாத்மாவைப் பார்க்கிறார்கள்.

ஆகையினால், நிற்கின்றதெல்லாம் நெடுமால் என்பது உபநிஷத் வாக்கியம். எல்லாம் பிரும்மம் என்றது அது!

ஏன் அப்படிச் சொன்னது?

எல்லா பதார்த்தங்களிலேயும் பிரும்மம் உறைவதனாலே. மகான்களுடைய கண்களுக்கு வஸ்துக்கள் தெரிவதில்லை. அவன்தான் தெரிகிறான்.

அதைத் திருமூலர் ஒரு சின்ன பாசுரத்திலே காட்டினார் : திருமந்திரம் என்கிற அவருடைய திவ்ய வாக்கிலே :

மரத்தில் மறைந்தது மாமத யானை
மரத்தை மறைத்தது மாமத யானை

இது பெரிய வேதாந்த விஷயம். ஒரு சின்ன பாசுரத்திலே காட்டி விட்டார்.

தந்தத்தினால் பண்ணப்பட்ட யானை; அல்லது சந்தன மரத்தால் பண்ணப்பட்ட யானை. அங்கேயிருந்து ஒருத்தர் வருகிறார்...

"அடடா! இந்த யானை ரொம்ப அழகாக இருக்கிறதே! எங்கே வாங்கினீர்கள்? மைசூரில் வாங்கினீர்களா...?" என்று கேட்கிறார்.

யானைகளைப் பார்க்கிறபோது அவை எதனால் செய்யப்பட்டவை என்கிற ஞானம் யாருக்கும் ஏற்படுவதில்லை. யானைதான் தெரிகிறது. இது என்ன தேக்கா, சந்தனமா, வேறு மரமா என்று பார்க்கிறபோது யானை தெரிவதில்லை. யானையைப் பரிசிலனை பண்ணிப் பார்க்கிறபோது மரம் தெரிவதில்லை!

அதேபோல்தான் உலக வஸ்துக்களைப் பார்க்கிறபோது அவன் தெரிவதில்லை. அவனைப் பார்த்தால், இது தெரிவதில்லை.

ஆகையினாலே, இதிலே நாம் நாட்டம் கொண்டோமானால் அவன் மறைந்து போய் விடுவான். அவனிடத்திலே நாம் ஈடுபட ஈடுபட இது மொத்தம் போய்விடும் நம்மை விட்டு!

தூங்குபவன் கைப்பண்டம் போலே என்றார் சுவாமி தேசிகன்.

ஒருத்தர் எப்போது பார்த்தாலும் கையிலே குடையை வைத்துக் கொண்டிருப்பாராம் - வெயில், மழை எல்லா காலத்திலேயும். பஸ்ஸிலே ஏறி உட்கார்ந்து ஒரு முறை தூங்கி விட்டார்! கை குடை நழுவி விழுந்து விட்டது!

தூங்குபவன் கைப்பண்டம் போலே என்று இதைத்தான் சொன்னது. தூங்கியவன் கைப் பண்டம் எப்படிக் கீழே விழுந்து விடுகிறதோ அந்த மாதிரி பகவத் விஷயத்திலே நாம் ஈடுபட ஈடுபட சம்ஸார பந்தமானது - கெட்டியாய் நாம் பிடித்துக் கொண்டிருக்கும் சம்ஸார பந்தமானது நம்மை விட்டுப் போய்விடும்.

அவனிடத்திலே ஈடுபட ஈடுபட, இது போய்விடும். இதைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாலோ அவன் போய் விடுவான்!

அவனிடத்திலே பூரணமாய் ஈடுபட இது தானாய் நழுவும்தான். ஆனால், இது மொத்தத்தையும் நழுவ விட்டுவிட்டு எப்போது அவனிடம் நாம் போவதாம்! 'எப்போ அலை ஓய்ந்து எப்போது சமுத்திர ஸ்நானம் பண்ணுவது?' என்று கேட்பது போல்தான்!

பாவம் மொத்தத்தையும் பரிகாரம் பண்ணி விட்டுத்தான் பகவானிடம் போக வேண்டும் என்றால் அது முடியாது. பாபம் இருக்கிறதே என்று எண்ணி பயப்படாதே! பகவான் திருவடியை ஆச்ரயித்தால் எல்லாம் நசித்து விடும்.

ஆகவே அது, இது, அசேதனம் என்று எல்லாமாகவும் அவன் இருப்பதனாலே பகவானையும் அது இது என்று சொல்வதில் தோஷமில்லை.

(தொடரும்)

(11-ம் பக்கத் தொடர்ச்சி)

**மலைச்சாமி (முன்னாள் தமிழகக் தேர்தல் ஆணையர்) :**

"புராண இதிகாச, புறநானூற்றுக் காலங்களிலிருந்து பார்த்தால் சமூகத்தில் நமது பெண்கள் சிறப்பானதொரு பங்கு பெற்றிருப்பது தெரிய வரும். குறிப்பாக நமது விடுதலைப் போராட்டத்தில் எதற்கும் துணிந்து குதித்த பெண்மணிகள் வரலாற்றுச் சான்றாய் இருக்கிறார்கள். பட்டியல் போட்டால் நீளும். நமது அரசியல் துறையில் சமீப காலங்களில் ஒன்றிரண்டு பெண்கள் தவறான முன்னுதாரணங்களாக அமைந்து விட்ட ஒரே காரணத்திற்காக ஒட்டுமொத்த பெண் சமுதாயமும் அரசியலுக்கு ஏற்றதல்ல என்று ஒதுக்கித் தள்ளக் கூடாது. முப்பத்தி மூன்று சதவீதம் கட்டாயம் அவர்களுக்கு ஒதுக்கித் தர வேண்டும். பொறுப்புகளுக்கு வரும் பெண்மணிகள் சில காலம் தடுமாறவே செய்வார்கள். போகப் போகச் சரியாகிவிடும்.

இப்போது நிர்வாகம் மற்றும் காவல் துறையில் உயர் அதிகாரிகளாய் இருக்கும் பெண்கள் மிகச் சிறப்பாய் செயல்படுகிறார்கள். அரசியல் துறையிலேயே மம்தா, சுஷ்மா ஸ்வராஜ், ஷீலா தீக்ஷித், மேனகா காந்தி ஆகியோர் மீது எந்தக் குற்றச்சாட்டும் இதுவரை இல்லையே! பரந்த அளவில் பெண்கள் அரசியலில் பங்கு பெறும்போது நல்ல உதாரணங்களை எடுத்துக் காட்டும் வாய்ப்புக் கிடைக்கும்.

**டாக்டர் எம்.எஸ். உதயமூர்த்தி (மக்கள் சக்தி இயக்கம்) :**

ஆணோ, பெண்ணோ, அரசியலில் நல்லவர்கள், தகுதியானவர்கள் வர வேண்டும். ஒதுக்கீடு முறையெல்லாம் இந்த நிலையைக் கொண்டு வருமா என்பது சந்தேகமே! அமெரிக்காவில் நீக்ரோக்கள், மைனாரிட்டி என்ற அடிப்படையில் இட ஒதுக்கீடு கேட்டார்கள். ஆனால் அரசாங்கமோ "உங்களைத் தகுதியுள்ளவர்களாக ஆக்கிக் கொண்டு மற்றவர்களுடன் போட்டியிடுங்கள். மக்கள் உங்களைத் தேர்ந்தெடுப்பார்கள்" என்று சொல்லிவிட்டது. இப்போது நீக்ரோக்கள் தேர்தலில் மற்றவர்களோடு போட்டியிட்டு வென்று பெரிய பொறுப்புகளில் இருக்கிறார்கள்.

முதலில் நமது மக்களுக்குக் கல்வியைக் கொடுத்து விழிப்புணர்வை உண்டாக்க வேண்டும். ஆசியா முழுவதும் பார்த்தால் அரசியல் துறையில் அறிவுக்கு முன்னுரிமை தராமல் உணர்வுகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கிறார்கள். பெரிய தலைவர் இறந்து போய்விட்டால், 'என்ன தகுதி இருக்கிறது' என்று கூடப் பார்க்காமல் அவருடைய மனைவியையோ, பெண்ணையோ முன்னணிக்குக் கொண்டு வந்து விடுகிறார்கள். எந்த விதமான தியாகமும், பயிற்சியும் இல்லாமல் பொறுப்புகள் மிகச் சுலபமாகக் கிடைப்பதால் தவறுகளும் இயல்பாய் நடக்கிறது. இவையெல்லாம் மாற வேண்டுமானால் தவறு செய்தவர்களுக்கு தண்டனை நிச்சயம் என்ற நிலை வர வேண்டும். அமெரிக்க அதிபர் நிக்ஸன் தாம் செய்த தவறுகளுக்கு மன்னிப்புக் கேட்டுக் கொண்டதால் பின்னர் வந்த ஃபோர்டு தண்டிக்காமல் விட்டு விட்டார். ஆனாலும் நிக்ஸனுக்குக் கீழ் செயல்பட்ட 64 அதிகாரிகளுக்கு ஜெயில் தண்டனை கிடைத்தது.

**லட்சுமி விஜயகுமார் (உளவியல் நிபுணர்) :**

அரசியல் ரீதியாகப் பெரிய பொறுப்புகளுக்கு வரும் பெண்கள் ஊழல் மற்றும் அதிகார துஷ்பிரயோகக் குற்றச்சாட்டுக்களில் சிக்கிக் கொள்வதற்கு உளவியல் ரீதியாகக் காரணங்கள் இருப்பதாகத் தெரியவில்லை. பெரிய பொறுப்புகளில் வரும் ஆண்கள் ஊழல் செய்வது போல் பெண்களும் அதில் ஈடுபடுகிறார்கள்; அவ்வளவுதான். இன்னும் சொல்வதானால், ஊழல் செய்வது என்பது அந்தப் பதவிகளுடன் இரண்டறக் கலந்து விட்ட தேசிய குணமாகிவிட்ட அவல நிலை இங்கிருக்கிறது. இதில் பெண்கள் பெயரைக் கெடுத்துக் கொள்வதற்கென்று விசேஷக் காரணங்கள் இருப்பதாகத் தெரியவில்லை.

ஒவ்வொரு துறையிலும் தங்களைச் சிறப்பாக்கிக் கொண்டு மிளிர பெண்கள் கடுமையாகப் பணிபுரிய வேண்டியிருக்கிறது. அமெரிக்க வெளியுறவுத் துறைச் செயலாளர் அல்பிரைட் போன்று உறுதியான பெண்மணிகளும் உலக அரசியலில் இருக்கத்தான் செய்கிறார்கள். அரசியலில் இருக்கும் பெண்கள் சிறு தவறு செய்தாலும், அது பூதக் கண்ணாடி கொண்டு பார்க்கப்படுகிறது. ஆண்களுக்கு உண்டாகும் எரிச்சல், கோபம், ஆசை, பேராசை, அனைத்தும் பெண்களுக்கும் உண்டு.

பேட்டிகள் : **ப்ரியன்**



1999 மே 9
பிரமாதி சித்திரை 26
மலர் : 57
இதழ் : 41

கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



# ஊழல் மூட்டைகளை ஓரங்கட்டுங்கள்!

பன்னிரண்டாவது மக்களவையைக் கலைக்கும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டதுமே லாலு பிரசாத் யாதவ் செயல்பட ஆரம்பித்துவிட்டார். பீஹார் மாநிலத்தில் அரசாங்க அதிகாரிகளும் தேர்தல் அதிகாரிகளும் அவருடைய இஷ்டத்துக்கும் சௌகரியத்துக்கும் ஏற்பப் பணிமாற்றம் செய்யப் பட்டிருக்கிறார்கள்.

தேர்தல் அறிவிக்கப்பட்ட பிறகு இவ்வாறு செயல்பட்டால் சட்ட விரோதமாகிவிடும் என்று அவசர அவசரமாக இயங்கியிருக்கிறார் லாலு.

தேர்தல் கமிஷன் சிந்தித்து வருவது போல் செப்டம்பர் வரை தேர்தல் ஒத்திப் போடப்படு மானால், லாலு போன்ற அரசியல்வாதிகள் இன்னும் என்னென்ன விதங்களில் இயலுமோ, அத் தனை வழிகளிலும் முறைகேடு நிகழ்த்துவர்.

காபந்து அரசாகச் செயல்படும் பி.ஜே.பி. மட்டுமே விரைவில் தேர்தல் நடத்தப்பட வேண்டும் எனக் கேட்டுக் கொண்டிருக்கிறது. சமீபத்திய அரசியல் சூறாவளியில் அடி வாங்கியதால் எழுந் துள்ள அனுதாப அலையைச் சாதகமாக்கிக் கொள்ள வேண்டும் என்ற உள்நோக்கம் பி.ஜே.பிக்கு இருக்கக் கூடும்.

எனினும் அக்கட்சி சார்பில் முன்வைக்கப்படும் வாதங்கள் நியாயமானவை:

- செப்டம்பர் வரை காபந்து அரசாகச் செயல்படுவது கஷ்டம். அவ்வாறு செயல்பட வேண்டு மானால் கூடுதல் அதிகாரங்கள் இந்த அரசுக்குத் தரப்பட வேண்டும்.
- செப்டம்பர்/அக்டோபரில் பருவ மழை, நாட்டின் பல பகுதிகளில் பெய்யத் தொடங்கியிருக்




கும். அதனூடே தேர்தல் நடத்துவது கஷ்டமாக இருக்கும்.

நம்பிக்கை வாக்கெடுப்பில் தோற்ற ஓர் அரசுக்கு, மக்களவையைக் கலைத்த பின் கூடுதல் அதிகாரங்கள் வழங்குவதென்பது மிகப் பெரிய முரண்பாடு.

காபந்து அரசின்வசம் நாட்டை நான்கைந்து மாதங்களுக்கு மேலாக ஒப்படைத்து வைப்பதும் அனுசிதமானது. பல முக்கியமான நிர்வாக முடிவுகள் எடுக்கப்படாமலே இருக்கும்!

எனவே நாட்டின் நலனை உத்தேசித்து மிக விரைவில் தேர்தல் தேதி குறிக்கப்பட வேண்டும்.

தேர்தலைக் கூடிய வரையில் ஒத்திப் போடச் சொல்லிக் கேட்கும் கட்சிகள், பிரசாரத்துக்கான பணத்தையும் பலத்தையும் திரட்டியாக வேண்டும் என்று காரணம் காட்டுகின்றன.

இந்தக் காரணங்களுக்காகவே தேர்தல் விரைவில் நடத்தப்படுவது முக்கியமாகிறது. பண பலம் புகுந்து விளையாடாமல் நியாயமான முறையில் தேர்தல் நடந்தேறும் வாய்ப்புகள் அதிகரிக்கும்.

தேர்தல் கமிஷன் செப்டம்பர் வரை அவகாசம் கேட்பதற்கான முக்கியக் காரணம் வாக்காளர் பட்டியல் புதுப்பிக்கப்பட வேண்டும் என்பதே.

நடக்கவிருப்பது ஒரு திடீர்த் தேர்தல். கடந்த முறை வாக்களித்தவர்கள், நாடாளுமன்றம் அல்பாயுளில் கலைக்கப்படும் என்று எதிர்பார்த்து வாக்களிக்கவில்லை. ஜெயலலிதாவின் சதி வேலையில் மக்களின் தீர்ப்பு புறக்கணிக்கப்பட்டு விட்டது. எனவே, பன்னிரண்டாவது லோக் சபாவைத் தேர்ந்தெடுத்த வாக்காளர்களுக்கு மீண்டும் வாய்ப்புத் தருவதுதான் முக்கியம்.

'அப்படியானால், புதிதாகச் சேர்க்கப்பட வேண்டிய வாக்காளர்களுக்கு அந்த வாய்ப்பை மறுப்பதா?' என்று கேள்வி எழும்.

போர்க்கால முனைப்புடன் செயல்பட்டு பட்டியலைப் புதுப்பிக்க தேர்தல் கமிஷன் முயற்சி மேற்கொள்ளலாம். அது சாத்தியமில்லையெனில் நிலைமையின் தீவிரம் கருதி, ஏற்கெனவே இருக்கிற பட்டியலைக் கொண்டு தேர்தல் பணிகளைத் தொடங்கி நடத்தலாம். வாய்ப்பு மறுக்கப் படும் வாக்காளர்களின் எண்ணிக்கை ஒப்புநோக்க ரொம்பக் குறைவானதுதான். ஒரு நெருக்கடி உருவாக்கியதன் மூலம் அவர்களுக்கு அவ்வாய்ப்பை மறுத்தவர் ஜெயலலிதாதானே தவிர, தேர்தல் கமிஷன் அதற்குப் பொறுப்பாக முடியாது.

இனி வரும் ஒவ்வொரு நாளும் அரசியல் அழுகுணி ஆட்டங்களுக்கு இடமளிக்கும் என்ப




தால் தேர்தல் கமிஷன் உடனடியாகத் தேர்தல் தேதியை அறிவிப்பது நல்லது. குடியரசுத் தலைவரும் தலைமைத் தேர்தல் கமிஷனரை அழைத்துப் பேசி, உடனடியாக, விரைவான தேர்தலுக்கு ஏற்பாடு செய்து அறிவிப்பும் செய்ய வற்புறுத்த வேண்டும்.

தேர்தல் நடத்துவது பற்றிக் குடியரசுத் தலைவரும் தேர்தல் கமிஷனும் கலந்தாலோசித்து நல்ல முடிவுக்கு வரலாம். ஆனால், அரசியல் வியூகங்கள் அமைப்பதும் ஸ்திரமான ஆட்சியைத் தேர்ந்தெடுப்பதும் முறையே அரசியல் கட்சிகளிடத்தும் மக்களின் கையிலும்தான் இருக்கிறது.

எந்த வியூகத்திலும் அ.தி.மு.க.வுக்கு இடம் தராதிருப்பது மிக மிக முக்கியம் என்பதை எவ்வளவு அழுத்தந்திருத்தமாகச் சொன்னாலும் போதாது. காரணங்கள் ஊரறிந்தவை. மீண்டும் மீண்டும் வலியுறுத்தத் தேவையில்லை. லஞ்ச ஊழலிலும், ஆணவத்திலும் மோசமான நிர்வாகத்திலும் ஜெயலலிதாவோடு போட்டி போட்டு வருபவர் லாலு! இருவருமே தங்கள் பேரிலுள்ள ஊழல் வழக்குகளைத் தாமதப்படுத்த வரலாறு காணாத வகைகளில் முயன்று வருகிறார்கள். இப்போது தேர்தலில் நின்று வெற்றிபெற அவர்களுக்கு ஒரு வாய்ப்புத் தரப்பட்டால், அவர்களுக்கு எதிராக இயங்க வேண்டிய சட்டம் வலுவிழந்து போகும்.

இதை அனுமதிக்காமல், ஜெயலலிதா, லாலு ஆகியோரின் ஆதரவை மறுக்கும் ஆன்ம பலம் இப்போது அனைத்துக் கட்சிகளுக்கும் தேவை. இந்த மன உறுதியை மட்டும் பெற்று விட்டால் பிறகு மதச் சார்புள்ள கட்சிகள், மதச்சார்பற்ற கட்சிகள் என்று இரண்டே அணிகளாகத் தேர்தலில் மக்களைச் சந்திக்கும் வாய்ப்பு உருவாகும். வாக்குகள் சிதறி வீணாவதைத் தவிர்க்கலாம்.

கூட்டணி விஷயத்தில் கட்சிகள் காட்டும் எச்சரிக்கையை வாக்களிக்கும்போது வாக்காளர்களும் மேற்கொள்ள வேண்டும்.

பெரும்பான்மை பலத்துடன் ஓர் அரசு அமைவது எவ்வளவு முக்கியமோ, அவ்வளவு முக்கியம் அவ்வரசுக்கு மிருகபல மெஜாரிட்டி இருக்கக் கூடாது என்பதும். இதைக் கருத்தில் கொண்டு அரசியல் விருப்பு - வெறுப்புகளைக் கடந்து வாக்களிக்க வேண்டிய கட்டத்தில் நாம் இருக்கிறோம்.

கட்சிகளின் தேர்தல் கோஷங்கள் விதவிதமாக இருக்கும். ஆனால் வாக்காளரின் கோஷம் ஒன்றுதான்:

வலுவான ஆட்சி; பொறுப்புள்ள எதிர்க்கட்சி!

நான் படித்துக் கொண்டிருந்த காலத்தில், எனக்கு இது வேண்டும்; அது வேண்டும் என்று எல்லாம் பெற்றோர்களிடம் கேட்க முடியாது. அப்படியே கேட்டாலும் அவ்வளவு சுலபமாக வாங்கிக் கொடுத்து விட மாட்டார்கள், வீட்டுப் பெரியவர்கள். ஆசைப்பட்டுக் கிடைக்காது போனவற்றைப் பெரிய பட்டியலே போடலாம்.

இதுபோன்ற சூழ்நிலையில் வளர்க்கப்பட்டவர்கள், தலையெடுத்து, சம்பாதிக்க ஆரம்பித்தவுடன், நாம் எதை எதையெல்லாம் ஆசைப்பட்டு, அடைய முடியவில்லையோ, அவற்றையெல்லாம் நமது குழந்தைகள் அனுபவிப்பதற்கு நாம் வழி செய்ய வேண் டும் என்ற மனப்பான்மை ஏற்பட்டு விடுகிறது. இதனால், குழந்தைகள் எதைக் கேட்டாலும் வாங்கிக் கொடுத்து விடுகிறார்கள்.

இப்படியே பழகிவிட்ட குழந்தைகள், ஏதாவது கேட்கிறபோது, வாங்கிக் கொடுக்க முடியாது என்று சொல்லிவிட்டால், 'இல்லை; அதை வாங்கிக் கொடுத்தால் தான் ஆயிற்று' என்று பிடிவாதம் பிடிக்கிறார்கள். முதலில் கண்டிப்பாக இருந்தாலும், குழந்தைகள் மீது கொண்டுள்ள பாசம் மற்றும் குழந்தைகளின் பிடிவாதம் காரணமாக அவர்கள் கேட்பதை வாங்கிக் கொடுக்கிற கட்டாயத்துக்குப் பெற்றோர்கள் ஆளாகிவிடுகிறார்கள்.

போன தலைமுறையினருக்கு 'இது வேண்டும்' என்று கேட்கவே தெரியாது. வாங்கிக் கொடுக்கிற துணியைப் போட்டுக் கொண்டு பள்ளிக் கூடம் செல்வோம். இந்தக் காலத்தில், விதம் விதமாய் உடையணிந்து கொள்ளக் குழந்தைகள் ஆசைப்படுகிறார்கள். என்னிடமே பல தடவை மாணவர்கள், 'ஸ்கூலுக்கு எதற்கு யூனிபார்ம்? நாங்கள் எங்கள் விருப்பம் போல உடையணிந்து கொண்டு வந்தால் என்ன' என்று கேட்டதுண்டு. 'காலையில் எதற்காகப் பள்ளிக் கூடத்தில் பிரார்த்தனை? மாணவப் பருவத்தில் தியானம் எல்லாம் எதற்கு?' என்று விதம் விதமான கேள்விகள் கேட்பார்கள்.

இது போலக் கேள்விகள் கேட்கிற போது நான் கோபப்பட மாட்டேன். கேள்விகளுக்கு பதில்தான் சரியான அணுகுமுறையே தவிர, கேள்விகளையே முடக்குவது தவறான அணுகுமுறை. இது, காலப்போக்கில் மாணவர் – ஆசிரியர் இடைவெளியை அதிகரித்து விடும். இந்தக் கோட்பாடு பெற்றோர்களுக்கும் பொருந்தும்.

"பள்ளிக் கூடத்துக்கு யூனிபார்ம் அணிந்து வருவதுதான் முறை. விதம் விதமாக உடைகள் அணி



வதில் தவறு இல்லை. ஆனால் பள்ளிக் கூடத்துக்கு வருவதன் நோக்கம் படிப்பு என்பதை மறந்து விடாதே" என்பேன்.

அதே போல, பிரார்த்தனை பற்றிய

# மாணவர்களை

கேள்விக்கு, உனக்குக் கடவுள் மீது நம்பிக்கை இல்லையெனில் பரவாயில்லை. நீ சும்மா உட்கார்ந்து கொண்டு இரு. மற்ற மாணவர்களின் பிரார்த்தனைக்கு எந்தவித இடைஞ்சலும் செய்யாமல், அமைதியாக இரு. பிரார்த்தனையின்போது, உனக்குப் பிள்ளையாரோ, ஏசுவோ, அல்லாவோ, யார் மீது நம்பிக்கை இருக்கிறதோ அவரை மனத்தில் நினைத்துக் கொள். தியானம் என்பது மீ்தம்

சம்பந்தப்பட்டது இல்லை. அது மனத்தை ஒரு முகப்படுத்தும் பயிற்சி, என்றெல்லாம் சொல்லி, விளக்குவேன். மறுபடியும் சந்தேகம் கேட்டால், பொறுமையாய் இன்னும் விளக்குவேன்.

இதையும் மீறி குதர்க்கமாகப் பேசினால், "நல்ல படிப்பு வேண்டும் என்றுதானே, இந்தப் பள்ளிக் கூடத்தில் சேர்ந்திருக்கிறாய். அப்படியென்றால் இந்தப் பள்ளிக் கூடத்தின் விதிமுறைகளைப் பின்பற்ற வேண்டியது உன்னுடைய கடமை. அதைப் பின்பற்ற விருப்பமில்லாதவர்கள் இந்தப் பள்ளிக் கூடத்துக்கு அவசியமில்லை" என்று சொல்லி விடுவேன்.

தண்டனை. இது பள்ளிக் கூடங்களில் தவிர்க்கப்பட வேண்டிய ஒரு விஷயம். அதே நேரம், தவிர்க்க முடியாத விஷயமும் கூட! பள்ளிக் கூடம் ஆரம்பித்த காலத்தில் எல்லாம், தப்பு செய்கிற மாணவர்களை நான் அடிப்பது என்பது ரொம்ப சகஜமான தண்டனை. இதனால் அப்போது திருமதி ஒய்.ஜி.பி. என்றாலே 'மேடம் டெரர்' என்றுதான் மாணவர்கள் குறிப்பிடுவார்கள். அடிப்பதுதான் எந்தவிதமான தவறு செய்யும் மாணவனுக்கும் ஓர் ஆசிரியர் கொடுக்க வேண்டிய சரியான தண்டனை என்ற கருத்தையே நான் கொண்டிருந்தேன்.

ஒரு மாணவன், பள்ளிக் கூடத்தின் மொட்டை மாடிக்குப் போய், திருட்டுத்தனமாக சிகரெட் பிடித்தான் என்ற தகவல் எனக்கு வந்தது. அந்தப் பையனைக் கூப்பிட்டு மிரட்டி விசாரித்தபோது, அவன் தவறை ஒப்புக் கொண்டான். இரண்டு அடி கொடுத்தேன். இனி சிகரெட் பிடிக்க மாட்டேன் என்று உறுதிமொழி கொடுத்தான் அந்த மாணவன்.

இது நடந்து பல வருடங்களுக்குப் பின், அந்த மாணவனை நான் சந்தித்தேன். (இப்போது அவனது மனைவி எங்கள் பள்ளிக் கூடத்தில் டீச்சர். அவன் குழந்தைகளும் எங்கள் பள்ளிக் கூடத்தில்தான் படிக்கிறார்கள்.) அவன் இப்போதைய தன் உத்தியோகம், வாழ்க்கை இவை பற்றியெல்லாம் குறிப்பிட்டுவிட்டு, கடைசியாக, நான் படித்த போது நான் செய்த தவறுக்காக என்னை சுரீரென்று இரண்டு அடி அடித்தீர்கள். அதை நான் இன்னமும் மறக்கவில்லை" என்றான்.

ஒரு மாணவன் படித்து முடித்து, பல வருட இடைவெளிக்குப் பிறகு என்னைப் பார்த்தபோது, "மேடம்! என்னை ஒரு நாள் அடித்தீர்கள். அன்று எனக்கு உங்கள் மேல் ஆத்திரமாக இருந்தது. ஆனால், அந்த அடிதான் என் வாழ்க்கையைச் சரியான பாதையில் செலுத்தியது. அன்று மட்டும் நீங்கள் எனக்கு தண்டனையளிக்காமல் போயிருந்தால் என் வாழ்க்கை பாழாகியிருக்கும். இன்று இருக்கிற வசதியான, உயர்ந்த நிலையை நான் நினைத்துப் பார்த்திருக்கக் கூட முடியாது" என்று நா தழுதழுக்கக் கூறினான்.

இதுபோன்ற அநேக சம்பவங்கள் பலருக்கு! தான் அடிவாங்கியது மட்டும் ஆழமாக மனத்தில் பதிந்திருக்கும். ஆனால் அதற்கான காரணத்தை மறந்து போயிருப்பார்கள்.

ஆனால் பி.எட்., படித்த பிறகு, தண்டனை குறித்த என் கருத்துகள் அடியோடு மாறிப் போய் விட்டன. தவறு செய்தாலும் கூட, ஒரு மாணவனை அடிப்பது என்பது சட்டப்படிக் குற்றம் என்பதை உணர்ந்து கொண்டு, நான் மட்டுமில்லை; மற்ற டீச்சர்களிடமும் மாணவர்களை அடிக்காதீர்கள் என்று கூறினேன்.

# அடிப்பது சரியா?

அடிப்பது நின்று போயிற்று! ஆனால் அவசியமானபோது தண்டனை தராமல் இருப்பது சாத்தியமா? அதற்கென நான் புதிய உபாயம் ஒன்றைக் கடைபிடிக்க ஆரம்பித்தேன்.

ஒரு மாணவன் தவறு செய்து விட்டால், அதற்கு தண்டனையாக அவனுக்கு ரொம்பப் பிடித்த விஷயம் எதுவோ, அதை அவனுக்கு மறுப்பதே தண்டனை!

உதாரணமாக, மாணவர்களுக்கு மற்ற வகுப்புகளை விட, கேம்ஸ் என்றால் சந்தோஷம்தானே? எனவே, தவறு செய்யும் மாணவர்களுக்கு தண்டனையாக அவர்கள்

திருமதி ஒய்.ஜி.பி.

விளையாட அனுமதி மறுக்கப்பட்டு விடும்.

சில சமயம் லைப்ரரிக்குப் போய் படிக்கச் சொல்லுவேன். இதை தண்டனை என்று நான் கொடுத்தாலும், விளையாட வேண்டிய நேரத்தில், லைப்ரரிக்குப் போய்ப் படித்தால், அவனுக்கும் பயன்தானே!

இன்னொரு முக்கியமான அளவுகோலை யும் நான் வைத்திருக்கிறேன். ஒரு மாண வனுக்கு தண்டனை கொடுக்கிறேன் பேர் வழி என்று அவன் வாழ்க்கையையே பாழடித்து விடக் கூடாது. காரணம், படிக்கிற காலத்தில் மாணவ, மாணவிகள் தப்பு செய் கிறார்கள் என்றால் அதற்குப் பலவிதமான குடும்ப, சமூகக் காரணங்கள் இருக்கலாம். அந்த வயதில் பின் விளைவுகள் என்ன என்று தெரியாமல், அல்லது அவற்றின் பாதிப்புகளின் தீவிரத்தைப் புரிந்து கொள்ளாமல்தான் தப்பு பண்ணி விடு கிறார்கள். எனவே, தவறுக்கான பின்னணி என்ன என்றும் நாம் கொஞ்சம் ஆழமாகப் பார்க்க வேண்டும்.

எங்களுடைய கே.கே. நகர் பள்ளிக் கூடத் தில் நடந்த ஒரு சம்பவத்தை இதற்கு உதாரணமாகக் குறிப்பிடலாம்.

ஒரு மாணவன், ஒரு மாணவி. இரண்டு பேரும் தினமும் காலையில், பள்ளிக்கு வெகு சீக்கிரமாகவே வந்து விடுவார்கள். மாலை யில் ஸ்கூல் விட்டு, வெகு நேரம் கழித்துத் தான் வீட்டுக்குப் போவார்கள். இதற்கு என்ன காரணம் என்றால், இரண்டு பேருக் கும் காதல்!

வேறு எங்காவது பொது இடங்களில் சந்தித்துப் பேசிக் கொண்டால் யாராவது பார்த்து விட்டு, பிரச்னையாகிப் போய் விடுமே என்று பயந்து, சீக்கிரம் பள்ளிக்கு வந்து கொண்டிருந்தார்கள்.

வாட்ச்மேன் லெவலில் ஆரம்பித்து, டீச்சர்களுக்கு விஷயம் தெரிந்தது. என் காதுக்கு வந்தது. நான் அந்த மாணவனையும், மாணவியையும் கூப்பிட்டு அனுப்பினேன். விசாரித்ததில், அந்தப் பெண்ணின் அம்மா மரணத்தின் விளிம்பில் இருந்த நோயாளி. பையனுக்கோ, வீட்டில் முழுச் சுதந்தரம். இரண்டு பேருக்கும் ஒருவித ஈர்ப்பு. இதைத் தான் காதல் என்று நினைத்துக் கொண்டு விட்டார்கள்.

அவர்கள் இருவரிடமும், "நீங்கள் இரண்டு பேரும் படிக்கிற வயசில் இப்படிக் காதல், கத்திரிக்காய் என்று நேரத்தை வீணடித்துக் கொண்டிருக்காதீர்கள். காத லிக்க இதுவல்ல வயசு. இப்போது உங்கள் கவனம் முழுவதும் படிப்பின் மீதுதான் இருக்க வேண்டும். இரண்டு பேருக்கும் ஒரு வரை ஒருவர் பிடித்திருந்ததால், அது ஒன்றும் பெரிய குற்றமில்லை. படிப்பை முடியுங்கள். வாழ்க்கையில் செட்டில் ஆகுங்கள். அப்புறம் இரண்டு பேரும் திருமணம் செய்து கொள்ளுங்கள். அந்த நேரத்தில் ஏதாவது பிரச்னை என்றால் என்னிடம் வாருங்கள். நான் அதைத் தீர்த்து வைக்கிறேன்" என்று சொல்லிவிட்டு, அவர்களின் அப்பாக்களை வரவழைத்தேன்.

அவர்களிடம் விஷயத்தைச் சொன்ன போது படபடப்பானார்கள். நான் அவர் களைப் பொறுமையாய் இருக்கும்படி சொல்லிவிட்டு,

"இந்தப் பெண் இதே பள்ளிக் கூடத்தில் தொடரட்டும். இந்தப் பையனை நுங்கம் பாக்கம் பள்ளிக் கூடத்துக்கு மாற்றி விட லாம். இரண்டு பேரும் உங்கள் குழந்தை களைக் கொஞ்சம் கண்காணியுங்கள். அதே சமயம், தீவிரமான நிபந்தனைகள் போட்டு, அவர்கள் மனத்தில் அந்த நிபந்தனைகளை மீறும் வெறியை ஏற்படுத்திவிடாதீர்கள்" என்று எச்சரித்து அனுப்பி வைத்தேன்.

அந்தப் பையனும் பெண்ணும், வெவ் வேறு பள்ளிகளில் படிப்பை முடித்தார்கள். பையன் தொழிற் கல்வி முடித்துவிட்டு அமெரிக்கா போனான். தான் விரும்பிய பெண்ணையே திருமணம் செய்து கொண் டிருப்பான் என்றுதான் நம்புகிறேன்.

இன்னொரு சுவாரசியமான சம்பவம் சொல்லட்டுமா? எங்கள் பள்ளிக் கூடத்தில் படித்த மாணவன் ஐ.ஐ.டி.யில் படிப்பை முடித்தபின், அமெரிக்காவில் வேலைக்குப் போய்விட்டான். அவனுக்குப் பெண் பார்த் தார்கள். அந்தப் பெண்ணும் எங்கள் பள்ளிக் கூடத்தின் முன்னாள் மாணவி. சென்னை ஐ.ஐ.டி.யில் படித்தவளும் கூட. பையன் பெண்ணின் போட்டோவைப் பார்த்தான் 'அவளும் என்னைப் போலவே பத்மா சேஷாத்ரி, ஐ.ஐ.டியா? அதுபோதும், அவள் தான் என் மனைவி' என்று சொல்லி விட்டான்.

இந்த விஷயத்தை நான் கேள்விப்பட்ட போது, சிரிப்பாகவும் சந்தோஷமாகவும் இருந்தது.

(அடுத்த வாரம் சொல்கிறேன்)





அரிய ஜோதிட குறிப்புகளுடன்

**பிரமாதி வருஷத்திய**

**சர்வ முகூர்த்த பஞ்சாங்கம்**

விஞ்ஞான வானியல் விதிகளின்படி

**"காலம் உங்கள் கையில்"**

**"ஜோதிட ஆராய்ச்சி மையம்"**

**A.M. ராஜகோபாலன்**

அவர்களால்

புகழ்பெற்ற பண்டைய ஆரிய சூரிய சித்தாந்த நூல்களை ஆதாரமாகக்கொண்டு கணிக்கப்பட்டது குறைந்த பிரதிகளே அச்சிடப்படுவதால் முன் பணம் அனுப்புபவர்களுக்கு மட்டுமே பஞ்சாங்கம் அனுப்பி வைக்கப்படும்.

ரூ. 45/-க்கு M.O. அல்லது D.D. அனுப்ப வேண்டிய முகவரி:

**ஆனந்த நிலையம்**

முதல் மாடி, 29/5, ரங்கநாதன் தெரு, தி.நகர்,
சென்னை - 600 017. போன் : 4346242, 4333435



**ALL INDIA INSTITUTE OF MANAGEMENT STUDIES**



No. 29, Lazarus Church Road,
R.A. Puram. Chennai - 600 028.
Phone: 044 - 4933210,
Fax: 044 - 4933259.
e-mail:aiimas@hotmail.com

Offers the following Six Months Diploma Courses by Correspondence (Distance Education Programme). Each Diploma Course has 4 Written Papers

**DIPLOMA IN**

- BUSINESS MANAGEMENT
- BUSINESS ADMINISTRATION
- SALES & MARKETING
- ADVERTISING & PUBLIC RELATIONS
- INTERNATIONAL BUSINESS MGMT.
- PERSONAL MANAGEMENT & INDUSTRIAL RELATIONS
- TOTAL QUALITY MGMT. & ISO 9000
- INTERNAL QUALITY AUDITING & QS 9000 / ISO 9000
- FINANCIAL MANAGEMENT
- INTERNATIONAL MARKETING MGMT.
- NETWORKING & INTERNET APPLICATION
- MGMT. INFORMATION TECHNOLOGY
- QUALITY ASSURANCE & QS 9000/ISO 9000
- PRODUCTION MANAGEMENT
- MATERIALS MANAGEMENT
- EXPORT AND IMPORT MGMT.
- ENVIRONMENTAL MANAGEMENT & ISO 14000 / 14001
- MASS COMMUNICATION
- HUMAN RESOURCES DEVELOPMENT
- OFFICE ADMINISTRATION
- QUALITY CONTROL & ISO 9000
- HOSPITAL ADMINISTRATION
- TEACHER TRAINING EDUCATION
- INTERNATIONAL AIRLINES MGMT.

(Affiliated / Recognised by Westwind Aviation Academy, Arizona, USA)

ELIGIBILITY: No formal Qualification (Open Education System) Minimum Age: 16 years. **Course Fee Rs.800/-** Course Fee includes supply of Study Materials & Question Bank Book. **Medium of Study Materials & Examination** - English/Hindi. Examination will be held at about 60 centres all over india. **Prospectus & Study Materials are available both in Hindi & English.** Application & Prospectus are also available on internet: WWW.AIIMAS.COM. **For Application & Prospectus send Rs. 25/- D.D./I.P.O./M.O. in favour of the above Institute.**



• கில்

வகிக்கும் என்று இப்போதே டெல்லியில் பேசப்படுகிறது. அநேகமாக எல்லா மாநிலங்களிலும் ஏற்பட்டுவிட்ட இரு கூறு அரசியல் (political polarisation) தமிழகத்தில் இன் னும் ஏற்படவில்லை.

"இந்நிலையில் தமிழ்நாட்டில் ஏற்படப் போகும் அணிகள் மீண்டும் தேசிய அரசியலை நிர்ணயம் செய்யும். பி.ஜே.பி. அல்லது காங்கிரஸ் வட இந்திய அரசியல் களத்திலேயே பெரும்பான்மை பெற்று வராதபட்சத்தில், தமிழகம் மீண்டும் ஒரு அரசின் தலைவிதியை நிர்ணயிக்கும் நிலையிலிருக்கும்" என்றார் வாஜ்பேயின் ஆலோசகர் அஷோக் டன்டன்.

பி.ஜே.பி. தமிழகத்தைப் பொறுத்த வரை இப்

# தேர்தல் நடத்த நிதி

போது மூன்று நிலைகளுக்குத் தயாராகி விட்டது என்றார் டான்டன் :

அ.தி.மு.க., சோனியா கட்சி, இடதுசாரிகள் ஒன்றாக இணைந்தால் தி.மு.க. த.மா.கா. உறவு தொடரலாம். இதில் பி.ஜே.பி. ஒதுக்கப்படலாம். அச்சந்தர்ப்பத்தில் பி.ஜே.பி. – ம.தி.மு.க. ஒன்றாகி, பா.ம.க. கூட அ.தி.மு.க. அணிக்குத் தாவிவிடும் என்று பாரதிய ஜனதா உட்கட்சிக் கூட்டம் கணித்திருக்கிறது.

"எப்படியிருந்தாலும் தேர்தலுக்குப் பிறகு இக்கட்சிகளில் பெரும்பான்மையானவை, பி.ஜே.பி. அதிக இடங்கள் பெற்று ஆட்சி அமைக்கும் நிலையில் இருந்தால் எங்களை ஆதரிக்கும்" என்று இப்போதே தாங்கள் அனுமானித்திருப்பதாகக் கூறினார்.

ஆந்திராவில் தெலுகு தேசத்திற்கும் இ. காங்கிரஸுக்கும் இடையேதான் போட்டி. அதே போல் கேரளாவில் வழக்க மாக இடது முன்னணிக்கும், காங்கிரஸ் முன்னணிக்கும் போட்டி. அஸ்ஸாம்

தி.மு.க. – இடதுசாரிகள் அணி உடைந்த பிறகு, கம்யூனிஸ்டுகள் இப்போது அ.தி.மு.க.வுடன் அணி சேரப் பேச்சு வார்த்தைகளைத் துவக்கியிருக்கின்றனர்.

மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக் காரியதரிசி ஹர் கிஷன் சிங் சுர்ஜீத் பாராளுமன்றம் கலைக்கப்பட்ட அன்றே ஜெயலலிதாவைச் சந்தித்து, காங்கிரஸ் அல்லாத ஒரு அ.தி.மு.க. அணியில் கம்யூனிஸ்ட்கள் பங்கேற்பது பற்றிப் பேசினார். இதற்கு வலது கம்யூனிஸ்டுகளின் ஆதரவு இருப்பதாகத் தெரியவில்லை.

ஒருவேளை சோனியா கட்சியும் அ.தி.மு.க.வும் அணி அமைத்தாலும் மார்க்ஸிஸ்டுகள் அவர்களுடன் இணையத் தயாராக இருப்பதாகத் தெரிகிறது.

பிரதம தலைமைத் தேர்தல் ஆணையர் எம்.எஸ். கில்லைச் சந்திக்க வந்த ஜெயலலிதா, அணிகள் பற்றி இப்போதே பேசுவது pre-matured என்று கூறினார்.

ஆனால், தமிழக அரசியல் நிலைமை தான், வரும் தேர்தலிலும் முக்கியப் பங்கு

போன்ற மிகச் சிறிய மாநிலங்களில் கூட இரு முனைப் போட்டி- அஸ்ஸாம் கண பரிஷத் - காங்கிரஸ்.

இப்போது அரசியலின் அதி முக்கியப் போர்க்களமான உத்திரப்பிர தேசம் மும்முனைப் போட்டிக்குத் தயா ராகிறது. சோனியா - மாயாவதி நல்லுற வைத் தொடர்ந்து, அவ்விரு கட்சிகள் ஓரணியிலும், பி.ஜே.பி. ஓரணியாகவும், முலாயம் சிங் மூன்றாவதாகவும் களத்தில் இறங்குவர் என எதிர்பார்க்கப்படுகிறது.

இரண்டாவது முக்கியமான மாநில மான பீஹாரில் லாலுபிரசாத் - சோனியா ஓரணியிலும், பி.ஜே.பி - சமதா கட்சி எதி ரணியிலும். உ.பி.யும் பீஹாரும் இணைந்து எக்கட்சியைப் பெருவாரியாக ஆதரிக் கிறதோ அக் கட்சிக்குத் தான் டெல்லி சிம்மாசன மென்பதால், அவ்விரு மாநிலங்களி லும் கடும் போட்டி நிலவும்.

# பற்றாக்குறை!


• லாலு


• சோனியா


• ஜெ


• முலாயம்

அங்கு எல்லாக் கட்சிகளும் தங்கள் ஸ்தானத்தைத் தக்க வைத்துக் கொண்டாலோ, மீண்டும் தமிழகம் தரும் தீர்ப்பு முக்கியமானதாக அமையும்.

வாக்காளர் பட்டியல் தயாராக ஜூலை ஆகிவிடும் என்று தேர்தல் கமிஷன் அறி வித்திருக்கிறது. பின், ஒரு மாதம் நோட்டிஃபிகேஷன் போன்ற விதி முறை கள் இருக்கின்றன.

"சொல்லப் போனால் நாங்கள் இந் நிலைக்குத் தயாராகவேயில்லை" என்றார் தலைமைத் தேர்தல் ஆணையர் எம்.எஸ். கில். மே முதல் வாரத்தில் தமது அமெரிக்கச் சுற்றுப்பயணத்திலிருந்து திரும்ப வேண்டி யவர், பாராளுமன்றம் கலைக்கப்பட்ட ஞாயிறு இரவே வரவழைக்கப்பட்டார்.

திங்களன்று ஜனாதிபதியைச் சந்தித்து விட்டுப் பத்திரிகையாளர்களிடம் பேசிய கில், "சுமார் 650 மில்லியன் வாக்காளர்கள் கொண்டு உலகிலேயே மாபெரும் ஜன நாயக நாடாகத் திகழும் நம் தேசத்தில் இப்படி அடிக்கடித் தேர்தல்கள் என்பது துர்பாக்கியமானது. ஆனால் அந்தத் துரதி ருஷ்டத்திற்கு நாங்கள் இப்போது தயாராக வேண்டிய கட்டா யம்" என்றார்.

## தலைநகர் தபால்

வாக்காளர் பட்டி யல் திருத்தத்தில் இப்போது பல குழப்பங்கள் வரலாம் என்று தேர்தல் ஆணையத்தில் அஞ்சப்படுகிறது. ஜூலைக்குள் இது முடியாவிட்டால் பழைய பட்டியலின் அடிப்படை யிலேயே தேர்தல் நடத்தப் படவேண்டும். ஏனெனில் காபந்து அரசின் ஆறு மாத இறுதிக்குள் புதிய அரசு அமைக்கப்பட வேண்டியது நிர்ணய சாசனத்தின் கட்டாயம். அப்படிப் பழைய பட்டியலின் அடிப்படையில் தேர்தல் நடத் தப்பட்டால் புதிதாக வாக்களிக்கத் தகுதி பெற்றிருக்கும் லட்சக்கணக்கானோருக்கு இந்த அடிப்படை ஜனநாயக உரிமை மறுக் கப்பட்ட கேலிக்கூத்து நடந்து விடும்.

கில் கூறியதில் முக்கியமானது, இப் போதைக்குத் தேர்தல் ஆணையத்தின் செலவுக்குப் பணப்பற்றாக்குறை. இந்நிலை யில் இன்னும் கோடிக்கணக்கான செலவில் தேர்தல் நடத்த வேண்டிய கட்டாயம்.

ஆக மொத்தத்தில் ஒரு குழப்பமான நிலையில் மீண்டும் தேர்தல்.

தேர்தல் முடிவேனும் குழப்பத்திற்கு இடம் தராமல் அமைந்தால் சரி!

— டெல்லி வெங்கட்

## சுமி

## சூப்பர்மார்க்கெட்

'நவீனத் தமிழின் நாயகியே, நானிலம் வியக்கும் காரிகையே, வாரா வாரம் ஜோக்கைக் கடைசி பேராவாகத்தான் வெளியிட வேண்டுமா?'ன்னு கேட்டிருக்கார் கல்லிடைக்குறிச்சி சிவகுருநாதன். (ஸார் தமிழ் பண்டிட்டா?) அப்படியொண்ணும் சட்டம் இல்லை. இந்த வாரம் ஜோக்கோடவே ஆரம்பிக்கலாம்.

ஒரு ரயில் படு ஸ்பீடா போயிட்டிருந்தது. ட்ரைவர் ஒரு சர்தார்ஜி. திடீர்னு ரயில் தண்டவாளத்தை விட்டு இறங்கி, வயல் மேல அஞ்சு நிமிஷம் ஓடிட்டு மறுபடி ட்ராக்குக்கு வந்துடுச்சி.

ஜனங்களுக்கு உயிர் போய் வந்தாப்பல ஒரு இது.

அடுத்த ஸ்டேஷன்ல வண்டி நின்னதும் மக்கள் ரயில்வே போலீஸ்ல விஷயத்தைச் சொல்ல, "ஏன்யா, அறிவிருக்கா உனக்கு?"ன்னு ஆரம்பிச்சி, தலைக்குத் தலை சர்தார்ஜியை லெஃப்ட் அண்ட் ரைட் டோஸ் விட்டாங்க.

"நான் ஒண்ணும் வேணும்னே செய்யலை. திடீர்னு தண்டவாளத்துக்கு நடுல ஒரு ஆள் வந்து நின்னுட்டான்"னு பதில் சொன்னார் சர்தார்ஜி.

"ஒரு ஆள் உயிரைக் காப்பாத்த, இப்படி ஆயிரம் பேரை பலி கொடுக்க இருந்தியே? அந்த ஒருத்தனை அடிச்சிப் போட்டுட்டுப் போக வேண்டியதுதானே?"

"எனக்கும் அதுதான் தோணிச்சி. அதைச் செய்ய முடிவெடுத்தப்பதான் அவன் வயல்ல இறங்கி ஓட ஆரம்பிச்சான்!"

சிரிச்சுட்டீங்கன்னா, லாவண்யாவுக்கு மனசுக்குள்ள ஒரு தேங்ஸ் சொல்லிடுங்க.

• • •

ரொம்ப அழகா 'ஹரிகிருஷ்ணன்ஸ்' படத்தைப் பத்தி ஒரு விமர்சனம், பழைய ஹைகூ கவிதைகளைக் காப்பியடிச்சி வர்ற புதுக் கவிதைகள் பத்தி விழிப்புணர்வு கோஷம், 'உன்' பத்திரிகைலேர்ந்து ஒரு நல்ல கவிதை, சில சுமாரான ஜோக்ஸ்னு வெரைட்டியா நாலு பக்கம் அனுப்பியிருக்கற மிஸ்ஸோ, மிஸ்டரோ, அதனோட கடைசிப் பக்கத்தை அனுப்ப மறந்துட்டதால கன்டின்யுடி உதைக்குது. ஊர், பேரும் தெரியலை. என்னதான் சுமிக்கு எழுதறதுல ஒரு பரவசம் வந்து ஒட்டிக்கும்னாலும் இப்ப ரெண்டு சாம்பிள் கூட எடுத்துக் காட்ட முடியலையே? மாண்புமிகு மிஸ்டர்/மிஸ் எக்ஸ் அந்த கடைசிப் பக்கத்தை உடனே அனுப்பி வைக்கவும்.

• • •

கல்கில மறுபடியும் 'பொன்னியின் புதல்வர்' தொடர் வரணும் (திருச்செங்கோடு இனியன் செல்வகுமார்); பொன்னியின் செல்வன் முடிஞ்சதும் டி.கே.சி எழுதிய கம்பராமாயணக் கட்டுரைகளை வெளியிடணும் (சுப்பிரமணிய சாஸ்திரிகள், ஊர் பேர் தெரியலை); நா.பா.வோட மணி பல்லவத்தை மறுபடி போடணும் (சா. வீணா, மடிப்பாக்கம்)

இதெல்லாம் என்ன? இதுக்கெல்லாம் கல்கி எடிட்டர்ட்ட ரெகமண்ட் பண்ணச் சொல்லி எனக்கு அப்பப்ப வர்ற லெட்டர்ஸ் சிலதோட சாரம். ரொம்ப நாளா பதில் சொல்லாம சேர்த்து வெச்சிட்டே வரேன். இப்ப சொல்லிடறேன்.

1. இந்த மாதிரி அழியாப் புகழ் விஷயங்களெல்லாம் புஸ்தகமா கிடைக்கும். மறுபடி தொடரா வரணும்னு வெயிட் பண்ணாம, வாங்கி, சூடா படிச்சிடலாம். காசு கொடுத்துப் புஸ்தகம் வாங்கற பழக்கம் வெச்சுக்கிட்டா, அடுத்த ஜென்மத்துல தேவதையா பிறக்கற சான்ஸ் இருக்கும்.

2. ரீ பப்ளிஷ் பண்றதுக்கு ரெகமண்ட் பண்ற சமாசாரமெல்லாம் என் சமஸ்தான எல்லைக்குள்ள (ரெண்டு பக்கம்) வராதது.

வயலில்



# இறங்கிய மயில்!

3. ஒரு வருஷ சூப்பர் மார்க்கெட் மெடீரியல்லை புக்கா கொண்டு வரணும்னு ஏன் இனியன் செல்வகுமாரும் சுப்ரமணிய சாஸ்திரியும் சா. வீணாவும் கேட்கலை?

• • •

**சு**மி ரசிகர் மன்ற கலாக்ஷேத்ரா காலனி கிளைத் தலைவர் ராமமூர்த்தி எழுதின லெட்டர் பத்தி இரண்டு வாரம் முன்னாடி சொன்னேன். ஹம்சத்வனி சபா செக்ரடரிக்கு ஐடியா கொடுத்து கல்கி நூற்றாண்டு சிறப்புக் கச்சேரிக்கு ஏற்பாடு பண்ணிட்டார் ராமமூர்த்தி.

அவர் நினைச்சா மாதிரி தமிழ்ப் பாட்டுக்கு 33 பர்சன்ட் ரிசர்வேஷன் கொடுக்கலை அன்னிக்குப் பாடின விஜய் சிவா. ஆனால் தனியாவர்த்தனத்துக்கப்புறம் ஃபுல்லா கல்கி பாட்டே பாடினார். அதுல இரண்டு பாட்டு இதுவரைக்கும் நான் கேட்டதில்லே... பாரதியாரைப் பத்தி கல்கி எழுதின தெய்வத் தமிழ் நாட்டினிலே பாடுறதுக்கு முன்னாடி பாடின விருத்தம்: 'காரிருளில் கிடந்துழன்ற காலமெல்லாம் கனவெனவே சென்றதுகாண்' – ரொம்ப த்ரில்லிங்!

கேட்காத இன்னொரு பாட்டு 'செங்கனி வாயில்...' ஆனா இதை சிவகாமியின் சபதத்தில படிச்சிருக்கேன். எடிட்டர்கிட்டே வந்து சொன்னப்போ, ரொம்ப இன்ட்ரஸ்டிங்கா ஒரு விஷயம் காட்டினாங்க – கல்கியோட கையெழுத்துல இந்த செங்கனி வாயில் பாட்டு! அது ஃபர்ஸ்ட் டிராஃப்ட்டாயிருந்திருக்கும் போலயிருக்கு.... சிவகாமியின் சபதத்துல வர்றது அதுலேயிருந்து 20 பர்சண்ட் வித்தியாசமாயிருக்கு... மேடையில பாடினது 50 பர்சன்ட் வித்தியாசமா யிருந்தது! ஒரு எழுத்தாளர் எப்படி தன்னோட எழுத்தையே திருத்தி திருத்தி மெருகேத்தலாம்னு புரிஞ்சுக்க முடிஞ்சுது. கிரியேடிவிடியோட சுய எடிடிங்கும் கை கோத்துக்கும்போது தனி அழகு. கல்கியோட எழுத்துல இருக்கற இந்த காம்பினேஷன் விஜய் சிவா பாட்டுலேயும் இருக்குன்னு நான் நினைக்கறேன். அதனாலதான் எமோஷனல் ரிச்னஸ் இருந்தாலும் ஒரு நீட்னஸ் கிடைக்குது அவர் கச்சேரில.

அன்னிக்கு இன்னொரு சர்பிரைஸ்: சீஃப் கெஸ்ட், ஹிந்துவிலே ஸ்பெஷல் கரஸ்பான்டன்டாயிருக்கற கௌரி ராம்நாராயண். அழகா தமிழ்ல ஸ்பீச் கொடுத்து கல்கியோட பேத்தின்னு ப்ரூவ் பண்ணிட்டாங்க! வழக்கமா இங்கிலீஷ்ல பேசற ராமச்சந்திரன்கூட அன்னிக்கு தமிழ் ஸ்பீச்தான் கொடுத்தார்! அந்த வகையில பார்த்தா, தமிழுக்கு 33 பர்சன்ட்டுக்கு மேலயே ஒதுக்கீடு ஆயிடுச்சு...! சந்தோஷம்தானே ராமமூர்த்தி சார்...?

— சுமி

# நெத்தியடி பதில்!

✉ 'ஊழல் + ஊழல்' தலையங்கம் சரித்திரச் சிறப்புவாய்ந்தது. இன்றைய அரசியல் சீர்கேடுகளை சிறிதும் அச்சமின்றி மக்களுக்கு எடுத்துக்காட்டி, அதிகாரக் கும்பலின் அரசியல் விளையாட்டு, நாட்டை எத்தகைய கீழ்நிலைக்குக் கொண்டு செல்லக்கூடும் என்பதைத் தெளிவாக விளக்கியுள்ளீர்கள். தங்களுடைய கருத்துகள் பெரும்பாலான மக்களின் மனத்தில் ஏற்பட்டுள்ள எண்ணங்களின் பிரதிபலிப்பு என்பது உண்மை.
சென்னை – 34, டி.கே. சுப்ரமணியன்.

✉ தாம் வகித்த பதவியின் மானத்தைக் கப்பல் ஏற்றி விட்ட மாஜி கடற்படை தளபதி விஷ்ணு பகவத் அதிகார வெறியில் நடத்திய ஆணவ லீலைகளை அம்பலப் படுத்தி விட்டீர்கள். மதவாதத்தை மட்டும் மைனஸ் பண்ணி விட்டுப் பார்த்தால் வாஜ்பாய் ஆட்சியின் நடவடிக்கைகள் அனைத்துமே பாராட்டுக்குரியவையாகத்தான் இருந்திருக்கிறது என்பதற்கு பகவத் பிரச்னை ஓர் எடுத்துக்காட்டு!
நெல்லையப்பபுரம், டி. செல்வன்.

✉ உயர் கல்வியைத் தமிழ் மூலம் படித்தவர்களுக்குத் தமிழ்நாட்டிலேயே வேலை வாய்ப்பு உறுதி என்ற உத்தரவாதம் இல்லாத பட்சத்தில் ஆங்கிலத்தைப் புறக்கணிப்பது வடிகட்டிய முட்டாள்தனம் என்ற தங்களின் நெத்தியடியான பதில் அருமை.
சென்னை – 84, ஜோ. பன்னீர்செல்வம்.

✉ 'ஆங்கிலத்தைப் புறக்கணிப்பது வடிகட்டின முட்டாள்தனம்' என்று தராசு குறிப்பிட்டுள்ளது மிகவும் வருந்தத்தக்கதாகும். தமிழ்நாட்டில் – ஆட்சியில் – கல்வி நிலையங்களில் – தமிழுக்குச் சம உரிமை வேண்டுமென்று கேட்டுத்தான் இந்தப் போராட்டம். தமிழார்வலர்களோ அல்லது தமிழறிஞர்களோ, யாருமே ஆங்கிலம் உட்பட எந்த மொழிக்குமே பகைவரல்லர்; ஆங்கிலத்தைப் புறக்கணிப்பது என்ற பேச்சுக்கே இடமில்லை. தமிழ் நமக்கு ஒரு முகவரி; அடையாளம். நம் அடிப்படை உரிமைக்காக நாம்தானே போராட வேண்டும்? மொழியழிந்தால் இனமே அழிந்து விடுமே! எனவே மொழிச் சீரழிவும், பண்பாட்டுச் சீரழிவும் வருமுன்னர்க் காப்பதற்காகவே போராட்டம்.
கரூர், சி. இராமச்சந்திரன்.

✉ சோனியா காந்தி இப்பொழுதுதான் அரசியலுக்கு வந்திருக்கிறார். அவர் என்ன ஊழல் செய்தார்? போஃபர்ஸ் பீரங்கியில் பெரும் ஊழல் நடந்திருப்பதை, ராஜீவ் காந்திக்குப் பின் ஆட்சியைப் பிடித்தவர்கள் ஏன் விசாரணைக்கு எடுத்துக் கொள்ளவில்லை? யார் தடுத்தார்கள்? இன்றைய இந்திய அரசியலில் ஊழல் இல்லாத அரசியல் கட்சியும் அரசியல்வாதியும் இருந்தால் காட்டுங்கள் பார்க்கலாம்?
சென்னை – 5, ஏ.என்.எஸ். மணியன்.

✉ அட்டைப் படமும் உள்ளே தலையங்கமும் பார்த்தேன். அமரர் கல்கி இன்று நம்மிடையே இருந்திருந்தால் இது மாதிரிதான் நடுநிலையான, பயமில்லாத ஒரு தலையங்கம் எழுதியிருப்பார். என்னைப் போன்ற எண்ணற்ற வாசகர்களின் நிலையை மிக நன்றாகப் பிரதிபலித்து விட்டீர்கள்.
ஹைதராபாத், எஸ். கோபாலன்.

✉ தகழி சிவசங்கர பிள்ளை அவர்களின் மறைவிற்குத் தாங்கள் செலுத்திய அஞ்சலி, உயர்தரமான இலக்கியச் சேவை. 'மாத்தனின் கதை' சிறுகதை மட்டுமல்ல; ஓர் ஏழைக் குடும்பத்தின் சொல்லொணாத் துயரினை வெளிப்படுத்திய விலைமதிப்பற்ற வரலாற்றுக் காவியமும் ஆகும்!
திருச்சி, எம். காம்ராஜ்.

✉ ரஜினியே சிந்திக்கும்படி படையப்பாவுக்கு விமர்சனம் செய்த கல்கிக்குப் பாராட்டுகள்.
தூத்துக்குடி – 2, சிவராமசுப்பிரமணியன்.

வட்டமேஜை

ஓம் ஸ்ரீ ராமஜெயம்

# குடும்ப க்ஷேமத்திற்கு உதவும் பொக்கிஷ நூல்கள்

| பொக்கிஷ நூல்களின் விபரம் | விலை |
|---|---|
| ஸ்ரீமத் வால்மீகி ராமாயண ஸாரம் | ரூ. 180/- |
| ஸ்ரீ சுந்தர காண்டம் (2 பகுதிகளும்) | ரூ. 100/- |
| ஸ்ரீமத் பகவத்கீதை | ரூ. 60/- |
| ஸ்ரீமத் பாகவதம் (2 பகுதிகளும்) | ரூ. 86/- |
| ஸ்ரீமந் நாராயணீயம் | ரூ. 85/- |
| ஸ்ரீ தேவீ பாகவதம் (3 பகுதிகளும்) | ரூ. 150/- |
| ஸ்ரீ தேவீ மாஹாத்மியம் | ரூ. 40/- |
| மொத்தம் | ரூ. 701/- |
| சிறப்புத் தள்ளுபடி 10% | ரூ. 71/- |
| நிகர விலை | ரூ. 630/- |

மேற்கண்ட இந்நூல்கள் யாவும், சமூக சேவையில் சாதனையைப் படைக்கின்ற ஸ்ரீ ராமகிருஷ்ணா மடத்தின் மிகச் சிறந்த வெளியீடுகளாகும்.

தபாலில் பெற விரும்புவோர், நூல்களுக்கான நிகர விலையுடன், பதிவுத் தபால் செலவிற்காக ரூ.40/- கூடுதலாக சேர்த்து "Narayana Book Centre" என்ற பெயரில் வங்கி வரைவோலை (Crossed Demand Draft) (அ) மணி ஆர்டர் (Money Order) மூலமாக எங்கள் முகவரிக்கு அனுப்பி வைக்கவும். புத்தகங்கள் உடனடியாகவும், பத்திரமாகவும் அனுப்பி வைக்கப்படும்.

- ★ தெய்வங்களின் புகழையும், கல்யாண குணங்களையும் போற்றிப் பேசக்கூடிய நூல்கள்
- ★ பூஜை அறையில் இருந்தாலே குடும்ப க்ஷேமத்திற்கு உதவும் நூல்கள்
- ★ மனத்திற்கு அமைதியையும், நிம்மதியையும், மகிழ்ச்சியையும் கொடுக்கக்கூடிய நூல்கள்
- ★ நம்பிக்கையுடன் கூடிய பக்தியோடு இந்நூல்களைப் படிப்பவர்கள், பாராயணம் செய்பவர்களின் இல்லங்களில் வறுமை நீங்கும், தடங்கல்கள் அனைத்தும் நீங்கும், ஸ்ரீ மஹாலக்ஷ்மியின் அருளால் செல்வங்கள் சேரும். திருமணங்கள் நிகழும், புத்திர பாக்கியங்கள் ஏற்படும், வியாதிகள் அகலும், தீர்க்க ஆயுள் உண்டாகும், தெய்வ அருளால் வேண்டுவோர் வேண்டுவன பெறுவர். சுருக்கமாகச் சொல்ல வேண்டுமானால் பிறவியின், வாழ்க்கையின் பயனை அடைவதற்கு உதவும் நூல்கள். இவைகள் யாவும் நூல்களின் பலச்ருதிகளில் சொல்லப்பட்டவை. பெரியோர்களால் அனுபவித்துக் கூறப்பட்ட உண்மைகள்.

தொடர்பு கொள்ளவேண்டிய முகவரி : **நாராயணா புக் சென்டர்**

A.R.R. காம்ப்ளக்ஸ், 141, வடக்கு உஸ்மான் சாலை, தி. நகர், சென்னை - 600 017. தொலைபேசி : 827 33 55

KS&Co

# SPECIAL OFFER!
## YOUR CHOICE!

KS&Co

ஒவ்வொருமுறையும் ரூ 500க்கு மேல் பொருட்கள் வாங்கும் வாடிக்கையாளர்களுக்கு 500 கிராம் உடைத்த கடலை அல்லது 1000 கிராம் சர்க்கரை இலவசம்.

*தரமான அரிசி, பருப்பு வகைகள் மற்றும் அனைத்து டிபார்ட்மெண்ட் பொருட்களும் வாங்க சிறந்த இடம்*

# K. SUBRAMANIAM & Co

விரைந்திடுவீர் இச்சலுகை மே 31.1999 வரை மட்டுமே

BRANCHES

47, SOUTH WEST BOAG ROAD © 4337516 / 4337526

& 21. NATESAN STREET, T.NAGAR, CHENNAI -17 © 4345522 / 4341188

1, SINGARA GARDEN II^nd STREET, WASHERMENPET, CHENNAI - 21 © 5953894 / 5953822

VISA & MASTER CREDIT CARDS ACCEPTED

ஓர் ஆட்சி கவிழ்ந்து, பிறிதொன்று பதவி ஏற்றதென்றால், அவர்களது திட்டங்களை எல்லாம் அப்படியே அரையும் குறையுமாக அள்ளிக் குப்பைக் கூடையில், இவர்கள் போடுவது மரபாயிருந்து வந்தது. இப்போது இன்னும் ஒரு படி மேலே! ஒரே ஆட்சியில், ஒரே கட்சியைச் சேர்ந்த வெவ்வேறு நபர்கள் நாற்காலிக்கு வந்தாலே, 'கச்சடா டப்பா' வைத் தேட ஆரம்பித்து விடுகிறார்கள்! பாருங்களேன், மனோகர் ஜோஷி 'ஜீன்கா பாகர்' (ஒரு ரூபாய் உணவு) திட்டத்தை ஆரம்பித்தார். நாராயண் ராணே அதற்கு முற்றுப் புள்ளி வைத்தார். மேயர்-இன்-கவுன்சில் திட்டம் ஜோஷியின் மூளையில் உதித்தது. இவர் அதற்குச் சமாதி அமைத்தார். 'மாய் மராத்தி' என்றொரு முழு மராத்தி சானலுக்கு அவர் பச்சைக் கொடி காட்டினார். இவர் சிவப்பு விளக்கை ஏற்றி விட்டார். லோனாவாலா அருகில், சஹாரா க்ரூப்காரர்களின் 'சஹாரா லேக் ஸிடி' என்ற மலைவாசஸ்தலத் திட்டத்துக்கு ஜோஷி ஓ.கே. சொன்னார். இவர் 'நோ... நோ...' என்று இழுக்கிறார். இப்படியே போனால்... ஐயையோ... திரும்பிய இடமெல்லாம் "மனோ ஹர"மான ஃப்ளைஓவர்கள்... காப்பாற்று வாயா 'நாராயணா'?

## சிவாஜி ராஜ்ஜியம்!

சந்து பொந்து, இண்டு இடுக்கு என்பதில் ஆரம்பித்து, 'சத்ரபதி சிவாஜி' பெயரில் ஒரு ரயில்வே ஸ்டேஷன், ஏர்போர்ட், எல்லாவற்றையும் நாமகரணித்தாகி விட்டது! அடுத்து, 70கோடி செலவில், கோரேகானிலுள்ள ஃபிலிம் சிடிக்கருகில், சிவாஜி நினைவாக, அவர் காலத்துக் கோட்டை ஒன்றை நிர்மாணிக்கப் போகிறார்களாம்! இதெல்லாம் சிவாஜி ராஜ்ஜியத்தை நிலை நிறுத்தப் போதுமோ என்னவோ என்ற சந்தேகத்தில், இன்னும் கொஞ்சம் 'ஆழமாக' சிந்தித்திருக்கிறார்கள். அதன் பயனாக, இனி 'பெஸ்ட்' பஸ்களிலெல்லாம் காவி நிற பெயிண்டை அடிக்கப் போகிறார்கள்! சிவாஜி காலத்தில் பயணிப்பதாக மக்களுக்கு ஒரு சிலிர்ப்பை ஏற்படுத்த! அடுத்தபடியாக, முதல்வருக்கு சிவாஜி உடையை மாட்டிவிட்டு, கையில் வீரவாளையும் கொடுத்து நாற்காலியில் - மன்னிக்கவும் - சிம்மாசனத்தில் உட்கார்த்துவார்களோ? 'இதுதான் சிவாஜியின் ஆட்சி' என்று மக்கள் அப்போதாவது நம்பமாட்டார்களா என்ன?

## வசூல் சக்கரவர்த்தினிகள்!

'நம்பர் 6', 'சக்கா', 'வெள்ளிக்கிழமை அழகிகள்' இப்படி எல்லாம் மும்பைக்காரர்களால் அழைக்கப்பட்டவர்களுக்கு, ஒரு புதுப் பெயரைச் சூட்டியிருக்கிறார் மாதுங்கா வாசியான பி.ஆர். ஷெட்டி! அதுதான் "ரிகவரி ஆபீசர்கள்"... ஆம்! அலிகளின் பணம் பறிக்கும் சாதுர்யத்தை இவர் சாமர்த்தியமாகப் பயன்படுத்திக் கொண்டிருக்கிறார். பாக்கிகளை வசூலித்துத் தருவதற்கென்று இவர் நியமித்திருக்கும், ஆறு பேர் கொண்ட அலிப் படை, தனது அயராத உழைப்பால், இவரது 'யூனீக் ரிகவரீஸ்' நிறுவனத்திற்கு, இதுவரை ஐந்து லட்சம் ரூபாயை வசூலித்துத் தந்திருக்கிறதாம்! சித்தா காம்ப்பைச் சேர்ந்த மீனா, ப்ரியா, கரிஷ்மா, சப்னம், தில்னாஸ் என்ற அறுவருக்கும் 'ரிகவரி ஆபீசர்' என்ற ID கார்டெல்லாம் கொடுத்திருக்கிறார்கள்! இவர்களது வெற்றியால் கவரப்பட்டு, சவுத் இண்டியன் கோ-ஆபரேடிவ் பாங்க், தங்களது பாக்கிகளை வசூலிக்கும் காண்ட்ராக்டை இவர்கள் நிறுவனத்திற்கே அளித்திருக்கிறதாம்!

## க(ப்)பில் சாதனை

'ஏதேது? வர்ல்ட் கப் வந்தாலும் வந்தது; சாதனை மேனியா ரொம்பத்தான் தலைக்கேறிவிட்டது! பாடத் தெரிந்த

**மும்பை மசாலா**



# ராணிகளே!

வர்கள் ஒருவர் பாக்கி இல்லாமல், கிரிக்கெட் வீரர்களை ஊக்குவிக்கவென்று பாடித் தள்ளுகிறார்கள். அபிஜித், கவிதா கிருஷ்ணமூர்த்தி, உஷா உதுப், சுரேஷ் போஸ்லே இவர்களெல்லாம் பாடிய எட்டுப் பாடல்கள் அடங்கிய, 'கிரிக்கெட் மேரி ஜான்' என்ற ஆல்பம் ஒன்றை HMV, TWI உடன் இணைந்து வெளியிட்டிருக்கிறது. இரண்டுக்கு, 'வீடியோ இன்ஸ்பெக்டும்' உண்டு! ஒன்றில், சௌரவ் கங்குலி கனவு காண, கேகே இசைக்கிறார், 'ஜோஷ் ஆஃப் இண்டியா' என்ற பெயரில். மற்றொன்று உஷா உதுப்பின் 'ஒன் வே டிக்கட்' – ஸாரி ஸாரி – 'ஒன் டே க்ரிக்கெட்'! சினிமா ஸ்டார்களெல்லாம் செய்தித்தாள்களில் கிரிக்கெட் வீரர்களுக்கு வாழ்த்துச் செய்திகள் தெரிவிக்கிறார்கள். பொதுமக்கள் சித்தி விநாயகர் கோயிலில் பிரார்த்தனை செய்கிறார்கள். லண்டனுக்குப் போக முடியாத பலர், பக்கத்திலுள்ள ஜெய்ப்பூருக்கு டிக்கெட் வாங்கியிருக்கிறார்கள். அங்கே என்னவோ பிரேம் பிரகாஷ் என்ற தியேட்டரில், 70mm ஸ்க்ரீனில், 50 லட்ச ப்ரொஜெக்டர் தயவில், 'லைவ்'வாக, வர்ல்ட் கப் மாட்ச்சுகளைக் காட்டப் போகிறார்களாமே? 'லார்ட்ஸ்' சூழலை உருவாக்க, தியேட்டரிலேயே லண்டன் 'பப்'ஸ், 'ஈட் டரீஸ்' எல்லாம் கொண்டு வரப் போகிறார்களாம்! சிப்பந்திகளுக்கும் லண்டன் ஸ்டைல் உடை; உணவு வகைகளுக்கெல்லாம் 'வர்ல்ட் கப்' ஹீரோக்களின் பெயர்கள்; தினம் ஒரு சுபில் டீம் கிரிக் கெட் ஹீரோ வேறு சிறப்பு விருந்தினராக வருவாராம்! அட, எங்கே ஓடுகிறீர்கள்? ஜெய்ப்பூருக்கா? டெயில்பீஸைப் படித்துவிட்டுப் போங்கள்.

டெ. பீ : இந்த 'மே' என்னமோ மும்பைக்கு ரொம்ப கஷ்டகாலமாமே? குஜராத்தியரிடையே இந்த நம்பிக்கை ரொம்ப ஸ்ட்ராங்! சிலர் கடல் மும்பையை விழுங்கப் போகிறதென்கிறார்கள்; சிலர் 'சூரத்'தில் வந்த ப்ளேக் போல் இங்கேயும் ஏதோ வரப் போகிறதென்கிறார்கள்... விருந்தினர்களை விரட்ட புது யுத்தியா? எதற்கு வீண் வம்பு? நீங்கள் ஜெய்ப்பூருக்கே செல்லுங்கள்!

— ஜெயஸ்ரீ ராஜ்



• சத்யன்

தனது கறுப்பு - வெள்ளை புகைப்படங்களை மட்டும் தொகுத்து ஒரு புத்தகமாக விரைவில் சத்யன் வெளியிடப் போகிறார்.

ஒருமுறை மைசூருக்கு வந்த ஐரோப்பிய புகைப் படக்காரர், 'இந்திய நதிகளில் குளிக்கும் பெண்கள், கேமராவுக்குப் பெரும் விருந்து. அவர்கள் ஆறு கெஜம் புடைவை உடுத்தியபடியே குளிப்பது, குளித்துக் கொண்டே புடைவையையும் தோய்ப்பது இவையெல் லாம் அவர்களது நேர்த்திக்கு அடையாளம். இது போன்ற கலைநயம்மிக்க புகைப்படங்களுக்கு, ஐரோப் பாவில் ரொம்ப வர வேற்பு கிடைக்கும்" என்

# அழைத்தார் பிரதமர் அலைந்தார் கேமராமேன்!

டி.எஸ். சத்யன். வயது 76. மைசூர்க் காரர். ஐம்பத்தைந்து வருடங் களாகப் புகைப்படங்கள் எடுத்துக் கொண்டிருக்கிறார். இவருடைய புகைப்படக் கண்காட்சிகள் இந்தியாவின் பல்வேறு நகரங்களிலும் நடை பெற்றுள்ளன. பாராட்டுகள் குவிந்துள்ளன. ஐ.நா. சபை, ஃபோர்டு ஃபவுண்டேஷன் போன்ற அமைப்புகளுக்காகப் பிரத்யேகப் புகைப்படங்கள் எடுத்திருக்கிறார். உலகப் புகழ்பெற்ற லைஃப் பத்திரி கையின் புகைப்படக்காரராகப் பதினைந்து வருடங்கள் பணி யாற்றியவர். யூனிசெஃப் அமைப்பு கேட்டுக் கொண் டதன் பேரில், 'இந்தியக் குழந்தைகள்' என்ற தலைப் பில் இவர் எடுத்த புகைப் படங்களின் கண்காட்சி நியூயார்க்கில் ஒரு மாத காலம் நடந்தது.

கர்நாடக அரசின் ராஜ் யோத்சவா, மத்திய அரசின் பத்மஸ்ரீ உட்படப் பல விருது கள் பெற்றவர் சத்யன். சில புத்தகங்களும் எழுதியுள்ளார்.

றார். அது முதல், இந்த சப்ஜெக்ட் டில் ஸ்பெஷலைஸ் செய்யத் தொடங்கி விட்டார் சத்யன்.

குளிக்கும் பெண்களைப் படமெடுக்கப் போகிற போது, தன் மனைவி ரத்னாவுடன்தான் போவார் சத்யன். ரத்னா சம்பந்தப்பட்டவரிடம் பேசி, அனுமதி பெறுவார். சில சமயங்களில் படமெடுத்து முடித்தபின், விஷயத்தைச் சொன்னதும் உண்டு.

62-ம் வருடம், டைம் பத்திரிகையின் அட்டையில் வெளியிடுவதற்காக, நேருஜியைப் புகைப்படமெடுத்துத் தரும்படிக் கேட்டார்கள். நேரு வசித்த தீன் மூர்த்தி பவன் சென்று, செக்யூரிடியிடம் தகவல் சொல்லிவிட்டு, டெல்லியிலிருந்து எண்பது கிலோ மீட்டர் தள்ளி நடந்து கொண்டிருந்த கர்முக்தேஸ்வர் திருவிழாவுக்குச் செல்வதால், மறுநாள் வருவதாகவும் சொல்லிவிட்டுப் புறப்பட்டார்.

திருவிழாவில், ஆனந்தமாக போட்டோ எடுத்துத் தள்ளிக் கொண்டிருந்தபோது மைக்கில் 'புகைப்படக் காரர் சத்யன், உடனடியாக போலீஸ் பூத்துக்கு வரவும்' என்று அறிவிக்கப்பட்டது. மனைவி இல்லாமல் தனியே வந்து, குளிக்கும் பெண்களைப் போட்டோ எடுத்ததால் பிரச்னையாகி விட்டதோ எனப் பயந்தபடியே போலீஸ் ஸ்டேஷன் போனால், அங்கே சத்யனுக்கு ராஜ மரி யாதை! பிரதமர் அலுவலகத்திலிருந்து, உடனடியாக வரச் சொல்லித் தகவல் வந்திருந்தது. உடனே டெல்லி சென்று, நேருவைப் புகைப்படம் எடுத்தார். இது அவரு டைய மறக்க முடியாத அனுபவங்களுள் ஒன்று.

— சி. எம்.

நன்றி : தி வீக்

## பணம்

# பத்து ரூபாய் திருடினேன்!

**பாலகுமாரன்**

பணம் என்றதும் பத்து வயதில் அம்மாவிடமிருந்து திருடிய பத்து ரூபாய்தான் எனக்கு முதலில் ஞாபகத்துக்கு வருகிறது.

சினிமா போகவோ, சிட்டாடவோ, தீனி தின்னவோ அந்தக் காசை நான் திருடவில்லை. நான் கணக்குப் பாடத்தில் மிகவும் பலவீனன்.

'அந்த வாத்யார் கிட்டே பத்து ரூபா குடுத்து டியூஷன் வச்சுக்கிட்டா லட்டு, லட்டா மார்க்கு போட்டுடுவாரு' என்று சக மாணவர்கள் சொன்னதை நம்பினேன். லட்டு மார்க் கிடைக்கவில்லையாயினும், பாஸ் மார்க் கிடைக்கும்; ஐந்து, ஆறு, எட்டு, பூஜ்ஜியம் என்று ஒற்றை இலக்கத்தில் ஒவ்வொரு டெஸ்டிலும் மார்க்குகள் வாங்குகிறோமே, இதற்காக வீட்டில் செருப்படி படுகிறோமே, நான் அப்பாவிடம் அடி வாங்குவதைப் பார்த்து அம்மாவும் துடிக்கிறாளே, சில சமயம் குறுக்கே விழுந்து அவளும் அடி வாங்குகிறாளே என்று வேதனைப்பட்டு ஓசை எழாது இரண்டு பெட்டிகளை இறக்கி வைத்துவிட்டு மூன்றாவது தகரப் பெட்டியில் இருந்த காசைத் திருடி எடுத்துக் கொண்டு போய் வாத்தியாருக்கு டியூஷன் பீஸ் கொடுத்தேன்.

அந்த முறை டெஸ்டில் 68 மார்க். லட்டு மார்க். வாழ்க்கையில் எந்த சப்ஜெக்டிலும், எந்த வகுப்பிலும் வாங்காத மார்க். ஆனால் அம்மா பத்து ரூபாய் காணாமல் போயிற்று என்று அப்பாவிடம் உண்மையைச் சொல்லி அவரிடம் அடிவாங்கினாள். நான் அலறினேன்; துடித்துப் போனேன்.

பணம் என்பது சந்தோஷமும் துக்கமும் தரும் விஷயம் என்று எனக்கு அன்று தெரிந்து போயிற்று. இன்று வரை இந்தப் பாடத்தில் எனக்கு மாறுதல் ஏதுமில்லை.

ஆயிரத்து தொள்ளாயிரத்து அறுபத்து ஐந்தில், ஒரு இன்ஷூரன்ஸ் கம்பெனியில், நான் டைப்பிஸ்டாக வேலைக்குச் சேர்ந்தேன். சம்பளம் நூற்றி எழுபத்தைந்து ரூபாய். அம்மா நூற்றைம்பது ரூபாய் எடுத்துக் கொண்டு, இருபத்தைந்து ரூபாயை

எனக்குக் கொடுத்து விடுவாள். அதில் பதினைந்து ரூபாய் எனக்கு மிச்சமாகும். ஆனாலும் அதை சுபிட்சமான காலம் என்று சொல்ல முடியாது. எப்படிச் செலவு செய்வது என்று அன்றுள்ள பல இளைஞர்களுக்குத் தெரியாது. எனக்குக் கொஞ்சம் கூடத் தெரியாது.

ஒரு மைசூர் பாக், ரெண்டு மசால் தோசை, ஒரு ஓவல் டின் எல்லாம் சாப்பிட்டாலும் இரண்டு ரூபாய்தான் ஆகும். என் பெரிய செலவு இதுதான். இதுவும் மாதம் ஒரு முறைதான். நான் காசு சேர்த்து வைத்து தஞ்சாவூர் ஜில்லாவின் பல இடங்களுக்கு, கித்தான் பையோடு போய் வருவேன்.

மூன்று நாட்கள் லீவு வந்தால் இரண்டு நாட்கள் விடுமுறை எடுத்துக் கொண்டு, திரும்பத் திரும்ப குடந்தைக்கும், தஞ்சைக்கும் பஸ் ஏறுவேன். நான் எழுத்தாளனாக வேண்டும் என்று ஆசைப்பட்டது இந்தக் காலகட்டத்தில்தான். என் டைப்பிஸ்ட் உத்தியோகம் இதற்குப் பெரிதும் உதவியது. அந்த டைப்பிஸ்ட் வேலை இல்லை என்றால் என்னால் நல்ல எழுத்தாளனாக ஆகி இருக்க முடியாது. ஏதாவது பத்திரிகை ஆபீசில் சுமாரான ரிப்போர்ட்டர் ஆகியிருப்பேன்.

**ப**ணம், லஞ்சம் வாங்குகிற சூழ்நிலையையும் எனக்கு ஏற்படுத்தியது. லஞ்சம் வாங்கும்படி நான் நிர்ப்பந்திக்கப்பட்டேன்.

சிவன் சொத்து குலம் நாசம். சிவசைலம் சொத்து, குடல் நாசம். லஞ்சம் வாங்கின காசெல்லாம் அபத்தமான தீனியாகவும், சிகரெட்டாகவும் மாறியது. உடல்நலம் கெட்டது. வெகு விரைவிலேயே லஞ்சக் காசு ரத்தப் புண்ணுக்குச் சமம் என்பது புரிந்து போயிற்று. அது மூளைக் கட்டியைக் கொடுக்கும். லஞ்சம் வாங்கிய எவருக்கும் நல்ல மரணம் இடையாது என்று புரிந்து கொண்டேன். உடனே நிறுத்தினேன்.

என்னைப் புறம் தள்ளிவிட்டு தொடர்ந்து லஞ்சம் வாங்கியவர் சீரழிந்ததையும் அருகே இருந்து கவனித்தேன். பணத்தை வெற்றி கொள்வதற்கு தர்மம்தான் வழி. இல்லையெனில் பணம் நம்மை வெற்றிகொள்ளும்; சுதற அடிக்கும் என்பது எனக்குத் தெள்ளத் தெளிவாகப் புரிந்தது.

டிராக்டர் கம்பெனியை விட்டு வெளியே வரும்போது, லட்ச ரூபாய்க்குக் கிழேதான் சேமிப்பு இருந்தது. டிராக்டர் கம்பெனியில் இருந்தால் ஓர் எல்லைக்கு மேல் உயர முடியாது என்பது தெரிந்து போயிற்று. பிடிக்காத வேலையை பொய்யான ஆட்களுக்கு நடுவே செய்வது அபத்தம் என உணர்ந்தேன்.

பிடித்த வேலையை, பலத்த போட்டிகளுக்கு நடுவே செய்கிறபோது, ஒரு போர் வெறி ஏற்படுவதை அறிந்து கொண்டேன். முழு நேர எழுத்தாளனானேன். ஓர் அத்தியாயத்திற்கு அறுபத்தைந்து ரூபாய். மூன்று பக்க பேட்டிக்கு முப்பது ரூபாய் என்று அழுதழுது கொடுப்பார்கள். முழு நேர எழுத்தாளன் என்பதாலேயே குறைவாகக் கொடுத்தார்கள். பொறுத்துக் கொண்டேன்.

எழுதி, பாதி சம்பளம்தான் சம்பாதிக்க முடிந்தது. மாசத்துக்கு நாலாயிரம் சம்பளம் வாங்கி வந்த என்னை, சினிமா வருஷத்துக்கு மூவாயிரம் என்று பேரம் பேசியது.

பணம் பற்றி யோசிக்கும்போதே குலை நடுங்கிய காலங்கள் அவை. காப்பி குடித்தால் செலவாகுமே என்று அஞ்சிய காலங்கள் அவை. இரண்டு மனைவியரும் காப்பாற்றினார்கள். அவர்கள் காசில் சட்டையும் பேண்ட்டும் வாங்கிக் கொடுத்தார்கள். பின்னால், ஒரு காலகட்டத்தில் வாரத்தின் ஏழு நாளைக்கு ஏழு தொடர் எழுதிக் கொண்டிருந்தேன்.

இந்த நாவல் கமலாவுக்கு, இந்த நாவல் சாந்தாவுக்கு, இந்த நாவல் கௌரிக்கு என்று சம்பாதித்தேன். தூக்கத்திலும் கண்ணெரியும் சூடு. வீட்டு போன் நெம்பர் கூட மறந்து விடுமளவுக்கு எழுத்து, படிப்பு. வாலிபத்தின் முறுக்கான நேரத்தில், என் உழைப்பு கூடி, மிக உயரே பறந்தது. காசுத் தேவைக்காக நான் பட்ட கஷ்டம்தான் என்னை கனவானாக மாற்றியது.

தாயுமானவன், ஆனந்த வயல் போன்ற நாவல்களை எழுதி, வாங்கிய நகைகள் இன்னும் எங்களிடம் இருக்கின்றன.

**இ**தற்கிடையே வீடு வாங்க, கை ஊன்றாமல் கரணம் போட வேண்டியிருந்தது.

> "அவர் கல்யாணத்துக்குத்தான் போயிட்டு வர்றார்னு எப்படிச் சொல்றே?"
>
> "கால்ல போட்டிருக்கிற செருப்போட அளவை வச்சுத்தான்!"
>
> – சீர்காழி ரேவதி



அதற்கு வைத்திருந்த மூன்று லட்ச ரூபாய்க் காசு, கமலாவின் 'மௌனைஞ்ஜைடிஸ் பைபாஸ்' ஆபரேஷனில் கரைந்தது. பத்து பைசா கடன் வாங்கவில்லை. ஆனால் சேமிப்பு கரைந்தது. இது பலத்த அடி. ஆனால் கமலா பிழைத்தது டாக்டர்களின் திறமை. குருவின் அருள். சாந்தாவின் சிஷ்ருஷை. சேமிப்பு மிக முக்கியம் என்பதை என் வீடு இங்கே புரிந்து கொண்டது. இனி வசன வேலையில் ஈடுபட்டு, காசு சம்பாதிப்போம் என்று வாழ்க்கை திசை திரும்பியது.

டைரக்டராகி லட்சம் லட்சமாய் சம்பாதிக்கப் போகிறோம் என்ற கனவுக் கோட்டை சரிந்தது. நான் பயந்து விடவில்லை. ஒரே ஒரு வீடாவது நிறுவிக் கொள்ளலாம் என்று வசனம் எழுதத் துவங்கினேன்.

சினிமா அனுபவத்தால் என் எழுத்து இன்னும் மெருகேறியது. அதற்கு வரவேற்பு அதிகரித்தது. வரவேற்பு அதிகரிக்க, சன்மானமும் உயர்ந்தது. மாத நாவல் ஆசிரியர் ஒருவர் தன்னை வளர்த்துக் கொள்ள என்னை அதிகம் விரட்டினார்.

காசு முக்கியம்தான். அதற்காகக் கண்டதை எழுத முடியாது. கண்டதை எழுதி சம்பாதித்த காசு எதற்கும் பயன்படாது. நான் தரத்தில் மிகக் கவனம் வைத்தேன். படிக்காமல், பார்க்காமல் ஒரு விஷயத்தை எழுதுவதில்லை என்று முடிவெடுத்தேன். அதற்குச் செலவு செய்தேன். நாநூறு ரூபாய்க் காசு கொடுத்து குதிரையேற்றம் கற்றுக் கொண்ட எழுத்தாளன் நான் மட்டுமாகத்தான் இருக்க முடியும்! கல்வெட்டு ஆய்வாளர்களோடும் ஊர் சுற்றிய எழுத்தாளன் நானாகத்தான் இருக்க முடியும்.

என் காசு மிக நல்ல வழியில் செலவாயிற்று. மிக நல்ல முறையில் திரும்பி வந்தது.

அநியாயமாய்க் காசு சம்பாதிக்கக் கூடாது என்று மிகத் திடமாய் இருக்கிறேன். சிறிய வீடு, சிறிய கார் என்று நலமாக வாழ்கிறேன்.

பெட்டி பெட்டியாய்க் காசு என்பதை நான் பார்த்ததேயில்லை. கட்டி, கட்டியாய்த் தங்க பிஸ்கெட் என்று ஆசைப்பட்டதும் இல்லை. நான் பணக்காரனும் இல்லை. ஏழையும் இல்லை.

வறுமைக்கோட்டுக்குக் கீழே வாழ்ந்து, மேலே நகர்ந்து, சற்று உயரே வந்திருக்கிறேன். 'அதர்ம வழியில் பணம் சம்பாதிக்க மாட்டேன்' என்ற கொள்கைதான் என் சொத்து. அதனால்தான் நான் பணத்தை நேசிக்கிறேன். பணம் என்னை நேசிக்கிறது.

**வா**ழ்க்கையை உற்றுப் பார்த்தபோது பணம், பணம் என்று மிகவும் அலைந்தவர்களெல்லாம் அதிக துக்கப்பட்டுத்தான் இறந்து போயிருக்கிறார்கள். நிறைவு பெறாமல் முடிந்து போயிருக்கிறார்கள். பணம் அமிர்தம். அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு. பணம் ஆணுக்குத் தோழியைப் போல சுகமான விஷயம். பெண்ணுக்கு ஆண் துணை போலக் காவலான விஷயம். அத்துமீற விட்டால் அசிங்கமாகும்.

காசு இருந்தால் கொண்டாடவும், இல்லாது போனால் மௌனமாக இருக்கவும் ஒருவர் நிச்சயமாகக் கற்றுக் கொள்ள வேண்டும். காசு என்பது கடவுள் அருள். நியாயமான செலவிற்குக் கைகூப்பிக் கேட்க, நிச்சயம் காசு கிடைக்கிறது. இந்தியாவில் இன்கம்டாக்ஸ் விதிகளைப் பார்த்தால் காசு சம்பாதிக்கவே ஆசை வராது. நிறைய பொய் சொல்லி, நிறைய சம்பாதித்து, நிறைய சம்பாதித்ததற்காகவே நிறையப் பொய் சொல்லி, எது பொய்? எது நிஜம்? என்று நிறையப் பேருக்குத் தெரியவில்லை.

இந்தியாவில் பணக்காரர்களைப் பார்க்கும்போதே பொறாமையாய்ப் பார்க்கிறார்கள். அவனுக்குக் கஷ்டம் வந்தால் அநியாயக் காசு, நன்கு படட்டும் என்று ஆசீர்வாதம் செய்கிறார்கள். சினிமா உலகில் பணமுள்ளவர்களை அணுகுகிற விதமும், கும்பிடுகிற பாங்கும், குழைவான பணிவும் பார்த்து அசந்து போயிருக்கிறேன். அவருக்குப் பணச்சரிவு ஏற்பட்டதும், மற்றவர்கள் சிரித்துக் கொண்டு பேசுவதையும் கேட்டிருக்கிறேன்.

மிதமான பேச்சு, மிதமான உணவு, மிதமான தூக்கம் வாழ்க்கைக்கு நல்லது என்று சொல்வார்கள். மிதமான பணம் என்பதையும் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

சந்திப்பு : **எஸ். சந்திரமௌலி**

# மனசு புரிஞ்சு போச்சு!

**உமா கல்யாணி**

முற்றத்தில் வேப்ப மரம் பூச்சொரிந்த படி நின்று கொண்டிருந்தது. அதன் நிழலில் பெரிசாய் ரெண்டு பால்கேன்கள், அலுமினிய வாளி ஒண்ணு, பால் அளக்கிற லிட்டர் பாத்திரங்கள் ரெண்டு மூணுன்னு பால் கொச்சை வீசிக்கிட்டு கிடந்தது.

அம்மாப் பொண்ணு கைப்படக் காத்துக்கிட்டு கிடந்தன. அவளோ, தெருக் குழாயடியில் குடத்தை வரிசை போட்டு விட்டு, சின்னப்பய ஒண்ணுக்கிருக்காப்ல குழாய்லேர்ந்து ஒழுகிக்கிட்டிருக்க தண்ணி யவே பார்த்துக்கிட்டு இருந்தா.

மனசு பூராவும் எரிச்சலா இருந்தா.

"இப்பிடி இத்தினி இத்தினியாத் தண்ணி விழுந்து, எப்ப கொடம் ரொம்பி, நாம் போயி ஏனங்கழுக முடியும்?"னு மனசுக் குள்ள கேட்டுக்கிட்டுதான் நின்னா.

ஆனாலும் அதென்னவோ ஆவடையக் காவோட பாம்புச் செவில விழுந்துட் டாப்ல,

''பாலடிக்கவன் பொஞ்சாதி என் னம்மோ மனசுக்குள்ளியே மொனகிக் கிறாப்ல இருக்கு! நம்மூரு லெட்சணமே இதானே. அட ஆறு, குளம்தான் இல்லேண் ணாலும்கூட, தெருக் குழாய்லயாச்சும் நீக் குப் போக்காத் தண்ணி வந்தாவுல்ல தேவல. அதும் அழுது வடியிது. பொறகு மொனங் காம இருப்பாளா? அவ புருஷன் இப்பம் வந்து நிப்பானே! பால் ஏனங்க பூராவும் அந்தாக்ல அந்தாக்ல கழுகாமக் கொடக் கதப் பாத்துட்டு ஆதாளி பண்ணிருவானே அவளைப் போட்டு"ங்கா.

பொண்டுக ஒக்க அவளையே பாக்காக.

கலியாணம் மூஞ்சு மூணுமாசங்கூட ஆயிருக்கல. அதுக்குள்ளவும் எம்புட்டோ காலங்கள் வாழ்ந்துட்ட மனுசி போலல்ல இருக்கா?

"ச்சீ! ஒரு கொடம் தண்ணிக்காக எம் புட்டு நேரம் காவல் கெடக்குது? அம்மாப் பொண்ணு ஊர்லன்னா, அவ வீட்டுக்கு முன்னாடி வாய்க்கா, பின்னாடி போனா ஆறு. அது மாதிரி தண்ணிஞ்செழிச்ச ஊர்ல பரிமாறிட்டு, இது மாதிரி வெங்காட்ல வந்து சீண்ட்ரப்படுகமேன்னு அவ நெனைப்பா. ஹூம், நாம பழகிட்டம்; வெங்காட்ல வச்சா ஆவடையக்கா.

நெஜம்தான். சீண்ட்ரம்தான். என்ன செய்ய முடியும்? ஒப்புக்குச் சிரிச்சு வச்சா அம்மாப் பொண்ணு.

''சரி, ஒருத்தர்க்கு ஒரு ஆத்திரம் அவசரம்னால் யாரையாச்சும் ஒரு கொடத்த முந்தி எடுத்துட்டு போங்கன்னு சொல்லிற முடியுதா? தண்ணி விடுத முடி வான் எப்பந் தண்ணி விடுவான், எப்பம் மூடிருவான்னு சொல்ல முடியாதே. எல் லாம் அவன் இஷ்டம்ல்லா. தண்ணிக்கி அருந்தலான கோடை நேரத்துல யாருக்கு யார்தான் விட்டுக் குடுக்க முடியிது? வரிசைப்படி பிடிக்காம விட்டுட்டா, பொறகு எப்பமோ? மூடிவான் சடக்குன்னு மூடிட்டுப் போயிருவானே! அம்மாப் பொண்ணு நம்ப ஊரை எளப்பமாத்தான் நெனைப்பா. நெஜமும் அதானே''ன்னா பிரமாச்சி.

இப்பங்கூட அம்மாப் பொண்ணு சிரிச் சாப்லதான் நின்னுக்கிட்டிருந்தா.

''அவளுக்கு இன்னுங்கூடப் புதுப் பொண்ணுன்னுதான் நினப்பு. வாயத் தொறக்காளா பாரு?"ன்னுட்டுச் சிரிச்சா கோமத்தை.

"ஆமா, இப்பம் வாய் தொறந்து பேசுனா தண்ணி எடுக்க பாராத்தியத்தத்தான பேச முடியும். வேற நல்ல பாடு பேச முடியுமா. அதான் வாய மூடிட்டு இருக்கா''ன்னா முத்து மதினி.

ஒருத்தராச்சும் சிரிக்காப்ல இல்லே.

அப்ப தெருமுனைல சைக்கிள் மணியோசை கேட்கவும், எல்லாரும் திரும்பு னாக.

''பாலடிக்கவன் வாறான்''னா முத்து மதினி.

அம்மாப் பொண்ணுக்குத் 'திக்'குன்னு ஆய்ப் போச்சு.

சைக்கிள விட்டு எறங்கும் போதே, ''என்ன, இன்னமும் பால் ஏனங் கழு வலியா? நான் ரெண்டாம் ரவுண்டு போவேணாமா? நான் வாறதுக்கு முந்தியே கழுவி வச்சா என்ன''ன்னு சத்தம் போட் டுக்கிட்டேல்ல வருவான்.

வீட்ல சொட்டுத் தண்ணி கெடையாது. தெருக்குழாய்ல இப்பந்தான் விட்ருக்கான். ஒரு கொடமாச்சும் கெடைச்சால்ல கழுவி வைக்க முடியும்?

தேச்சு அலம்பிட்டான்னா, அலுமினிய ஏனம் பூராவும் வெள்ளியால்ல மின்னும்!

தண்ணியில்லா அருந்தலாப் போச்சு.

ஒரு கொடம் தண்ணிக்கு ஒரு மணி நேரம் காவல். பொறகெப்படி விட்டு விலாசிக் கழுவ முடியும்?

இப்பம் தண்ணிக் கொடத்தோட போன தும் கூப்பாடு போடுவான். மரத்தடில கழு வாமக் கெடக்க ஏனங்கள்லாம் அவனை உசுப்பேத்தி விட்ரும்.

ஏ கடவுளே! பாவி மவனுக்கு எம்புட்டுக் கோவம்! எம்புட்டுக் கோவம்!







இது அவனுக்குத் தெரியாதாக்கும்? நல்லாத் தெரியும்தான். இருந்தாலும் கத்து வான் கெடந்து.

சவம், இந்தப் பால் யாவாரம் இருக்கே, சிண்ட்ரம் புடிச்ச சோலி.

அயத்தாக்ல மறந்தாக்ல கொஞ் சம் அலசாம விட்டுட்டாப் போறும், புளிப்பேறிப் பால் திரிஞ்சு போயி ரும்.

இதுக்குண்ணே அம்மாப் பொண்ணு ஓடை மண்ணைத் தெள்ளி வச்சிருக்கா. மண்ணையும் தேங்காச்சவுரியையும் வச்சுத்

இது மாதிரி கோவங் கொண்ட மனுஷ ரைக் கண்டதும் இல்லே, கேட்டதும் இல்லே.

அம்மாப் பொண்ணுக்கு முழி பிதுங்கி ரும். மூசு மூசுன்னு அழுகை வரும். பொறுத் துக்கிடுவா. அவளும் பறந்து பறந்து தான் சோலி பாக்கா. முடியலியே. தண்ணி இல் லாம ஏனங்க காத்துக்கிடக்கே.

அவங் கோவப்படாத நாளை எண்ணிற லாம்.

எதுக்குக் கோவப்படுவான், எப்பங் கோவப்படுவான்னு ஆரும் சொல்லிற முடி

யாது. திட்டுத் திடுக்குன்னு ஆதாளி வந்து ரும். வார்த்தைகளைத் தூக்கி வீசி மன சைக் காயப்படுத்திருவான்.

கல்யாணம் ஆன நாள்லேர்ந்து இதான் நடக்கு. நொட்டு நொட்டுன்னு வார்த்தை களை வீசினா, எவதான் பொறுப்பா?

ஆனா, அம்மாப் பொண்ணு இருக் காளே! வாய்ல ஈரமண்ணை வச்சு அடைச் சாப்லல்ல. இருக்கா.

"அம்மாப் பொண்ணு, பையன் கொஞ் சம் முன் கோபம். மத்தப்படிக்கி சொக்கத் தங்கம்ல்லான்னா"ங்க.

ஆனா, இம்புட்டு மூர்க்கமா இருப் பான்னு எதிர்பார்க்கலியே! சித்ரவதை யால்ல இருக்கு.

"என்ன யோசனை அம்மாப் பொண்ணு? வரிசை வந்தாச்சுல்ல. ஒங் கொடத்தை எடுத்து வைய்யி...."ன்னா முத்து மதினி.

அம்மாப் பொண்ணு கொடத்தைக் குழாய்க்கு நேரே வைத்தாள்.

"ஏட்டி ஏ அம்மாப் பொண்ணு, அங்க உம்புருஷன் ஆதாளியோட நிக்கிறான்ட்டி. பால் கேன் கழுவலேன்னு நிலையால்ல நிக்கிறான். நீதான் அதைச் சித்த காலம்பற கழுவி வச்சா என்ன?"ன்னு கேட்டுக்கிட்டே வந்தாள் வடிவத்தை.

மெதுவா அவளை நிமிந்து பாத்தவ, "தண்ணி வேணும்ல்லா. இப்பத்தான குழாய்ல வருது. எடுத்துட்டு போய்த்தான் கழுவணும்"ன்னா அம்மாப் பொண்ணு. பொறகு கொடத்தத் தூக்கிக்கிட்டு வீட்டுக் குக் கௌம்புனா.

"ஆமா, ஒம்மனசுல என்னதான் நெனப்பு? மனுஷன் நாய் கணக்கா ஒரு ரவுண்டு போய் பால் ஊத்திட்டு வந்தாச்சு. அடுத்தாக்லயும் போணும். பால் ஏனங்க ஒண்ணும் ரெடியாகலே. வீட்ல கெடக்கவ என்னதான் செய்வியோ?"

இவ போம்போதே கத்தினான்.

"குழாய்ல தண்ணி இப்பந்தான் வந்திச்சு. இன்னா கழுவிர்றேன்"னுக்கிட்டே கொடத் தோட ஏனங்க கெடக்க பக்கமாப் போனா.

"பொறுப்பே கெடையாது. பசி உசிர் போகுது. என்னத்தியும் கொண்டாடிட்டு போ"ன்னு கத்தினான்.

கொடத்தை எறக்கி வச்சிட்டு உள்ள போனவ, ஒரு தட்டுல பழையத்தையும் ஒரு கிண்ணத்துல கொழம்பையும் கொண்டாந்து வச்சா.

**"ஆஸ்கார் விருது பெறுகிற மாதிரி தலைப்பு ஏதேனும் சொல்லுங்க!"**

**"'கம்பர் இன் லவ்'ன்னு வையுங் களேன்!"**

**– தாரமங்கலம் அ. முத்துசாமி**

அவன் கையைக் கொடத்துல முக்கி அவசரமா அலம்பிட்டு வியர்வை நாத்தத் தோடவே திண்ணையில சாப்பிட உக்காந் துக்கிட்டான்.

அம்மாப் பொண்ணு முகஞ்சுளிச்சா.

"என்னதான் பசின்னாலும், கை கால் கூட அலம்பாம என்ன சாப்பாடு"ன்னு முனகிக்கிட்டா.

"தெனம் தெனம் கத்திரிக்கா கொழம்பு தானா? வேற ஒரு காய்கனும் நாட்ல கெடை யாதா?"ன்னு கத்திக்கிட்டே சாப்பிட ஆரமிச்சான்.

"வேளார்கடைல இதான் இருந் திச்சு..."ன்னு சொல்லிக்கிட்டே மோர் ஜாடி யைக் கொணாந்து அவம்பக்கத்துல வச்சிட்டு, ஏனத்தைக் கழுவிறலாம்னு போனா.

'கர, கர'ன்னு நல்லாத் தேச்சு அலம்பி, வெள்ளி போல மினுங்கவச்சா.

அவஞ் சத்தம் ஓயல.

"நாட்ல வேளார்கடை ஒண்ணுந்தான் இருக்கா? வேற கடையே கெடையாதா? நடக்கச் சோம்றப்பட்டுச் சித்தப்பன் வீட்ல பொண்கட்ன கதையால்ல சொல்த..."ன்னு வார்த்தைகளைச் சுண்டி வீசிக்கிட்டே சாப்புட்டான்.

பதிலே சொல்லாம அவ பாட்டுக்கு ஏனங்கழுவிக்கிட்டே இருந்தா.

அவஞ்சாப்பிட்டு எந்திக்கும் முன்னாடி வெளக்கி வைக்கலேன்னா, அதுக்கு வேற யால்ல தனிப்பாட்டுப் பாடுவான்.

போதும் போதும்னு இருந்திச்சு அவ ளுக்கு. எப்பவும் எதுக்கும் நச்சு, நச்சுன்னு பிடுங்கிக்கிட்டே இருந்தா எவளால தாங்க முடியும்?

"ஏன் அம்மாப் பொண்ணு, ஒங்க ஊர்ல அம்மங் கோயில் கொடையாமில்லே? காரவீட்டு முப்பிடாதி சொன்னான். அப்ப,



ஒங்களுக்கு அழைப்பு வரும்ல்லா?"ன்னு கேட்டா பிரமாச்சி.

"ஆமா, அப்பா அந்திக்கு வந்து கூப்பிடுவாக"ன்னா இவ.

"அப்ப ரெண்டு பேரும் இன்னிக்கே போயிருவியளா?"

"ஆமா, போயிருவோம்"ன்னா சந்தோஷத்தோட.

"இவ சொல்தா பெரமாச்சி, அவன் அங்கன பொறப்பட்ருவாங்கே! பாலடிக்கத விட்டுப் போட்டுப் போயிருவானாக்கும். துட்டு நட்டப்பட்ரும்ன்னுல்ல நெனைப்பான்"ன்னா முத்து மதினி சிரிச்சுக்கிட்டே.

மதினி சொன்னது முக்காலும் சரி.

மாமனார் வீட்டுக்குப் பொண்டாட்டியோட அவன் போறது சம்சியம்தான். போகாமக்கூட இருந்துக்கிடுவான். மதினி சொல்காப்ல துட்டு போயிரும்னு எண்ணுகவன்தானே!

"ஹூம்....ம், அதென்ன ஒரு நாளு கிழமைன்னாக் கூடவா? பண்டிகை, பவிசுன்னு ஒண்ணும் கெடையாதா? துட்டத்தான் தெனம் சம்பாரிக்கலாமே! போன வயசு வரவா போகுது? அதத, அப்பப்ப அனுவிச்சால்ல தேவல"ன்னா கோமக்கா.

"நமக்குத் தெரியுது. பாலடிக்கவனுக்குத் தெரிய மாட்டங்கே. இவ சொன்னாலும் அவங் கேக்கணுமில்லா. முன் கோபக்கார மனுஷன்ல்லா. ஆரு சொன்னாக் கேட்ருவான்?"ன்னா முத்து மதினி.

இவுக நியாயமாத்தான் பேசுதாக. அவங் கேக்கணுமே.

"கலியாணம் மூஞ்ச வருசத்துல நடக்குற தலைக் கொடை அம்மாப்பொண்ணு. எப்படியும் அவனத் தளைய வளையக் கட்டிக் கூட்டிட்டு போயிரு. பொறகு ஒங்க ஊர்ல ஒன்னை எளப்பமாப் பாப்பாக. புருஷன் இல்லாம ஒத்தயில வந்துருக்காளேன்னு குசுகுசும்பாக"ன்னா பிரமாச்சி.

ஆட்டும்ங்காப்ல தலையை ஆட்டுனா இவ.

மனசுக்குள்ளியும் அதான ஆசை. வருவானா என்னவோ? இவுகல்லாம் பேசுதத வச்சுப் பாத்தா வாராப்ல தெரியலையே. நடப்பும் அப்படித்தான் இருக்கு.

கட்னவ ஒருத்தி இருக்காங்க நெனப்பே அவனுக்கு இல்லாமப் போனது போலல்ல இருக்கான். கால்ல சக்கரம் மாட்டிக்கிட்டு ஓடுதாப்லல்ல ஓடிக்கிட்டே இருக்கான்?

கல்யாணம் ஆகி மறுவீடு போனப்பகூட மாமனார் வீடுன்னு எங்கன கால்தரிச்சு நின்னான்?

போணும் போணும்ன்னுல்ல பறந்தான்?

"இதுமாதிரி மறுவீடு, விருந்து அது இதுன்னு இங்க டேரா போட்டா, அங்க எந்தாலி அறுந்துரும். வா"ன்னு கூட்டுக்கிட்டு வந்துட்டான்.

பொறகு போகவே இல்லே.

இப்ப இந்தக் கொடையைச் சாக்கு வச்சாவது போயி இருந்துட்டு வரணும்னு அம்மாப் பொண்ணு ஆசைப்படுதா.

அவன் என்ன சொல்லக் காத்துக் கிடக்காளோ?

"எல்லாம் இப்ப நீ போ. நான் பாலடிச்சிட்டு நாளை ராத்திரி கொடை பாக்க வந்துருதேன்."

ஹூம், அம்மாப் பொண்ணு நெனச்ச மாதிரியே சொல்லி முடிச்சிட்டான். அவ முகமும் மனசும் இருண்டு போச்சு.

ஊர்ச்சனம் பூராவும், ஒருத்தர் பாக்கியில்லாமக் கேப்பாகளே!

"ஒன் ஆமக்கா வரலியா? ஒத்தயாவாட்டி கொடை பாக்க வாறது?"ன்னு கேட்டுக் கேட்டு அலுக்க வச்சிருவாகளே!

"அதான் மாப்ள சொல்லியாச்சில்ல, நீ புறப்படு அம்மாப் பொண்ணு. அவுக பாலடிக்க சோலிய முடிச்சிட்டு நாளக்கி வரட்டும். கௌம்பும்மா"ன்னாக அப்பா.

"கலியாணம் மூஞ்சு ரெண்டாம் தடவை போறப்ப கூட புருஷன் இல்லாமப் போய்ட்டா, ஊர்ல பதில் சொல்ல ஏலாதே. இந்த அப்பாவுமில்லா அவுகட்ட ஒண்ணும் சொல்லாம பொறப்படு, பொறப்படுங்காக..."ன்னு மனசுக்குள்ள பொலம்பிக்கிட்டே, அரை மனசாப் புறப்பட்டா அம்மாப் பொண்ணு.

ஒரு வழியா வந்து சேர்ந்தான்.

வந்தவன்கிட்டே சந்தோஷம் கும்மாரிச்சம் போட்டுக்கிட்டு இருக்கு.

''ஏ அம்மாப் பொண்ணு, இந்தா பிடி''ன்னு சொல்லிக்கிட்டே ஒரு பொட்டலத்தை அவட்ட எடுத்துக் குடுத்தான்.

'என்னது?'ன்னு மனசுக்குள்ளே கேட்டுக்கிட்டே வாங்கிப் பொட்டலத்தை விரிச்சுப்பாத்தா.

ரோஸ் கலர் பேப்பர்ல தகதகன்னு மின்னிக்கிட்டு ஒரு தங்கச் சங்கிலி.

ஏ அம்மாடி!

நம்ப ஏலாமத் தொட்டுத் தொட்டுப் பாத்தா.

"என்ன பாக்க அம்மாப் பொண்ணு? இதுக்காகத்தான் நேத்து உங்கூட வரலே நான். ரெண்டு பேருமே வந்திறலாம்னு பால டிக்க ஒரு ஆளைக்கூடச் சொல்லி வச்சிட்டேன். ஆனா, தங்காசாரி நேத்து இதைத் தாரம்னுட்டு ஏமாத்திட்டார். கட்டிங் போட டவுனுக்குப் போயிருக்கு, இன்னக்கித்தான் கிடைக்கும்னுட்டார். அதான் வாங்கிட்டு வரணும்னு நான் தங்கிட்டேன். ஒங்கிட்டச் சொல்லாமச் செயின் பண்ணி வாங்கிட்டு வந்து ஒன்னைச் சந்தோஷத்துல திக்கு முக்காட வைக்கணும். ஊர்ல கொடைக்குப் போறப்ப அதை உன் கழுத்துல போட்டு ஒன்னைக் கூட்டிட்டு வரணும்னு ஆசைப்பட்டேன். ஹூம்..., தங்காசாரி சதி பண்ணிட்டார். பிடிச்சிருக்காமாடல்? கொண்டா, நானே போட்டு விட்டுர்றேன்''ன்னவன் அதை அவ கழுத்துல போட்டு விட்டான்.



"ஓட்டல் முதலாளியோட பொண்ணு கல்யாணத்துல ஏதோ பிரச்னை யாமே... என்னது?''
''பழக்கதோஷத்துல, 'சீர் பாத்திரங்கள்'லயெல்லாம், 'ஓட்டலில் திருடியது'னு பேர் வெட்டிட்டாராம்!''
– ஜெயாப்ரியன்

இதுவரைல தாலிக் கயிறு மட்டும் தொங்கின கழுத்துல, இப்ப தங்கத்துல சங்கிலியும்!

''பாத்தியாட்டி பாலடிக்கவன் பொண்டாட்டியை! பண்ணையார் வீட்டம்மா கணக்காத் தங்கத்துல சங்கிலி போட்ருக்காளே!''

''நாமளும் பாலடிக்கவனை என்ன மோண்ணுல்லா நெனச்சிட்டோம். புதுப் பெண்டாட்டின்னும் பாராமப் பணம் பணம்னு பறக்கானேன்னு நினைச்சோமே! அவன் என்னன்னா, பொண்டாட்டிக்கிச் சங்கிலி போட்டு அழகு பாக்கல்ல அப்பிடி ஓடி ஓடிப் பாடு பட்ருக்கான்.''

''ஹூம், இப்பஞ் சங்கிலி பண்ணிப் போட்டவன் நாளக்கி வளையல் பண்ணிப் போடுவான்...''

"புதுசா வீடு கெட்டுவான்.''

"காடு கழனி வாங்குவான்.''

''அம்மாப் பொண்ணு குடுத்து வச்சவடி!''

"ஆருக்குக் கெடைப்பான் இப்படியாப் பட்ட ஆமக்கா?''

"புண்ணியஞ் செஞ்சிருந்தாக் கெடைப்பான்.''

இப்பம் பேசுதாக இப்படி.

அப்பம்...?

"ஹூம், பாவம்டி பாலடிக்கவன் பொண்டாட்டி. இவங்கிட்ட வந்து ஆம்டுக்கிட்டானே!''

இப்படித்தான பேசுனாக?

அப்ப இப்படிப் பேசுதப்ப ஒடுங்கி ஒடுங்கி நின்னவ, இப்ப நல்லா நிமுந்து நிக்கிறாப்ல ஆயிடுச்சில்ல!

ஊர்ல உள்ளவுக கண்டதயும் பேசிருவாக. ஒடமைக்காரில்லா எல்லாத்தியும் நிதானமாப் பாத்து, நிதானமா யோசிச்சிருக்கணும்? ஒவ்வொருத்தர்ட்டயும் ஒருஒரு குறைப்பாடு. இவங்கிட்ட முன்கோபம்.

இப்டின்னு அப்பா சொல்லித்தான கட்டிக் குடுத்தாக?

ஊர்ல இப்ப இப்படிப் பேசுதவுக நாளைக்கே மாறியும் பேசுவாக.

ஆனா, அதுல உள்ள நெஜமும் பொய்யும் கூடவே இருக்கவளுக்கில்ல தெரியும்?

தெரிஞ்சுக்கிட்ட அம்மாப் பொண்ணு கிட்ட சந்தோஷம் சாடிட்டு வருது.

வரட்டும்; அதான வேணும். ●

# பொன்னியின் செல்வன்



## பத்தாம் அத்தியாயம்

## சூடாமணி விஹாரம்

பூம்புகார் என்னும் காவிரிப்பட்டினத்தைக் கடல் கொள்ளை கொண்டு போய் விட்டது அல்லவா? அதற்குப் பிறகு சோழ வள நாட்டின் முக்கிய துறைமுகப் பட்டினம் என்ற அந்தஸ்தை நாகைப்பட்டினம் நாளடைவில் அடைந்தது. பொன்னி நதி பாய்ந்து இயற்கை வளம் செறிந்திருந்த சோழ நாட்டுடன் வர்த்தகத் தொடர்பு கொள்ள எத்தனையோ அயல்நாட்டார் ஆவல் கொண்டிருந்தனர். பெரிய பெரிய மரக் கலங்களிலே வர்த்தகப் பண்டங்கள் வந்து இறங்கியபடி இருந்தன. முத்தும் மணியும் வயிரமும் வாசனைத் திரவியங்களும் கப்பல்களில் வந்து இறங்கியதோடு அரபு நாட்டுக் குதிரைகளும் விற்பனைக்காக வந்து இறங்கின.




ஸ்ரீ சுந்தரமூர்த்தி நாயனாரின் காலத்தில் நாகைப்பட்டினம் சிறந்த மணிமாட நகரமாயிருந்தது. அந்த நகரத்தைக் கண்ட நம்பி ஆரூரர்,

**"காண்பினியமணிமாடம்
நிறைந்த
நெடு வீதிக்
கடல்நாகைக்
காரோணம் மேவி
யிருந்தீரே!"**

என்று வர்ணித்தார். கடல் நாகைக் காரோணத்தில் மேவியிருந்த காயாரோகணப்

**அமரர் கல்கி**



பெருமானிடம் ஸ்ரீ சுந்தர மூர்த்தி நாயனார் என்ன பொருள்கள் வேண்டுமென்று கேட்டார் தெரியுமா? மற்ற ஊர்களிலே போலப் பொன்னும் மணியும் ஆடை ஆபரணங்களும் கேட்டதோடு, நாகைப் பட்டினத்திலே ஓர் உயர்ந்த சாதிக் குதிரையும் கேட்டுப் பெற்றுக் கொண்டார்!

**''நம்பிதாமும் அந்நாட்போய்**
**நாகைக் காரோணம் பாடி**
**அம்பொன் மணிப்பூண் நவமணி**
**கள் ஆடை சாந்தம் அடற்**
**பரிமா''**

ஆகியவை பெற்றுக்கொண்டு திருவாரூர் திரும்பிச் சென்றதாகப் பெரிய புராணம் கூறுகிறது.

நாகைப்பட்டினத் துறைமுகத்தில் வந்து இறங்கிய அரபு நாட்டுக் குதிரைகளைப் பார்த்ததும் நாயனாருக்கும் குதிரை ஏறிச் சவாரி செய்ய வேண்டும் என்று தோன்றிவிட்டது போலும்!

நாகைப் பட்டினத்தைப் பற்றிப் புராணம் வர்ணிப்பது ஒருபுறமிருக்க, சரித்திர பூர்வமான கல்வெட்டுகளும் செப்பேடுகளும் அந்நகரத்தைப் பற்றிச் சொல்லியிருக்கின்றன.

**''பல கோயில்களும் சத்திரங்களும் நீர்நிலைகளும் சோலைகளும் மாட மாளிகைகளும் நிறைந்த வீதிகளையுடைய நாகைப்பட்டினம்''** என்று ஆனைமங்கலச் செப்பேடுகள் அந்த நகரை வர்ணிக்கின்றன.

அதே ஆனைமங்கலச் செப்பேடுகள் அந்நாளில் நாகைப்பட்டினத்தில் புகழ் பெற்று விளங்கிய சூடாமணி விஹாரம் என்னும் பௌத்த ஆலயத்தைப் பற்றியும் அதன் வரலாற்றையும் கூறுகின்றன.

மலாய் நாடு என்று இந்நாளில் நாம் குறிப்பிடும் தீபகற்பம் அக்காலத்தில் ஸ்ரீ விஜயநாடு என்னும் பெயரால் பிரசித்தி பெற்றிருந்

தது. அந்த நாட்டில் ஒரு முக்கிய நகரம் கடாரம். அந்த மாநகரைத் தலை நகரமாக வைத்துக் கொண்டு நாலா திசையிலும் பரவியிருந்த மாபெரும் ஸ்ரீ விஜய சாம்ராஜ்யத்தை நெடுங்காலம் ஆண்டு வந்தவர்கள் சைலேந்திர வம்சத்தார். அந்த வம்சத்தில் **மகரத்துவஜன் சூடாமணி வர்மன்** என்னும் மன்னன் மிகவும் கீர்த்தி பெற்று விளங்கினான். அவ்வரசன் **''இராஜ தந்திரங்களில் நிபுணன்; ஞானத்தில் ஸுர குருவான பிரகஸ்பதியை ஒத்தவன்; அறிவாளிகளான தாமரை மலர்களுக்குச் சூரியன் போன்றவன்; இரவலருக்குக் கற்பகத் தருவாய் விளங்கினான்''** என்று ஆனைமங்கலச் செப்பேடுகள் வியந்து புகழ்ந்து கூறுகின்றன.

அத்தகைய பேரரசனின் மகன் மாற விஜயோத்துங்க வர்மன் என்பவன் தன் தந்தையின் திருநாமம் நின்று நிலவும் படியாக **''மேருமலையையொத்த சூடாமணி விஹாரத்தை நாகைப் பட்டினத்தில் கட்டினான்''** என்றும் அச்செப்பேடுகள் கூறுகின்றன.

கடாரத்து அரசனாகிய மாற விஜயோத்துங்கன் நாகைப் பட்டினத்துக்கு வந்து புத்தவிஹாரத்தைக் கட்டுவானேன் என்று வாசகர்கள் கேட்கலாம்.

சோழ வள நாட்டுடன் நீடித்த வர்த்தகத் தொடர்பு கொண்டிருந்த அயல் நாடுகளில் ஒன்று ஸ்ரீ விஜய நாடு. அந் நாட்டுப் பிரஜைகள் பலர் நாகைப் பட்டினத்துக்கு வந்து நிரந்தரமாகவே குடியேறியிருந்தனர். வேறு பலர் அடிக்கடி வந்து திரும்பினர். கடாரத்து அரசனும் அவனுடைய குடிகளும் புத்த மதத்தைச் சார்ந்தவர்கள். அவர்கள் புத்தரை வழிபடுவதற்கு வசதியாயிருக்கட்டும் என்றுதான் அம்மன்னன் நாகைப்பட்டினத்தில் சூடாமணி விஹாரத்தைக் கட்டினான். புத்தமதத்தின் தாயகம் பாரத தேசமாயிற்றே என்ற காரணமும் அவன் மனத்தில் இருந்திருக்கலாம்.

தமிழகத்து மன்னர்கள் எக்காலத்திலும் சமய சமரசத்தில் நம்பிக்கை கொண்டவர்கள். ஆகையால் அவர்கள் நாகைப்பட்டினத்தில் சூடாமணி விஹாரம் கட்டுவதற்கு அனுமதி கொடுத்தார்கள். அனுமதி கொடுத்தது மட்டுமா? அவ்வப்போது அந்தப் புத்தர் கோயிலுக்கு நிவந்தங்களும் இறையிலி நிலங்களும் அளித்து உதவினார்கள். •

விஜயாலய சோழரின் காலத்திலிருந்து சோழ மன்னர்கள் சிவ பக்தியில் திளைத்தவர்களாயிருந்தார்கள். ஆதித்த சோழரும் பராந்தக சோழரும் கண்டராதித்தரும் சைவப் பற்று மிக்கவர்கள். பற்பல சிவாலயத் திருப்பணிகள் செய்வித்தார்கள். எனினும் அவர்கள் பிற மதங்களைத் துவேஷிக்கவில்லை. தங்கள் இராஜ்யத்தில் வாழும் பிரஜைகள் எந்தெந்த மதத்தைச் சேர்ந்தவர்களாயினும் அவர்களையும் அவர்களுடைய மதங்களையும் நடுநிலைமை தவறாமல் பராமரித்தார்கள். சுந்தர சோழ சக்கரவர்த்தி தமது முன்னோர்களைக் காட்டிலும் சில படிகள் முன் சென்றார். புத்தப் பள்ளிகளுக்கு விசேஷச் சலுகைகள் அளித்தார். இதனால் சோழ

• இந்தக் கதை நடந்த காலத்திற்குப் பிற்காலத்தில் இராஜ ராஜ சோழன் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்துக்கு ஆனைமங்கலம் கிராமத்தையும் அதைச் சார்ந்த பல ஊர்களையும் முற்றூட்டாக அதாவது எந்த விதமான வரியும் விதிக்கப்படாத இறையிலி நிலமாகத் தானம் அளித்தான். இந்த நிலதானத்தை இராஜராஜனுடைய குமாரன், சரித்திரப் புகழ் பெற்ற இராஜேந்திர சோழன், - செப்பேடுகளில் எழுதுவித்து உறுதிப்படுத்தினான். இவைதான் ஆனைமங்கலச் செப்பேடுகள் என்று கூறப்படுகின்றன. மொத்தம் இருபத்தொரு செப்பேட்டு இதழ்கள். ஒவ்வொன்றும் 14 அங்குல நீளமும், 5 அங்குல அகலமும் உள்ளனவாய், ஒரு பெரிய செப்பு வளையத்தில் கோக்கப்பட்டிருக்கின்றன. இச்செப்பேடுகள் சமீப காலத்தில் கப்பல் ஏறிக் கடல் கடந்து சென்று ஐரோப்பாவில் ஹாலந்து தேசத்தில் உள்ள லெயிடன் என்னும் நகரத்தின் காட்சி சாலையில் வைக்கப்பட்டிருக்கின்றன! ஆகையினால் இச்செப்பேடுகளை 'லெயிடன் சாஸனம்' என்றும் சில சரித்திர ஆராய்ச்சியாளர்கள் குறிப்பிடுவதுண்டு.

சாம்ராஜ்யத்தில் அச்சமயம் வாழ்ந்திருந்த பௌத்தர்கள் அனைவரும் மிக்க உற்சாகம் கொண்டிருந்தார்கள். இலங்கையில் அருள்மொழிவர்மர் இடிந்து போன புத்த விஹாரங்களைப் புதுப்பிக்கும்படி ஏற்பாடு செய்தது அவர்களுடைய உற்சாகத்தை மேலும் அதிகமாக்கியிருந்தது.

அப்படியெல்லாமிருக்க, இன்று அந்தப் பெயர் பெற்ற சூடாமணி விஹாரத்தில் நேர்ந்த குழப்பத்துக்குக் காரணம் என்ன? பிக்ஷுக்கள் நிலைகொள்ளாமல் அங்குமிங்கும் பரபரப்பாக ஏன் ஓடிக் கொண்டிருக்கிறார்கள்? சூடாமணி விஹாரத்தின் வாசற்புறத்தில் என்ன அவ்வளவு இரைச்சலும் கூக்குரலும்? - நல்லது; நாமும் சேந்தன் அமுதனைப் பின் பற்றிச் சென்று பார்ப்போம்.

சேந்தன் அமுதனும் மற்ற இருவரும் கால்வாய் வழியாகப் படகைச் செலுத்திக்கொண்டு சூடாமணி விஹாரத்தின் உட்பகுதிக்கே வந்து விட்டதாகச் சொன்னோம். அங்கே ஒருவரையும் காணாமையால் சேந்தன் அமுதன் தட்டுத் தடுமாறி வழி தேடிக் கொண்டு விஹாரத்தின் வாசற்பக்கம் போய்ச் சேர்ந்தான். அங்கேதான் பொதுமக்கள் வந்து வழிபடுவதற்குரிய புத்தர் பெருமானின் சைத்யம் என்னும் கோயில் இருந்தது. பக்தர்கள் பலர் அந்தக் காலை நேரத்தில் தாமரை மலர்களும் செண்பகப் பூக்களும் மற்ற பூஜாத் திரவியங்களும் நிறைந்த தட்டுக்களை ஏந்திக் கொண்டு வந்திருந்தார்கள். ஆனால் வந்த காரியத்தை அவர்கள் மறந்து விட்டதாகத் தோன்றியது. சைத்யத்தில் ஏறுவதற்குரிய படிகளில் புத்த பிக்ஷுக்கள் நின்று கொண்டிருந்தார்கள். அவர்களை நோக்கிக் கீழே நின்றவன் ஒருவன் ஏதோ சொல்லிக் கொண்டிருப்பதைச் சேந்தன் அமுதன் கண்டான். பிக்ஷுக்கள் சிலருடைய கண்களில் கண்ணீர் ததும்பி நிற்பதையும் பார்த்தான். கீழே நின்ற பக்தர்களில் பலர் வழக்கப்படி "சாது! சாது!" என்று கோஷிப்பதற்குப் பதிலாக, "ஆஹா!" "அடடா!" "ஐயோ!" என்று அங்கலாய்த்துக் கொண்டிருப்பதையும் கவனித்தான்.

அருகில் நெருங்கிச் சென்று சிறிது நேரம் கேட்ட பின்னர் விஷயம் இன்னது என்று தெரிந்தது. பிக்ஷுக்களிடம் பேசிக் கொண்டிருந்தவன் பார்த்திபேந்திரனுடைய கப்பலிலே இருந்த மாலுமிகளில் ஒருவன். கப்பல் முதல்நாள் இரவு நாகைப்பட்டினத்துக்கு வந்துவிட்டது. மாலுமிகள் கரையில் இறங்கியதுமே இளவரசரைக் கடல் கொண்டு விட்டது என்ற செய்தியைச் சிலரிடம் சொல்ல, அது நகரமெல்லாம் பரவிவிட்டது. அச்செய்தி உண்மைதானா என்று அறிய அதிகாலையில் அம்மாலுமிகளில் ஒருவனைச் சூடாமணி விஹாரத்தின் பிரதம பிக்ஷு அழைத்து வரச் செய்தார். அவன் தான் அறிந்ததை அறிந்தபடி கூறினான். "சுழற்காற்று அடித்த போது இளவரசர் கடலிலே குதித்தவர் திரும்பி வரவேயில்லை" என்று துயரக் குரலிலே சொன்னான்.

அப்போது அக்கூட்டத்திலே விம்மி அழும் குரல்கள் பல எழுந்தன.

பிரதம பிக்ஷுவின் கண்களிலிருந்து கண்ணீர் அருவியாகப் பெருகித் தாரை தாரையாக வழிந்தது.

அவர் குனிந்த தலை நிமிராமல் படிகளில் ஏறிச் சென்று சைத்யத்தைத் தாண்டி விஹாரத்துக்குள் பிரவேசித்தார். மற்ற பிக்ஷுக்களும் அவரைத் தொடர்ந்து சென்றார்கள். சேந்தன் அமுதனும் அவர்களோடு வந்ததை ஒருவரும் கவனிக்கவில்லை.

பிரதம பிக்ஷு மற்றவர்களைப் பார்த்துச் சொன்னார்: - "புத்த பகவானின் கருணை இப்படியா இருந்தது? பற்பல மனக்கோட்டைகள் கட்டிக் கொண்டிருந்தேனே? சக்கரவர்த்தியைப் பார்க்கச் சமீபத்திலே தஞ்சாவூருக்குப் போயி



ருந்தேன். பாருங்கள்! அச்சமயம் இலங்கையில் அருள்மொழி வர்மரின் அற்புதச் செயல்களைப் பற்றிக் கூறினேன். அதையெல்லாம் இளைய பிராட்டி குந்தவை தேவியும் கேட்டுக் கொண்டிருந்தார். பிறகு என்னைத் தனியாக வரவழைத்து இந்த விஹாரத்தையொட்டி ஆதுரசாலை ஒன்று ஏற்படுத்த வேண்டும் என்றும் அதற்குத் தேவையான நிவந்தங்கள் அளிப்பதாகவும் கூறினார். அது மட்டுமா? 'ஆச்சாரியரே! நாட்டில் பலவாறு பேச்சுக்கள் நடந்து கொண்டிருப்பதைக் கேட்டிருப்பீர்கள். ஒருவேளை இளவரசர் சூடாமணி விஹாரத்தில் சிலநாள் விருந்தாளியாக இருக்கும்படி நேரும். அவரை வைத்துப் பாதுகாக்க முடியுமா? என்று குந்தவைப் பிராட்டி கேட்டார். 'தேவி! அத்தகைய பேறு எங்களுக்குக் கிடைத்தால் கண்ணை இமை காப்பது

போல் வைத்துப் பாதுகாப்போம்' என்று கூறினேன். என்ன பயன்! இளவரசர் கடலில் மூழ்கினார்! இந்த நாட்டிலுள்ள நல்லவர்களின் மனோரதமெல்லாம் முழுகிவிட்டது! சமுத்திரராஜன் இவ்வளவு பெருங்கொடுமையைச் செய்ய எப்படித் துணிந்தான்? அக்கொடியவனைக் கேட்பார் இல்லையா?'' என்று கதறினார்.

மற்ற பிக்ஷுக்கள் அனைவரும் மௌனமாகக் கண்ணீர் பெருக்கினார்கள்.

தலைமைப் பிக்ஷு பேசி நிறுத்தியதும் சிறிது நேரம் அங்கே மௌனம் குடி கொண்டிருந்தது.

சேந்தன் அமுதன் அதுதான் சமயம் என்று புத்த பிக்ஷுக்களிடையே புகுந்து ஆச்சாரியரை அணுக யத்தனித்தான். உடனே அவனைப் பலர் தடுத்தார்கள். ''இவன் யார்? இங்கே எப்படி வந்தான்?'' என்று ஒருவரையொருவர் கேட்டுக் கொண்டார்கள்.

''ஐயா! அடியேன் பெயர் சேந்தன் அமுதன். தஞ்சையைச் சேர்ந்தவன். உங்கள் தலைவரிடம் ஒரு விஷயம் சொல்ல வேண்டும்!'' என்றான்.

"சொல், சொல்!'' என்றார்கள் பலர்.

அவனுடைய தயக்கத்தைப் பார்த்து விட்டு ஆச்சாரியர், ''இவர்களுக்குத் தெரியக்கூடாத ரகசியம் ஒன்றுமில்லை; சொல்!'' என்றார்.

''ஐயா! நோயாளி ஒருவரை அழைத்து வந்திருக்கிறேன்!''

"அது யார் நோயாளி? என்ன நோய்? எங்கே விட்டிருக்கிறாய்?''

"விஹாரத்தின் நடு முற்றத்தில் விட்டிருக்கிறேன்...''

''எப்படி அங்கே வந்தாய்?''

''கால்வாய் வழியாக நோயாளியைப் படகில் கொண்டு வந்தேன். நடுக்கும் குளிர்க் காய்ச்சல். தாங்கள் உடனே...''

''பகவானே! நடுக்கும் சுரம் தொற்று நோய் ஆயிற்றே! இங்கே ஏன் அந்த நோயாளியை அழைத்து வந்தாய்? அதிலும் நல்ல சமயம் பார்த்து...!''

"ஆச்சாரியா! அசோக சக்கரவர்த்தி புத்தமதத்தினர் என்று இதுகாறும் நினைத்திருந்தேன். இப்போது இல்லை என்று தெரிகிறது...''

''அது ஏன் அப்படிக் கூறுகிறாய்?''

"அசோக ஸ்தம்பம் ஒன்றை நான் காஞ்சிக்கு அருகில் பார்த்தேன். அதில் நோயாளிக்குச் சிகிச்சை செய்வதை முதன்மையான தர்மமாகச் சொல்லியிருக்கிறது. நீங்களோ இப்படி விரட்டி அடிக்கிறீர்கள்!'' என்றான் அமுதன்.

ஆச்சாரிய பிக்ஷு மற்றவர்களைப் பார்த்து, ''கொஞ்சம் பொறுங்கள்; நான் போய்ப் பார்த்துவிட்டு வந்து சொல்லுகிறேன்'' என்று கூறிவிட்டு, ''வா! அப்பனே!'' என்று சேந்தன் அமுதனை அழைத்துக்கொண்டு சென்றார்.

விஹாரத்தின் நடுமுற்றத்தில் கால்வாய்க்கு அருகில் ஒரு யுவனும் யுவதியும் இருப்பதைப் பார்த்துப் பிக்ஷு திடுக்கிட்டார். ''இது என்ன காரியம் செய்யத் துணிந்தீர்கள்? இந்த விஹாரத்துக்குள் ஸ்திரீகளே வரக் கூடாதே! பிக்ஷுணிகளுக்குக் கூட வேறு தனிமடம் அல்லவா கட்டியிருக்கிறது?''

அருகில் போய் அந்த இளைஞன் யார் என்பதை உற்றுப் பார்த்ததும் பிக்ஷு திகைத்துப் போனார் என்று சொன்னால் போதாது! வியப்பினாலும் களிப்பினாலும் அவரால் சிறிது நேரம் பேச முடியவில்லை.

சந்தேக நிவர்த்திக்காக, ''இளவரசர் அருள்மொழி வர்மர்தானா?'' என்று சேந்தன் அமுதனைக் கேட்டார்.

இது இளவரசர் காதில் விழுந்தது. "இல்லை. ஆச்சாரியரே! இல்லை! நான் இளவரசனுமில்லை. ஒன்றுமில்லை. இந்தப் பெண்ணும் இந்தப் பிள்ளையுமாகச் சேர்ந்து என்னைப் பைத்தியமாக அடிக்கப் பார்க்கிறார்கள். நான் ஓர்

ஓடக்காரன். சற்று முன் இந்தப் பெண்ணைப் பார்த்து, "பெண்ணே! என்னை மணம் புரிந்து கொள்வாயா? இருவரும் படகில் ஏறித் தூர தேசங்களுக்குப் போகலாம்' என்றேன். இவள் ஏதேதோ பிதற்றினாள். நான் உலகத்தை



ஒரு குடை நிழலில் ஆளப் பிறந்தவனாம்! ஏழை வலைஞர் குலப் பெண்ணாகிய இவன் என்னை மணந்து கொள்ள மாட்டாளாம். நான் சுகமாயிருந்தால் இவளுக்குப் போதுமாம். வருங்காலத்தில் என்னுடைய மகத்தான வெற்றிகளைக் கேட்டு இவள் மகிழப் போகிறாளாம். எப்படியிருக்கிறது கதை! உண்மையில் எனக்குச் சித்தப் பிரமையா? இவர்களுக்கா?''

சேந்தன் அமுதன் ஆச்சாரிய பிக்ஷுவின் காதோடு ஏதோ கூறினான். அதற்கு முன்னாலேயே இளவரசர் சுரவேகத்தினால் நினைவிழந்த நிலையில் பேசுகிறார் என்பதைப் பிக்ஷு உணர்ந்திருந்தார். குந்தவை தேவி தம்மிடம் இளவரசருக்கு அடைக்கலம் தரும்படிக் கேட்டிருந்ததும் அவருக்கு நினைவு வந்தது.

மற்ற பிக்ஷுக்களைப் பார்த்து அவர், "இந்தப் பிள்ளைக்கு விஷ சுரம்தான் வந்திருக்கிறது. இவனை வெளியில் அனுப்பினால் இன்னும் ஆயிரக்கணக்கானவர்களுக்கு வந்து விடும். இலங்கையில் எத்தனையோ ஆயிரம் பேர் இந்தச் சுரத்தினால் இறந்து போனார்கள். ஆகையால் இந்த இளைஞனை என் அறைக்கு அழைத்துப் போய் நானே பணிவிடையும் சிகிச்சையும் செய்யப் போகிறேன். இடையில் சுர வேகத்தினால் இவன் ஏதாவது பிதற்றினால் அதை நீங்கள் பொருட்படுத்த வேண்டாம்'' என்றார்.

உடனே பிக்ஷு இளவரசர் அருகிலே நெருங்கி ஒரு கையினால் அவரை அணைத்துத் தூக்கினார். சேந்தன் அமுதன் இன்னொரு பக்கத்தில் இளவரசரைப் பிடித்துக்கொண்டு உதவினான். எல்லாரும் படிகளில் ஏறிச் சென்றார்கள்.

இதோ, இன்னும் சில விநாடி நேரத்தில் படிக்கட்டு முழுவதும் ஏறிவிடுவார்கள். கதவைத் திறந்துகொண்டு உள்ளே பிரவேசிப்பார்கள். பிறகு கதவு சாத்தியாகிவிடும். சாத்தினால் சாத்தியதுதான். அப்புறம் அவரைப் பார்க்க முடியாது.

பூங்குழலி எதிர்பார்த்தபடியே நடந்தது. மாடிப்படி ஏறியதும் கதவு திறந்தது. சேந்தன் அமுதனை மட்டும் வெளியில் நிறுத்தித் தலைமைப் பிக்ஷு ஏதோ கூறினார். பிறகு திறந்த கதவு வழியாக எல்லோரும் பிரவேசித்தார்கள்.

கதவு படார் என்று சாத்திக் கொண்டது. அது பூங்குழலியின் இதயமாகிற கதவையே அடைப்பது போலிருந்தது.

இனி இந்தப் பிறவியில் இளவரசரைப் பார்க்கலாம் என்ற நிச்சயமில்லை. அடுத்த ஜன்மத்திலாவது அத்தகைய பாக்கியம் கிடைக்குமா? - இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டே இளவரசர் மறைவதைப் பார்த்துக்கொண்டு நின்றாள் பூங்குழலி.

## பதினொன்றாம் அத்தியாயம்

# கொல்லுப்பட்டறை

வந்தியத்தேவன் குதிரையைத் தட்டி விட்டான். பழையாறையைக் குறியாக வைத்துக்கொண்டு போய்க் கொண்டிருந்தான். பழையாறையிலிருந்து வந்த பாதை ஒருவாறு ஞாபகம் இருந்தபடியால் யாரையும் வழிகூடக் கேளாமல் உத்தேசமாகத் திசை பார்த்துக்கொண்டு சென்றான். முதலில் கொஞ்ச தூரம் காட்டுப்பாதை வழியே சென்றான். குதிரை இதனால் மிகவும் கஷ்டப்பட்டுப் போனதை அறிந்தான். வல்லவரையனுக்கும் களைப்பு அதிகமாகவே

இருந்தது. அவன் சிறிது நேர
மாவது அயர்ந்து தூங்கிப் பல
தினங்கள் ஆகிவிட்டன. அவ்வப்
போது கண்ணை மூடிக் கொண்டு
ஆடி விழுந்ததைத் தவிர நிம்மதியாக
ஓரிடத்தில் படுத்துத் தூங்கினோம்
என்பதே கிடையாது. பழையாறைக்
குப் போய் இளவரசியிடம் செய்
தியைச் சொல்லிவிட்டால் அப்புறம்
அவனுடைய பொறுப்புத் தீர்ந்தது.
நிம்மதியாகத் தூங்கலாம். வெகுநேரம்
தூங்கலாம்; ஏன், சென்று போன
தினங்களுக்கும் சேர்த்து நாள் கணக்
கில் தூங்க வேண்டும் என்று திட்ட
மிட்டான்.

இளவரசி குந்தவையிடம்,
''தாங்கள் கூறிய பணியை
நிறைவேற்றிவிட்டேன்''
என்று சொல்லும்போது
தனக்கு ஏற்படக்கூடிய
மகிழ்ச்சியை அவன்
எண்ணிப் பார்த்தான்.
தேவியின் முகம்
அதைக் கேட்டு எவ்
வண்ணம் மலர்ந்து
பொலியும் என்பதை
நினைத்தான். அந்த
நினைவு அவனுக்கு
ரோமாஞ்சனம்
உண்டு பண்ணியது.

இன்னொரு விஷ
யமும் அவனுக்கு
நினைவு வந்தது.
காஞ்சியிலிருந்து புறப்
பட்டதிலிருந்து எத்
தனை பொய்யும் புனை
சுருட்டும் அவன்
சொல்லியிருக்கிறான்?
அவசியம் நேரிட்ட
தனால்தான் கூறினான்.
ஆயினும் அதையெல்
லாம் நினைக்கும்
போது அவனுக்கு உள்
ளமும் உடலும் குன்
றிப் போயின. இள
வரசர் அருள்



மொழிவர்மரோடு சிறிது காலம் பழகிய தனால் அவனுடைய மனப்போக்கே மாறிப் போயிருந்தது. இராஜரீகக் காரியங்களில் ஈடுபடுகிறவர்களுக் குச் சாணக்கிய தந்திரங்கள் தெரிந் திருக்க வேண்டும் என்று அவன் கருதியிருந்தான். அத்தகைய இராஜரீக தந்திரங்களின் மூலமாக அவனு டைய முன்னோர்கள் இழந்துவிட்ட ராஜ்யத்தைத் திரும்பப் பெறலாம் என்ற ஆசையும் அவனுக்கு இருந்தது. அந்த எண்ணமெல்லாம் இப்போது மாறி விட்டது. இளவரசர் அருள்மொழி வர்மரின் நேர்மையையும் சத்திய திரத்தையும் பார்த்த பிறகு அவனுக்குப் பொய் புனைசுருட்டுகளில் வெறுப்பே உண்டாகி விட்டது. அவரைக் காப்பாற்றுவதாக எண்ணிக்கொண்டு மந்திரவாதி யின் காது கேட்க நேற்றிரவு அவன் கூறிய பொய்யையும் எண்ணிக் கொண்டான். அதனால் ஏதாவது விபரீதம் நேராமல் இருக்க வேண்டுமே என்று நினைத்தபோது அவன் நெஞ்சு துணுக்கமுற்றது. அதை வேறு யாராவது கேட்டிருந்தால், ஒருவேளை குந்தவை தேவியிடமே யாரேனும் சொல்லி வைத்தால்? - இளையபிராட்டி நம்பி விட மாட்டாள்! ஆயினும் எவ்வளவு பெரிய விபத்து?

இனி, இவ்வாறெல்லாம் இல்லாத தைப் புனைந்து கூறுவதையே விட்டு விட வேண்டும். உண்மையைச் சொல்ல வேண்டும்; அதனால் கஷ்டம் வந்தால் சமாளிக்க வேண்டும். அந்த வீர வைஷ் ணவனைப் போன்றவர்களும், ரவி தாஸனைப் போன்றவர்களும் ஒற்றர் வேலை செய்யட்டும். நமக்கு என்னத்திற்கு அந்தத் தொல்லை? வாளின் துணை கொண்டு நமக் குக் கிடைக்கும் வெற்றி கிடைக் கட்டும். அதுவே போதும். அத னால் உயிரை இழந்தாலும் சரி தான். தந்திர மந்திரங்களையெல் லாம் இனி விட்டுவிட வேண்டியது தான்.



இவ்வாறு எண்ணமிட்டுக் கொண்டே சென்றதில் குதிரையின் வேகம் தடைப்பட்டதை அவன் சிறிது நேரம் கவனிக்கவில்லை. ஏன், குதிரை மீதிருந்து சிந்தனை செய்து கொண்டே போனதில் கொஞ்சம் கண்ணயர்ந்தும் விட்டான். குதிரை ஓரிடத்தில் தடுமாறிக் குனிந்தபோது அவன் திடுக்கிட்டு விழித்துக்கொண் டான். குதிரை தனது முன்னங்கால் ஒன் றைத் தரையில் ஊன்றி வைக்க முடியா மல் தத்தளித்தது தெரிந்தது. உடனே கீழே இறங்கினான். குதிரையைத் தட்டிக் கொடுத்துவிட்டு ஊனமடைந்த தாகத் தோன்றிய முன்னங்காலை எடுத்துப் பார்த்தான். அதன் அடிப்புறத் தில் ஒரு சிறிய கூரிய கல் பொத்துக் கொண்டிருந்தது. அதை லாகவமாக எடுத்து எறிந்தான். நல்லவேளை; பெரிய காயம் ஒன்றும் படவில்லை. மறுபடியும் குதிரையைத் தட்டிக் கொடுத்து உற் சாகப்படுத்திவிட்டு அதன் முதுகின் மீது ஏறிக் கொண்டான். கப்பலில் அரபு நாட்டார் பேசிக் கொண்டது நினைவு வந்தது.

**"தமிழ்நாட்டார் கொடூரமானவர் கள்; அறிவும் இல்லாதவர்கள்! குதிரை களின் குளம்புக்குக் கவசம் அடிக்கா மல் வெறுங்காலினால் ஓடச் செய் கிறார்கள். அப்படி ஓடும் குதிரைகள் எத்தனை நாள் உயிரோடிருக்கும்?"**

இதை நினைத்துக்கொண்டே வந்தியத்தேவன் குதிரையை ஓட்டினான். வீரர்கள் போர்க்களத்துக் குப் போகும்போது மார்பிலே கவசம் தரிப்பார்கள். குதிரைக் குளம்புக்கு இரும்புக் கவசம் போடுவது என்பது அதிசயமான காரியந்தான். ஆயினும் அம்மாதிரி வேறு தேசங்களில் செய் வதுண்டு என்று முன்னமே கேள்விப் பட்டிருந்தான். முதன்முதலாக எதிர்ப் படும் கொல்லுப்பட்டறையில் இதைப் பற்றிக் கேட்க வேண்டியதுதான். முடி யுமானால் இந்தக் குதிரையின் குளம் புக்கே கவசம் அடித்துப் பார்க்கலாம்.

இல்லாவிடில், இது பழையாறைவரை போய்ச் சேர்வதே கடினம். நடுவில் இது விழுந்துவிட்டால் வேறு குதிரை சம்பாதிக்க வேண்டும். எப்படிச் சம்பாதிப்பது? யாரிடமாவது திருடத்தான் வேண்டும். சிச்சி! அந்த நினைவே வந்தியத்தேவனுக்கு வெட்கத்தை உண்டாக்கியது.

காட்டுப்பாதையிலிருந்து உத்தேசமாகக் குதிரையைத் திசை மாற்றி விட்டுக் கொண்டு போய் வந்தியத்தேவன் இராஜபாட்டையை அடைந்தான். வந்தது வரட்டும்; இனிமேல் இராஜபாட்டை வழியாகத்தான் போக வேண்டும். தன்னைத் தெரிந்தவர்கள் இந்தப் பக்கத்தில் இருக்க முடியாது. பழுவேட்டரையர் பரிவாரங்கள் பின்னாலேதான் வரும். மந்திரவாதியும் அப்படித்தான். ஆகையால், அபாயம் ஒன்றுமில்லை. மேலும், இராஜபாட்டையோடு போனால் கொல்லுப் பட்டறை எங்கேயாவது இருக்கும். அதில் குதிரைக் குளம்புக்கு இரும்புக் கவசம் போட முடியுமா என்று பார்க்கலாம்.

வந்தியத்தேவன் எதிர்பார்த்தது வீண்போகவில்லை. சிறிது தூரம் சென்றதும் ஒரு கிராமம் தென்பட்டது. கிராமத்தில் ஏதோ ஒருவிதக் கிளர்ச்சி ஏற்பட்டிருந்ததாகத் தோன்றியது. ஒரு பக்கத்தில் வீதிகளிலும் வீடுகளிலும் தோரணங்கள் கட்டி அலங்கரித்திருந்தார்கள். ஒருவேளை பெரிய பழுவேட்டரையர் இந்தப் பக்கமாய் வரப் போகிறார் என்று அறிந்து இப்படி ஊர் அலங்காரம் செய்திருக்கலாம். பழுவேட்டரையரும் அவர் பரிவாரமும் வருவதற்குள் தான் வெகு தூரம் போய் விடலாம் என்பது நிச்சயம்.

மற்றொரு பக்கத்தில் கிராமத்து ஜனங்கள், ஸ்திரீகள் - புருஷர்கள், வயோதிகர்கள், சிறுவர் சிறுமிகள் அனைவரும், - அங்கங்கே கும்பல் கும்பலாக நின்று கவலையுடன் பேசிக் கொண்டிருந்தார்கள். விஷயம் என்னவாயிருக்குமென்று அவனால் ஊகிக்க முடியவில்லை. அவர்களில் சிலர் குதிரையில் வருகிறவனைக் கண்டதும் அவனை நிறுத்தும் எண்ணத்தோடு அருகில் வந்தார்கள். வந்தியத்தேவன் அதற்கு இடங்கொடாமல் குதிரையைத் தட்டி விட்டுக் கொண்டு மேலே போனான். வீண் வம்புகளில் அகப்பட்டுக் கொள்ள அவன் இஷ்டப்படவில்லை.

கிராமத்தைத் தாண்டியதும் சாலை ஓரத்தில் கொல்லுப் பட்டறை ஒன்று இருக்கக் கண்டான். அதைக் கடந்து மேலே செல்ல அவனுக்கு மனம் வரவில்லை. குதிரையை நிறுத்தி விட்டுப் பட்டறைக்குள் சென்றான்.

பட்டறைக்குள் கொல்லன் ஒருவன் வேலை செய்து கொண்டிருக்கக் கண்டான். ஒரு சிறுவன் துருத்தி ஊதிக் கொண்டிருந்தான். வந்தியத்தேவன் உள்ளே பிரவேசித்த அதே சமயத்தில் இன்னொரு மனிதன் பின்பக்கமாக மறைந்ததாகவும் அவனுக்குத் தோன்றியது. ஆனால் இதிலெல்லாம் அவன் கவனம் செல்லவில்லை. கொல்லன் கையில் வைத்துக் கொண்டிருந்த வாள் அவனுடைய கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்ந்தது. அது ஓர் அபூர்வமான வாள்; பட்டறையில் வைத்துக் கொல்லன் அதைச் செப்பனிட்டுக் கொண்டிருந்ததாகத் தோன்றியது. அதன் ஒரு பகுதி பளபளவென்று வெள்ளியைப் போல் பிரகாசித்தது. இன்னொரு பகுதி நெருப்பிலிருந்து அப்போதுதான் எடுக்கப்பட்டிருந்தபடியால் தங்க நிறச் செந்தழல் பிழம்பைப் போல் ஜொலித்தது.

''வாள் என்றால், இதுவல்லவா வாள்?'' என்று வந்தியத்தேவன் தன் மனத்திற்குள் எண்ணி வியந்தான்.

(தொடரும்)

# பத்திரிகை



• தேவதாஸ் காந்தி

**கா**ந்தி மகாத்மா உலகத்தில் ஒப்பற்ற பத்திரிகாசிரியராக விளங்கினார். அவருடைய புதல்வர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி இன்று இந்தியாவின் தலை சிறந்த பத்திரிகாசிரியர்களில் ஒருவராக விளங்குகிறார். புது டில்லியில் வெளியாகும் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" என்னும் செல்வாக்கு வாய்ந்த தினப் பத்திரிகையின் ஆசிரியர் அவர். சென்ற இரண்டு வருஷ காலமாக அகில இந்தியப் பத்திரிகாசிரியர் மகாநாட்டின் தலைவர் பதவியை வகித்து வருகிறார்.

பத்திரிகாசிரியர் தலைவர் ஸ்ரீ தேவதாஸ் காந்தி சென்ற வாரத்தில் சென்னை மாநகருக்கு விஜயம் செய்திருந்தார். அது சமயம் பத்திரிகைக்காரர் கூட்டமொன்றில் ஓர் அரிய பிரசங்கம் செய்தார். பத்திரிகைகளின் சுதந்தரம் பற்றிப் பேசினார். பத்திரிகைத் தொழிலாளிகளின் நலன்களைப் பற்றிப் பேசினார். அத்துடன் நின்றுவிடவில்லை. பத்திரிகாசிரியர்கள் கடைப்பிடிக்க வேண்டிய பத்திரிகை தர்மத்தையும் பற்றிப் பேசினார். தற்சமயம் பத்திரிகை உலகத்துக்கு அவசியம் வேண்டிய பேச்சு அது; தமிழ் நாட்டுக்கு மிக முக்கியமான பேச்சு அது.

• • •

**த**மிழ்நாடு பண்பாட்டில் சிறந்த நாடு. தமிழ் மக்கள் பண்பாட்டில் சிறந்த மக்கள். பண்பாடு என்றால் என்ன? ஒரு நாட்டு மக்களின் பண்பாட்டு உயர்வை எதிலிருந்து அறியலாம்? அவர்களுடைய பேச்சின் தரத்திலிருந்து அறியலாம்; அவர்களது எழுத்தின் ரகத்திலிருந்து அறியலாம்.

யாரைப் பற்றியும் வீண் அவதூறு பேசாமலிருப்பது பண்பாட்டுக்கு அடையாளம். எதிரியைப் பற்றிப் பேசும்போது கூட, மரியாதையுடன் பேசுவது பண்பாட்டுக்கு அடையாளம். ஆபாசமான வார்த்தை எதையும் பேசக் கூசுவது பண்பாட்டிற்கு அறிகுறி. அஸங்கியமான விஷயம் எதையும் எழுதுவதற்கு அடியோடு மறுப்பது உயர்ந்த பண்பாட்டின் அறிகுறி.

தமிழர்கள் சிறந்த பண்பாட்டுக்கு உதாரணமானவர்கள். பேச்சிலும் எழுத்திலும் தூய்மையைக் கடைப்பிடித்து ஆபாசத்தை வெறுப்பவர்கள். எதிரிகள் விஷயத்திலும் மரியாதையுடன் நடந்து கொள்கிறவர்கள்.

நாலு பேர் உள்ள இடத்தில் ஸ்திரீ புருஷ சம்பந்தத்தைப் பற்றிப் பேசுவதற்குத் தயங்குவார்கள், பேச அவசியம் நேர்ந்தாலும் மிக நாஸூக்காகப் பேசுவார்கள். ஸ்திரீகள் உள்ள இடத்தில் அசந்தர்ப்பமாக ஒருவன் ஏதாவது பேசி விட்டால், அதைக் காட்டிலும் அவனுக்கு அவமானம் வேண்டியதில்லை. இது தமிழர்களுடைய பண்பாடு; தமிழர்களுடைய மேன்மை; தமிழர்களுடன் பிறந்த இயற்கைக் குணம்.

ஆனால் சில காலமாகத் தமிழ் மக்களுடைய பண்பாட்டுக்கும் இயற்கைக் குணத்துக்கும் முற்றும் மாறான காரியங்கள் சில நடந்து கொண்டு வருகின்றன. தமிழ் டாக்கிகளில்

ஆபாசமான காட்சிகள் வருகின்றன. ஆபாச மான வார்த்தைகள் பேசப்படுகின்றன. தெய் வங்களைக்கூட ஆபாசங்களுக்கு உட்படுத்தி விடுகிறார்கள். இந்த மாதிரி காட்சிகளை ஆயிரக் கணக்கான ஸ்திரீ- புருஷர்கள் உட்கார்ந்து சினிமாக் கொட்டகைகளில் பார்க்கிறார்கள். ஆபாச வார்த்தைகளைக் கேட்டுச் சிரிக்கிறார் கள். கொஞ்ச நாளைக்கெல்லாம் அந்த மாதிரி காட்சிகளும் பேச்சுகளும் சகஜமாகி விடுகின் றன; தமிழரின் பண்பாடு ஈனம் அடைகிறது.

ஆபாச டாக்கியினால் தமிழர்களின் பண் பாட்டுக்குக் கேடு வந்தது. அதைவிட அதிகமாக ஆபாசப் பத்திரிகைகளின் மூலமாக வந்தது. ஸினிமாக்காரர்களின் 'சொந்த வாழ்க்கை'களை ஆதாரமாகக் கொண்டு முதலில் அத்தகைய ஆபாசப் பத்திரிகைகள் எழுந்தன. பிரபலஸ்தர் களைப் பற்றிய நல்ல விஷயமானாலும், கெட்ட விஷயமானாலும் அதைத் தெரிந்து கொள்ள ஆவல் கொள்வது மனித இயற்கை. அந்த மனித இயற்கையையொட்டி ஆபாசப் பத்திரிகைகளுக் குக் கிராக்கி ஏற்பட்டது.

ஒரு மனிதன், சினிமாக்காரனாயினும் வேறு யாராயினும் ஒழுக்கக் கேடு அடைந்தால், அதற் குரிய தண்டனை அவனை வெகு சீக்கிரத்தில் வந்து அடைகிறது. இது புருஷனுக்கும் சரிதான்; ஸ்திரீக்கும் சரிதான், அவரவர்களுடைய துன் மார்க்கத்தின் பலனை அவரவர்களே சீக்கிரத் தில் அநுபவிக்கிறார்கள். துன்மார்க்கமும் அதன் தீய பலனும் அவர்களுடனே போய்த் தொலைகின்றன.

# தர்மம்

ஆனால் ஒரு மனிதனுடைய துன் மார்க்கத்தைக் கண்டுபிடித்து வெளிப் படுத்துவதாகச் சொல்லிப் பத்திரிகையில் வெளி யிடுவதன் பயன் என்ன? பிரபலஸ்தர்களைப் பற்றித் தெரிந்து கொள்ளும் ஆசையினால் அதை ஆயிரக்கணக்கானவர்கள் படிக்கிறார்கள். ஸ்திரீகள் படிக்கிறார்கள்; இளம் பிள்ளைகள் படிக்கிறார்கள். எல்லாருடைய மனங்களும் அசுத்தமாகின்றன.

ஆபாசப் பத்திரிகைக்காரர்கள் சினிமாக் காரர்களின் சொந்த வாழ்க்கை விவரங்களோடு விடுவார்களா?

அந்த விஷயம் பழசாய்ப் போய் விட்டால், அதாவது, சினிமாக்காரர்களின் அந்தரங்க வாழ்க்கையில் ஜனங்களுக்குச் சிரத்தை குன்றி விட்டால், அடுத்தபடி தேசத் தலைவர்களைப் பிடித்துக் கொள்கிறார்கள். லட்சக்கணக்கான மக்கள் தெய்வமெனப் போற்றும் மகான்களைக் குறித்து ஆபாசமான பொய்களை எழுதுகிறார் கள்!

இன்னும் சில பத்திரிகையாளர்கள் வேறு ஒரு நவீன முறையைக் கையாளுகிறார்கள். உண்மைக் கதை என்று சொல்லிக்கொண்டு பொய்க் கதைகளை ஆபாசமான விவரங் களுடனும் வர்ணனைகளுடனும் எழுதுகிறார் கள்.

உண்மைக் கதையாக இருந்தால் என்ன? கட்டுக் கதையாயிருந்தால் என்ன? ஆபாசம் ஆபாசமேயல்லவா?

பத்திரிகைத் தொழிலைப் பிடித்த இந்தப் பெருந் தீமை வட இந்தியாவில் ஓரளவு பரவியிருக்கிறது.

பண்பாட்டில் சிறந்த தமிழ்நாட்டிலும் அவ் வப்போது மேற்படி தீமை தலைகாட்டுகிறது. சிற்சில சமயம் ஓங்கி வளர்கிறது என்றுகூடச் சொல்லலாம்.

சிறு பிள்ளைகள் வாலிபப் பருவத்தை அடையும் சமயத்தில் அவர்களுடைய மனம் ஸ்திரீ புருஷ சம்பந்தம் பற்றிய விவரங்களில் செல்லுவது சகஜம். அப்படிச் செல்லாமல் தடுத்து வாலிபர்களுடைய கவனத்தை உடற் பயிற்சி, கலை உணர்ச்சி, இலக்கிய ஆராய்ச்சி, சமூகத் தொண்டு ஆகியவற்றில் செல்லும்படி செய்ய வேண்டும். அப்படிச் செய்தால் அத் தகைய வாலிபர்கள் தீர புருஷர்களாக வளர்ந்து வாழ்க்கையில் அரும் பெரும் செயல்களைச் செய்யக் கூடியவர்களாவார்கள்.

ஆனால் ஆபாசப் பத்திரிகைகளும் பிரசுரங் களும் வாலிபர்களுடைய கவனத்தை மிகக் கீழான காரியங்களில் இழுத்து அவர்களுடைய முன்னேற்றத்தைத் தடை செய்கின்றன. மேற்படி தீமையினால் அதல பாதாளத்தில் விழுந்து நாச மடைகிறவர்களும் உண்டு. பண்பாட்டுக்கு விளையும் கேட்டைப் பற்றிச் சொல்ல வேண்டி யதில்லை.

• • •

ஸ்ரீ தேவதாஸ் காந்தி பத்திரிகைக்காரர் களுக்குச் செய்த பிரசங்கத்தில் ஆபாசப் பத்திரி கைகளைப் பற்றித் தீவிரமாக எச்சரிக்கை செய் தார். அவை வளர விடாமல் தடுக்க வேண்டிய அவசியத்தை வற்புறுத்தினார். இது விஷயத்தில் ''பத்திரிகைக்காரர்களுக்கும் கடமை உண்டு; பொது மக்களுக்கும் கடமை உண்டு'' என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டினார்.

ஆபாசப் பத்திரிகைகள் எவ்வளவு தூரத்

## கல்கி கலெக்ஷன்

## அமரர் கல்கி

துக்குப் போகும் என்பதற்கு ஒரு பயங்கரமான உதாரணத்தையும் ஸ்ரீ தேவதாஸ் எடுத்துச் சொன்னார். "பண்டித ஜவஹர்லால் குடித்துவிட்டுக் கூத்தாடினார்" என்று ஒரு பத்திரிகையில் எழுதியிருந்ததாம்! இத்தகைய பத்திரிகை வெளியான கௌரவம் தமிழ்நாட்டைச் சேர்ந்ததுதானாம்!

"பத்திரிகைச் சுதந்தரம் வேண்டும் என்று கேட்கும் நாம் இம்மாதிரி ஆபாச அவதூறுகளைத் தடுக்க ஏற்பாடு செய்ய வேண்டாமா? நாமும் தடுக்க மாட்டோம், சர்க்காரும் நடவடிக்கை எடுக்கக் கூடாது என்று சொன்னால், போகும் வழி என்ன? பண்டித ஜவாஹர்லால் நேரு இந்த ஆபாசப் பத்திரிகைக்காரர் மீது அவதூறு வழக்குத் தொடருவதா? அல்லது எப்பேர்ப்பட்ட பக்திக்குரிய தேசத் தலைவரைப் பற்றியும் என்ன ஆபாச அவதூறு வேணுமானாலும் எழுதி அச்சிடலாம் என்று விட்டு விட்டிருப்பதா?" என்று ஸ்ரீ தேவதாஸ் கேட்டார். அப்படி விட்டு விட்டால் பத்திரிகை உலகத்துக்கே அவமானமும் அழிவும் தேடிக் கொண்டதாகும் என்று எச்சரிக்கை செய்தார்.

• • •

பேசுகிற வார்த்தைக்கு ஜனங்கள் கொடுக்கிற மதிப்பைக் காட்டிலும் அச்சு எழுத்துக்கு அதிக மதிப்புக் கொடுக்கிறார்கள். பத்திரிகையில் அச்சிட்டு வந்தால் அது உண்மையாகத்தான் இருக்கும் என்று நம்புகிறார்கள்.

ஆனால் பத்திரிகைக்காரர்கள் பத்திரிகை தர்மத்தை மறந்து வரம்பு கடந்து செல்லும்போது பத்திரிகைகளிடம் ஜனங்கள் மரியாதையும் நம்பிக்கையும் குறைந்து போய் விடுகின்றன.

சமீபத்தில் அமெரிக்காவில் நடந்த ஜனாதிபதி தேர்தலில் வரம்பு மீறிய பத்திரிகைகளுக்குப் பொது ஜனங்கள் ஒரு பாடம் கற்பித்தார்கள்.

இருபது லட்சம் முதல் நாற்பது லட்சம் வரையில் விற்பனையாகும் பெரிய பெரிய அமெரிக்கப் பத்திரிகைகள் எல்லாம் ஜனாதிபதி தேர்தலில் ட்யூயி என்பவரை ஆதரித்தன. ஆதரித்ததோடு நிற்கவில்லை; ட்யூயிதான் வெற்றியடைவார் என்று உறுதி கூறின.

ஆனால் அத்தகைய பத்திரிகைகளுக்கெல்லாம் அமெரிக்கப் பொதுஜனங்கள் நாமத்தைப் போட்டுவிட்டு ட்ருமனை ஜனாதிபதியாகத் தேர்ந்தெடுத்தார்கள்.

அமெரிக்கப் பத்திரிகைகள் எல்லாம் தங்களுடைய தவறை ஒப்புக்கொண்டு "செய்த தவறுக்காகத் தோப்புக்கரணம் போடத் தயார்" என்று வாசகர்களுக்குத் தெரியப்படுத்தின.

கடைசியாக இந்தியாவுக்கு வந்திருக்கும் 'லைப்' பத்திரிகையின் தலையங்கம், "அமெரிக்காவில் 100-க்கு 90 பத்திரிகைகள் செய்த தவறை நாமும் செய்ததாக ஒப்புக் கொள்கிறோம்; அதற்காக மன்னிப்புக் கோருகிறோம்" என்று ஆரம்பமாகிறது.

பத்திரிகைகள் தங்களுடைய மதிப்பையும் மரியாதையையும் எப்படிக் குறைத்துக் கொள்ளலாம் என்பதற்கு அமெரிக்கப் பத்திரிகைகள் ஜனாதிபதி தேர்தலில் அடைந்த அநுபவம் நல்ல உதாரணம் ஆயிற்று.

• • •

அமெரிக்காவில் உள்ளதைக் காட்டிலும் இந்தியாவிலே பத்திரிகைகளுக்கு அதிக மதிப்பு இருக்கிறது; இன்னமும் இருந்து வருகிறது.

பத்து லட்சம் பிரதி விற்பனையாகும் அமெரிக்கப் பத்திரிகையைக் காட்டிலும் பத்தாயிரம் பிரதி விற்பனையாகும் இந்தியப் பத்திரிகைக்கு அதிகமான செல்வாக்கு உண்டு.

ஆனால் அந்தச் செல்வாக்கு எவ்வளவு காலம் நிலைத்து நிற்கும் என்னும் கேள்வி இப்போது எழுந்திருக்கிறது.

ஆபாசக் குப்பைப் பத்திரிகைகள் ஜனங்களிடையே பரவப் பரவ, எல்லாப் பத்திரிகைகளின் மதிப்பும் செல்வாக்கும் குறையத்தான் செய்யும். "பத்திரிகையில் வந்தால் புளுகாகத்தான் இருக்கும்" என்றும், "பத்திரிகைக்காரனுக்கு விவஸ்தை கிடையாது" என்றும் நாளடைவில் பொது மக்கள் பேசிக் கொள்ள ஏதுவாகும்.

ஆகையினாலேயே, பத்திரிகைச் சுதந்தரம் கோரும் பத்திரிகைக்காரர்கள் ஆபாசக் குப்பைப் பத்திரிகைகளைக் கட்டுப்படுத்த வழி கண்டு பிடிக்க வேண்டும் என்று ஸ்ரீதேவதாஸ் கூறுகிறார்.

பத்திரிகைக்காரர்களால் ஒன்றும் செய்ய முடியாவிட்டால் சர்க்காரை நடவடிக்கை எடுக்கும்படிக் கேட்பதைத் தவிர வேறு வழி என்ன? அப்போது பத்திரிகைச் சுதந்தரம் ஓரளவு பாதிக்கப்பட்டுத்தானே தீரும்?

தமிழ்நாட்டைப் பொறுத்தவரையில் இவ்விதம் சர்க்கார் நடவடிக்கை எடுப்பதற்கு அவசியமில்லாமற் போகும்படி பார்த்துக் கொள்ளுமாறு பத்திரிகாசிரியர்களையும் தொழிலாளர் அனைவரையும் கேட்டுக் கொள்ளுகிறோம்.

அகில இந்திய பத்திரிகாசிரியர் தலைவரான ஸ்ரீ தேவதாஸ் காந்தியின் எச்சரிக்கையை மனதிற் கொண்டு, அவருடைய வேண்டுகோளை நிறைவேற்றி வைக்கும்படி கோருகிறோம்.

எல்லாரும் ஒத்துழைத்து, "தமிழ்ப் பத்திரிகை" என்றாலே "உயர்தரப் பத்திரிகை" என்ற பொருள் ஏற்படுமாறு செய்தால், தமிழ்நாட்டுக்கு எவ்வளவு கௌரவமாயிருக்கும்!

**(கல்கி, ஜனவரி 23, 1949)**



# நீங்கள் விரும்பும் ஆந்திரா சுவை ஊறுகாய்

150 கிராம் பாட்டில்களில்




RUCHI AGRO PRODUCTS PVT. LTD.,
1, Vijayaragava Road, 1st Street,
Chennai - 600 017.



# கேசவர்த்தினி ...
# நீண்ட அடர்த்தியான கூந்தலுக்கான பரம்பரை இரகசியம்



ஊட்டமளிக்கும் கேசவர்த்தினி கூந்தல் தைலம்.
நீங்கள் நாள்தோறும் உபயோகிக்கும் தேங்காய்
எண்ணெயில் சிறிதளவு கேசவர்த்தினியை கலந்து
தேய்த்தால், உங்கள் கூந்தல் நீண்டு, ஒளி கொண்டு
திகழுவதைக் காண்பீர்கள். மேலும் உங்கள் கூந்தல்
அடர்த்தியாகவும், கருமையாகவும் காணப்படும்.
இன்றே ஒரு பாட்டில் கேசவர்த்தினியை
வாங்குங்கள். ஆறே மாதங்களில் அழகு மிளிர்ந்த
கூந்தலை பெறுங்கள்.




## கேசவர்த்தினி
கூந்தல் தைலம்.

**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*



கக்கிரனும் கேதுவும் தான் உங்க பக்கம்; மத்ததெல்லாம் எதிர்ப் பக்கம்! அதால வீண் அலைச்சல், வீண் செலவு, மனக் குழப்பம், உடல் நலம் பாதிப்புன்னு வரத்தான் செய்யும். பிரண்ட்ஸுங்களால கூட சங்கடங்கள் வரலாம்; ஜாக்கிரதையா பழகுங்க. கொடுக்கல், வாங்கல், வீடு, மனை விஷயமெல்லாம் இந்த வாரம் வேண்டவே வேண்டாம். பயணத்தைத் தவிர்த்திடுங்க. நெருப்பு, மின்சாரம், இயந்திரங்கள் பக்கம் நெருங்காம இருக்கறதுதான் நல்லது.

**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*



எல்லாமே திருப்தியா இருந்தா மனசு உற்சாகம் பீறிடத்தானே செய்யும்! அதுதான் நடக்கப் போவுது உங்களுக்கு. எதிர்ப்புகள் ஓடி ஒளியும். உல்லாசம், விருந்து, கேளிக்கைன்னு கலந்துக்கற சான்ஸ் கிடைக்கும். கலைத்துறை சம்பந்தப்பட்டவங்களுக்கு ரசிகர்கள் மத்தியில் புரமோஷன் உறுதி! வியாபாரிகள், விஞ்ஞானிகள், எழுத்தாளர்களுக்கு நல்ல முன்னேற்றம் தென்படும். பண விஷயம் திருப்தியா இருக்கும். திடீர் அதிர்ஷ்டத்தால பணமோ, பொருளோ கிடைக்கற சான்ஸும் இருக்கு. மனைவி மூலமும் ஆதாயம் கிடைக்கும்.

**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*



உங்க நிர்வாகத்திறமை பளிச்சினு தெரியும். புத்திசாலித்தனத்தால சில விஷயங்களைச் சாதிச்சுக் காட்டுவீங்க. பிரண்ஸுங்க உதவு வாங்க. அலுவலகப் பணியாளர்களுக்குப் பதவி யுயர்வு கிடைக்கலாம். தொழிலாளர்களுக்குக் கூடுதல் போனஸ் கிடைக்கலாம். கமிஷன் ஏஜெண்டுகளுக்கும் லாபமான வாரம் தான். ஆனாலும் குழந்தைகளால் செலவுகள் வரலாம். கொடுக்கல் வாங்கலில் சிக்கல் வரவும் சான்ஸ் இருக்கு. பயணத்தாலும் சங்கடங்கள் வரலாம். எச்சரிக்கை அவசியம்.



விருச்சிக ராசிக்காரரான எழுத்தாளர் இந்திரா சௌந்தர்ராஜனுக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகள் கூடி வரப் போவுதாமே?

**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*



உங்க ஆற்றலும் ஆளுமையும் தனித்தன்மையோடு வெளிப்படும் வாரம் இது. முக்கியமானவங்க தொடர்பால, புதிய பதவி, பட்டங்கள், புகழ் கிடைக்கற சான்ஸ் இருக்கு. வேலை தேடியலையறவங்களுக்கு இந்த வாரம் ஓய்வு கிடைச்சுடும். அதாவது வேலை கிடைக்கறதால, வேலை தேடறதிலேர்ந்து ஓய்வு! கவர்மெண்ட் ஆசாமிங்களுக்கு புரமோஷன் கிடைக்கலாம். அரசியல்வாதிகளுக்குத் திடீர் மாற்றங்கள் வரலாம். பண விஷயம் சீராகவே இருக்கும். புதுசா ஏதாவது பொருள் வாங்குவீங்க. குடும்பத்தில் சுப காரியங்களும் நடக்கும். வீண் செலவும் இருக்கும்! பயணம் வேண்டாம்!

# நடக்குமென்பார்,

**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*



மனசுல ஒரு பிரகாசம் தெரியும் உங்களுக்கு. அது ஆன்மீக ஒளின்னு காட்டுக்குப் போயிடாதீங்க. தன்னம்பிக்கை ஒளி. எடுத்த காரியங்களில் வெற்றி கிடைக்கும். சட்டம், காவல் துறையினருக்குப் பாராட்டுகள் உறுதி. சிலருக்குப் பயணத்தில் நன்மை கிடைக்கும். சிலருக்குத் துணிச்சலான காரியங்களில் ஈடுபட்டுப் பாராட்டுப் பெறும் சான்ஸ் கிடைக்கும். குடும்பத்தில் விருந்தும் உற்சாகமும் கூடி வரும். பண விஷயம் ஏற்ற இறக்கமாகவே இருக்குன்றதால, கொடுக்கல் வாங்கலில் உஷாரா இருங்க. புதுப் பொருள்கள் ஏதும் வாங்குவீங்க. வெளிநாட்டுத் தகவல் குஷியானதா இருக்கும்.

**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*



நல்லவங்க தொடர்பும் நல்ல காரியங்களில் ஈடுபாடும் ஏற்படும். பண நடமாட்டம் அதிகரிக்கும். கொடுக்கல் வாங்கலில் வளர்ச்சி தெரியும். குடும்பத்தில் விருந்து கேளிக்

# நடக்கும்!

கைன்னு உற்சாகம் ததும்பும். சிலருக்குப் பயணத்தால் லாபம் கிடைக்கும். உத்தியோகஸ்தர்களுக்குப் புரமோஷனோ இன்க்ரிமென்டோ உறுதியாக் கிடைக்கும். சிலருக்குத் திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் வரலாம். ஆனாலும் அரசியல்வாதிங்க ஜாக்கிரதையா இருக்கணும்.



**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)*

விசேஷமான பலன்கள் எதுவும் சொல்ல முடியலை. மனகல குழப்பம், சலனம் வரத்தான் செய்யும். எதுவானாலும் நிதானம் காட்டுங்க. பிரண்ஸுங்க, சொந்தக்காரங்களால பிரச்னைங்க வரலாம். குறுக்கு வழியில எதையும் சாதிக்க நினைக்காதீங்க. வீண் அலைச்சலுக்கு சான்ஸ் இருக்கு. சொத்து விவகாரத்தில் பிரச்னைகள் வரலாம். கொடுக்கல் வாங்கலில் எச்சரிக்கையா இருங்க. குடும்பத்தில் சுப காரியம் நடக்கும்னாலும் செலவுகள் அதிகமாகும். இருந்தாலும் தக்க சமயத்தில் உதவிகளும் கிடைக்கும்.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

உங்க சாமர்த்தியம், சமயோசிதம், திறமை, தைரியம் எல்லாம் ஒட்டு மொத்தமா பிரகாசிக்கிற வாரம் இது. பண விஷயத்தில் ரொம்பவே அபிவிருத்தி தெரியும். சிலருக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகள் கூடி வரும். வி.ஐ.பிகள், பணக்காரர்களின் உதவி கிடைக்கும். இதுவரை தள்ளிப் போய்க் கொண்டே வந்த காரியம் இந்த வாரம் சக்சஸ் ஆயிடும். அரசாங்க ஊழியர்களுக்கு நல்ல செழிப்பான வாரம் இது. வேலையில்லாதவர்களுக்கு வாய்ப்புகள் கூடி வரும். சிலருக்கு வெளிநாடு போகும் சான்ஸும் இருக்கு.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

எழுத்துத் துறை, இலக்கியத் துறை சார்ந்தவர்களுக்கு நல்ல வாரம். கமிஷன் ஏஜெண்டுகள், வியாபாரிகளுக்கு வருமானம் கூடும். சட்டம், காவல் துறையினருக்குப் பாராட்டுகள் கிடைக்கும்! என்றாலும் குடும்பத்தில்அமைதி குறைவதால் மனத்தில் குழப்பம் குடியேற சான்ஸ் இருக்கு. பண விஷயம் மிகமிக சுமார்தான். அதிர்ஷ்டத்தைச் சுத்தமாவே நம்பக் கூடாது. கணவன் - மனைவிக்குள் சலசலப்புகள் வரலாம். கூட்டுத் தொழில் புரிபவர்கள் எச்சரிக்கையா இருக்கணும். பயணம் வேண்டாம். கண்டதையும் சாப்பிட்டுடாதீங்க. 'நாய்கள் ஜாக்கிரதை' போர்டு இருந்தா அங்க போகவே போகாதீங்க; விஷக்கடிக்கும் சான்ஸ் இருக்கு.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

எடுத்த காரியங்களில் ஜெயிச்சாலே மனசுல ஓர் உற்சாகம் வரத்தானே செய்யும். கூடவே, அதிர்ஷ்டக் காற்றும் உங்க பக்கம் வீசி, பெரியவங்களும் வி.ஐ.பிகளும் உங்களுக்கு உதவிக்கரம் நீட்டினா கேட்கவே வேணாம்தானே! இருந்தாலும் நீங்க சந்தோஷத்திலேயே மூழ்கிக் கிடக்க முடியாது. வீண் அலைச்சலும், சில குறுக்கீடுகளும் வரத்தான் வரும். கூட இருக்கறவங்களாலேயே பிரச்னைகள் வரலாம்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

மனசுக்கினிய காரியங்கள் நடப்பதற்கான சந்தர்ப்பங்கள் கூடிவரும். எதிரிகள் ஓரங்கட்டி ஒதுங்கிடுவாங்க. கோர்ட் சமாசாரம் ஏதும் இருந்தா ஒரு நல்ல திருப்பத்தை எதிர்பார்க்கலாம். குடும்பத்தில் சுபகாரியங்கள் நிகழும். பண நடமாட்டம் அதிகரிக்கும். கலைப் பொருள்கள் ஏதும் உங்களிடம் வந்து சேர சான்ஸ் இருக்கு. கடன் இருக்கறவங்க, இந்த வாரம் அதை செட்டில் பண்ணிட்டு நிம்மதியா இருக்கலாம். வெளிநாட்டுத் தொடர்பால் நன்மை கிடைக்கும்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

கிரக சஞ்சாரம் எதுவும் உங்களுக்குச் சாதகமா இல்லீங்க. அதனால, பிரச்னைகள், காரியத்தடைகள் ஏற்படத் தான் செய்யும். பேச்சில் கவனம் அவசியம். இல்லேன்னா சத்ருவாயிடும். புதியவர்கள் கிட்ட ஜாக்கிரதையா இருக்கணும். சாப்பாட்டு விஷயத்திலும் கவனம் இருக்கணும். அலட்சியம் காட்டினா அறுவைச் சிகிச்சை வரை போகிற சான்ஸும் இருக்கு. புது முதலீடுகள் எதுவும் வேணாம். ●

சமூகத்திலே ஓர் ஆளல்ல தாங்கள். என்றால், மிகக் குறைந்த பேரில் தாங்கள் ஒருவர். எதனால்? என்னை ஒரு சகோதரி என்ற நிலைக்கு ஸ்வீகரித்து ஏன் திருப்திப் படக் கூடாது? நான் மிகைப்படுத்தவில்லை. என்னைப் போன்ற நட்பு நிறைந்த ஒரு சகோதரி தங்களுக்குக் கிட்டமாட்டாள்.

நம்புங்கள். இவைதான் அப்பட்டமான உண்மைகள்.

தங்களுடைய பிச்சுவாக்கத்தி என் இதயத்தில் குத்தி இறங்கிய மறக்க முடியாத அந்த நாளில், நான் சென்னைக்கும் பம்பாய்க்கும் ஒரு நல்ல பேனா அனுப்பி வைக்கும்படி கடிதம் எழுதினேன்.

டிசம்பருக்கு முன்னால் என் இதயத்தோடும் எல்லா அனுக்கிரகங்களோடும் கூடி அதை நான் உங்களுக்குத் தருவேன். அது வாங்கத் தக்கதாயின்.



# ஒரு காதல் கடிதம்

அதுவரை நான் பயன்படுத்தும் பேனாவை ஏற்றுக் கொள்ளுங்கள். யாருக்கும் – குறிப்பாக கே.எஸ்.ஸிடம் காட்ட வேண்டாம். அது சாத்தியமில்லை என்றால் நான் தர மாட்டேன். விவரத்தை பதிலில் எழுதவும்.

கே.எஸ். இன்று என்னிடம் தாங்கள் தங்கள் காலத்தை வெட்டியாகச் செலவழிக்கிறீர்கள் என்று கூறினார். இதற்கு நான்தான் காரணமா? என்னை மன்னியுங்கள்.

தயவு செய்து எழுதுங்கள், தொடர்ந்து எழுதுங்கள். வெற்றியை விழைகிறேன். பஷீர், நான் உண்மையானவள். நம்புங்கள்!

தங்களுக்கு வேலை உள்ளது! வேலையைச் செய்யுங்கள். என் சகோதரரே, வேறு விசேஷமற்ற நட்பைக் கொண்டு தாங்கள் திருப்திப்படுவதாயின் நான் தங்களுடைய உயிருக்குயிரான சிநேகிதியாய் இருப்பேன்.

நம்முடைய இதயத்தின் ரகசியங்களைக் கூடப் பரிமாறிக் கொள்ளலாம். நான் என் கடிதத்தின் மூலம் விநோதம் பேசியும் வருத்தப்படுத்தியும் இருக்கலாம்.

அப்படியாயின் என் கதையை அனுப்புகிறேன். வேதனைகளின் கதை. தாங்கள் அதைத் திருப்பி அனுப்ப வேண்டும். தங்களுடைய அடுத்தக் கதைக்கு அதை ஒரு கருவாக்கிக் கொள்ள வேண்

**வைக்கம் முகம்மது பஷீர்**

**தமிழில் : வையவன்**



டாம். இந்தக் கடிதத்தோடு அதைத் திருப்பி அனுப்பவும்.

நான் ஏன் இப்படி எல்லாம் நடந்து கொள்கிறேன் என்று அதை வாசிக்கும்போது தாங்கள் அறிவீர்கள். நான் பொய்களின் ஒரு மூட்டை அல்லவென்று தாங்கள் புரிந்து கொள்வீர்கள்.

பஷீர், அப்படி என்னை ஏற்றால் தங்களை நம்புவேன். தங்களோடு கடிதப் பரிமாற்றம் செய்வேன். இதையும் என் கதையையும் தவிர்த்து வேறு எதையும் தாங்கள் திருப்பி அனுப்ப வேண்டாம். இதை எல்லாம் தாங்கள் அறிய விரும்பினால் போதும்.

பஷீர், நான் தங்களுடைய நேரத்தை வீணாக்குகிறேனா? சத்தியமாகத் தாங்கள் என்னை விரும்புகிறீர்களா? அல்லது இது ஒரு ஏமாற்று வித்தையா?

ஒருக்காலும் எல்லை மீற வேண்டாம். தாங்கள்

எனக்குப் புத்தகம் வாங்கித் தர வேண்டாம். ஒருக்காலும் இனி அது தொடரக் கூடாது. நான் ஒரு மடச்சி. நான் அதை ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் முட்டாள்களை மேலும் முட்டாள்களாக்காதீர்கள்.

பிரியமுள்ள பஷீர், தாங்கள் என்னை மறந்து விடுவதை ஒருபோதும் நான் விரும்பவில்லை. நினையுங்கள். மிகவும் துக்கப்படும் ஒரு சகோதரியாக. தயவுசெய்து என் பிரிய சகோதரன் என்ற நிலையில் பரிபூரண திருப்தி கொள்ளுங்கள். எல்லாம் கூடியுள்ள எல்லாமாயுள்ள மனிதராக அல்ல.

தங்களுடைய இதயத்தில் ஒரு சகோதரியாகவோ, ஒரு சிநேகிதியாகவோ ஏற்க முடியவில்லை என்றால் என்னுடைய இறுதி நமஸ்காரம். பிரிய நண்பரே! இந்தக் கடிதத்தைத் திருப்பி அனுப்பி வையுங்கள்.

என்றென்றும் மாறாத தங்களுடைய அளவில்லா அன்பின் அடையாளமாகத் தங்களுடைய பேனாவை என் மார்பிலே பத்திரமாக வைத்துக் காப்பேன்.

தங்களுடைய அறிவுரைப்படி கதைகளும் கட்டுரைகளும் நான் எழுதுவேன். தங்களையே என் முன் மாதிரி ஆசிரியனாக்கிக் கொண்டு.

இது ஓர் இறுதி நமஸ்காரமோ?
அல்லவோ?
தாங்கள் தான் உத்தரவு தரவேண்டியது.

தங்களுடைய
தேவி.

''என்ன கபாலி, போன மாசம் பெரிய 'தொழில் புரட்சி'யே பண்ணிட்டியாமே?''

''ஆமாண்ணே. மாமூலே கொடுக்காம, சரக்கு காய்ச்சினேன்!''

– யமுனா ரெங்கநாதன்



பி.கு. என் கடிதங்களை எல்லாம் திருப்பி அனுப்ப வேண்டும் என்று கேட்டது தங்களை நம்பாததால் அல்ல. நான் பயந்தேன். (இது உண்மையாகவே ஆயிற்று).

என் கடிதங்கள் எல்லாம் உணர்ச்சிக் கட்டுப்பாடுகள் இல்லாதவை. நான் பரிச்சயமற்ற ஒருவரிடம் என் இதயத்தைத் திறந்து காண்பித்தேன். சற்றுக் கூடுதலாக.

பதில் அனுப்பும் முன் நன்கு சிந்தியுங்கள். தங்களுக்கு இந்தக் கடிதம் புதன்கிழமை கிடைக்கும். வியாழக்கிழமை பதில் அனுப்பினால் எனக்கு வெள்ளிக்கிழமை கிடைக்கும்.

அது வரை கரை மேல் விழுந்த மீன் போல் இருக்கும் என் நிலை. இத்துடன் சேர்த்து அனுப்பியுள்ள டிக்கெட்டை தயவு செய்து ஏற்கவும். நான் அதற்குப் பணம் கொடுத்து விட்டேன்.

தேவி.

உத்தரவுப்படி நான் சிந்தித்தேன். மிகவும் சிந்தித்தேன். பிறகு பதில் எழுதினேன்.

பெண் கொஞ்சம் அதிகம் விளையாடுகிறாள்!

மாளிகை உச்சியில் நின்று கொண்டு கீழே நிற்கின்ற வேலைக்காரனிடம் பேசுவது போல. அது சரியல்ல பெண்ணே!

இறங்கி வா கீழே. சரிசமமாய் உட்கார்ந்து இருவரும் பேச்சு வார்த்தை வைத்துக் கொள்ளலாம். அதிகமாய்க் கிடந்து துள்ளாதே.

அம்மாடி! நான் உண்மையைச் சொன்னதுதானே இந்தக் குழப்பத்திற்கு எல்லாம் காரணம்! துக்கத்தோடு கூட அதிர்ச்சியும் உண்டாக வேண்டாம் என்ற எண்ணத்தில் தான் உண்மை சொன்னேன்.

என்னை ஒரு சகோதரனாக உனக்கு வேண்டுமா? தருகிறேன். தருகிறேன்! நான் எழுதினேன்.

பிரியமுள்ள சகோதரி,

உன் கடிதத்தை வாசித்தேன். பதில் எழுதும் முன்பு மிகவும் சிந்தித்தேன்.

ஒன்றைச் சற்றே யோசி.

தேவிக்கு என்ன ஒரு தனித்துவம், மற்ற பெண்களைக் காட்டிலும்?

இந்த ஊரின் நிலை உனக்குத் தெரியுமே! ஒண்ணே காலணா முதல் நூறு ரூபாய் வரை தான் இந்த ஊரிலே பெண்களின் விலை.

சரியாய்ப் புரிந்து கொள்.

நான் ஒரு பெண் வெறியன் அல்ல. சரஸ்வதி தேவி என்ற என்னுடைய சகோதரிக்குத்

தெரிந்திருக்குமே! எனக்கு ஏராளமான இளம் பெண்களோடு பரிச்சயம் உண்டு. பெண்களை மோப்பம் பிடித்துப் பின்னால் அலைகிறவனல்ல நான்.

எனக்குக் காம இச்சையின் அவசியம் இருந்தால் நான் இருக்கிற இடத்திற்கு அவர்களை வருவிப்பேன். எப்படி என்றா? பணம் கொடுப்பேன்.

நான் கஷ்டப்பட்டு, நரகவேதனைப்பட்டு, பட்டினி கிடந்து, மெய் வருந்தி எழுதி அல்ப சொல்பமாய்ச் சற்றுச் சம்பாதித்திருக்கிறேன். யாருக்கும் பதில் சொல்ல வேண்டியதில்லை. இஷ்டம் போல நான் கொடுப்பேன்.

என்னை நோக்கிப் புன்னகை செய்ததற்கு, என்னைக் கட்டித் தழுவியதற்கு... என்னை... எதற்காக மற்றது? அவர்கள் எதிர்பாராத பெரிய தொகையை நான் கொடுப்பேன்!

இதையெல்லாம் ஒரு அந்தஸ்திற்காக நான் சொல்லவரவில்லை. உண்மையைச் சொல்கிறேன் என்பது மட்டுமே. எனக்குத் தேவைப்பட்டால் இப்படி எல்லாம் செய்வேன் என்று மாத்திரமே.

எனக்குத் தர தேவியிடம் விசேஷமாக என்ன இருக்கிறது?

என்னுடைய சரீர வேட்கைக்காகவா நான் உன்னை நேசிக்கிறேன்? யோசித்துப் பார். நான் உன் பின்னால் மோப்பம் பிடித்து நடந்ததில்லை. உண்டா? எனக்கு உன் மீது பரிவு தோன்றியது. சிநேகம் தோன்றியது.

இரண்டையும் மறைத்தேன். பிறகு உன்னை வெறுக்க முயன்றேன். மறக்க முயன்றேன். இரண்டும் பலிக்கவில்லை. நான் போகிறேன். நான் உன்னைத் தவறாகப் புரிந்து கொண்டிருந்தால் உனக்கு என்ன வந்தது? நீ யார்? சற்று கவனி.

எனக்கு ஏராளமான பெண்களோடு பரிச்சயம் உண்டு என்று அறிவாய் அல்லவா? இந்த சங்கதி ஏறக்குறைய புரிந்திருக்க வேண்டும்.

பலர் எனக்குக் கடிதம் எழுதுகிறார்கள். யாரும் என்னிடம் கடிதத்தைத் திருப்பிக் கேட்டதில்லை. நான் அதற்கு ஆட்பட மாட்டேன். எனக்கு வேலை உண்டு.

போதாக்குறைக்கு அந்த வயதும் போய் விட்டது. கேட்டுக்கொள், நான் இதுவரை ஒரு பெண்ணையும் மோசம் செய்ததில்லை. கர்ப்பம் தரிக்கச் செய்து வழியிலே கை விட்டதில்லை.

புரிந்து கொள். சீமான் மகள்களும் அதை விட உயரத்தில் உள்ளவரோடும் எனக்குப் பரிச்சயம் உண்டு. சரியாக நினைவில் வை!



**''புது எம்.எல்.ஏக்களுக்கு பயிற்சி வகுப்பு எடுக்கணுமுன்னு நம்ம தலைவர் சொல்றாரே... ஏன்?''**

**''யாருக்குமே திறமையா ஊழல் பண்ணவே தெரியலையாம்!''**

**— பூனாம்பாளையம் ஆர்.பி. ஜெயச்சந்திரன்**

பிரியமுள்ள தேவி, உனக்கு வேதனை யூட்ட இதை நான் எழுதவில்லை. முன்பு, ஓர் ஆறு வருடங்களுக்கு முன்னால் ஒரு இளம் பெண்ணை நான் நேசித்தேன்.

சுவர் ஏறிக்குதிக்கிற காதல் ஒன்றுமல்ல. ஆராதனையோடு வந்தாள். கஷ்டங்கள், சங்கடங்கள் எல்லாம் எழுதித் தெரிவித்தாள். கடிதங்களினூடே காதலும் வளர்ந்தது.

அன்று தலையில் நிறைய முடியிருந்தது. பார்க்கவும் நன்றாக இருந்தேன். நான் அவளுக்கு ஒரு நாநூறு கடிதங்கள் எழுதி இருப்பேன். அவளும் எனக்கு.

இடையில் ஒரு கடிதத்தை என் ரத்தத்தில் பேனாவைத் தோய்த்து எழுதி அனுப்பினேன். என் இடது கை மோதிர விரலை அறுத்து! அந்த அடையாளம் இப்போதும் உண்டு.

அதற்கெல்லாம் ஞாபகங்களாய் இலக்கியத்திற்காய், எனக்குக் கிடைத்தது வழுக்கை. புரிகிறதா? எனக்கு இப்போது பெரிய வெளியழகு ஒன்றுமில்லை. பெரிய படிப்புமில்லை. எனினும் நான் பூரண திருப்தியோடு இருக்கிறேன்.

அந்த சங்கதி முதற் காதல். அதன் கதையை நான் எழுதி இருக்கிறேன். ஆறு வருடம் நாங்கள் காதலித்தோம். எனினும் அந்தப் பெண்ணை நான் தொட்டதில்லை. முடிவில் எல்லாக் கடிதங்களையும் நான் திருப்பி அனுப்பி வைத்தேன்.

கல்யாணம். அது நடக்கவில்லை. இறந்து

விட்டாள். அந்த ஆத்மாவிற்காக நான் சாந்தி வேண்டினேன். இப்படிப் போகிறது அந்தக் கதை.

கேட்கிறாயா ஒரு ரசமான விஷயம்! உனக்குப் பதில் எழுத வேண்டாம் என்ற உன் கடிதம் வந்தபோது 1500 ரூபாய்க்கான ஒரு செக் எழுதி அனுப்பத் தோன்றியது. அந்தப் பேனாவைப் பிறகு உபயோகிக்கக் கூடாது என்று தோன்றியதால் அனுப்ப வில்லை.

ஒரு சாதா சகோதரனாக நான் உனக்குத் தேவையானால் நல்லது. அப்படியே ஏற்றுக்



**''வேலைக்காரி அவசர அவசரமா வந்து ஏதோ சொல்லிட்டுப் போறாளே என்னவாம்?''**

**''பக்கத்து வீட்டுக்காரங்களைப் பற்றி இப்ப தலைப்பு செய்தி சொல்லிட்டுப் போறா.. ராத்திரி எட்டு மணிக்கு வந்து விரிவான செய்திகள் சொல்லுவா!''**

**– அவினாசி சு. குமார்**

கொள். பிரியமுள்ள குயில் தங்கையே! அல்லது குயில் சகோதரியே! குயிலுக்கு இஷ்டமிருந்தால் காக்கைக்குப் பேனா தா. கதையையும் அனுப்பு. கதைக் கருவாக்கும் விஷயம்!

தெய்வ கிருபையால் கதைக் கருக்கள் எனக்கு சுலபம். அதற்கு ஒருக்காலும் எனக்கு வறுமை வந்ததில்லை. எழுதிப் பதிப்பிக்கிற கஷ்டமும் சோம்பலுமே உண்டு.

வேறு விசேஷம் ஏதுமில்லை. பரம சுகம். நீயும் நலம் என்ற நம்பிக்கையோடு.

சகோதரன் பஷீர்.

தேவிக்கு அனுப்பினேன்.

அடுத்த நாள் ஒரு பழைய 'பிளாக்-பார்ட்' பேனா தந்தாள். ஒரு பெரிய கவரும் கூட.

"பேனா கடிதத்திலே 'டோன்' எனக்குப் பிடிக்கலே. முந்திய கடிதங்கள்ளே தமாஷாவது இருந்தது."

"ஓ."

பின்னே இனி எப்படி குயிலே எழுத வேண்டும்? காதல் வேண்டுமில்லையா? காதல்! சகோதரன் எப்படிக் காதல் தருவது?

'நாடகம் எழுதிட்டு இருக்கீங்களா?"

"எழுதிட்டிருக்கேன்."

"இந்தக் கடிதத்தைப் படிச்சுட்டுத் திருப்பித் தரணும்."

"கடிதமா?"

"கதையோட ஒரு சட்டக் கூடு. என் கதை. முன்னே அனுப்பிய அந்த ஒழுங்கீனக் கடிதத்துக்கு ஒரு பிஸினஸ் பதில் அனுப்பியிருக்கேன்."

"நல்லது. தேவி, நான் இங்கேருந்து பொறப்படறேன்."

உடனே தேவி ஒரு கவிதை சொன்னாள்.

"தகருமென் மானஸம்..." என்று தொடங்கும் கவிதை. கூட்டத்தில் உள்ள பெண்ணின் விவரமும்.

"எனக்கு நிறையக் கவிதைகள் தெரியும். அதிகம் மனப்பாடம் பண்ணியிருக்கேன்."

"என் கவிதைதான் எனக்குத் தெரியும்."

நான் ஒன்றும் புரிந்து கொள்ளாதவன் போல் குட்பை சொல்லி விட்டுக் கிளம்பினேன்.

தீவிரமான கடிதத்தை அடுத்த நாள் ஒரு புத்தகத்தில் வைத்துத் தந்தாள். முதல் கடிதத்தைத் திருப்பிக் கொடுத்தேன்.

வாசித்துப் பார்த்தேன்.

தேவியின் துக்கமயமான குடும்ப சரித்திரம். எல்லா சமுதாயங்களிலும் குடும்ப சரித்திரம் இது போலவேதான் இருக்கும். தந்தைக்கும் தாய்க்குமிடையே சுருதி சேராதது முதலிட்ட தொடக்கம்.

தகர்ந்து கொண்டிருக்கும் ஒரு நாயர் தரவாட்டின் சித்திரம். நிறைய நேரம் பிடித்திருக்கும் இதை எழுத!

கடிதம் சாதா சகோதரனுக்கு அல்ல.

"பிரிய நண்பரே, பஷீர்!"

அன்று எனக்கு ஏழு வயது. ஒரு விம்மல். இதயத்தை உடைக்கும் ஒரு விம்மல். அது என்னை ஓர் அறைக்கு ஈர்த்து இழுத்தது.

(தொடரும்)



• 'எலிபதி'யில் சுகன்யா

தனக்கு பயப்படாத, மரியாதை கொடுக்காத மனைவி, எலிக்கு பயப்படுவது அந்தக் கணவனுக்கு விபரீத எண்ணம் ஒன்றை உருவாக்குகிறது. தான் ஒரு எலியாக மாறி, மனைவியை ஒரு வழி பண்ணி விட வேண்டும் என்று விரும்புகிறான். ஒரு சாமியாரைச் சந்தித்து வரம் கேட்க, அவரும் 'அருள்' புரிகிறார்.

சாமியார் சொன்ன மந்திரத்தை உச்சரித்து எலியாகி, வீட்டுக்கு வருகிறான் கணவன். எடுத்த எடுப்பிலேயே கடச் கட பால் கொண்டு வரும் மனைவிமேல் எகிறிக் குதிக்க, அவள் அலறியடித்து, தரையில் வழுக்கி விழுந்து, பலத்த அடி!

ஒதுக்குப் புறமாக ஒளிந்து உட்கார்ந்து மனைவியைக் கண்காணிக்கிறார் 'எலிபதி'. காலை சமையல், குழந்தைகளைக் குளிப்பாட்டல், சாப்பாடு, கைக்கு லஞ்ச், பள்ளிக்கு அனுப்பி வைத்த கையோடு துணி துவைத்தல். இஸ்திரி, காய்கறி வாங்குதல், இது போதாதென்று 'ஹவுஸ் ஒய்ஃப்' என்றவுடன் 'வீட்டில் சும்மாதான் இருக்கீங்களா, என்று கேட்டு வயிற்றெரிச்சல் கிளப்பும் சோப்புக் கம்பெனிப் பிரதிநிதி...

அடுத்து, பள்ளியிலிருந்து திரும்பும் சின்னப் பையனுக்கு சாப்பாடு ஊட்டி, தூங்க வைத்து, அடுத்தப் பையனுக்கு டிபன் செய்து... ஓயாமல் வேலை தொடர்கிறது.

'எலிபதி'யாக வந்து, மனைவியைப் பாடாய்ப் படுத்த நினைத்த கணவனுக்கு "பாவம்! இத்தனை வேலையா இவளுக்கு!" என்று பரிதாபம் வந்து விடுகிறது.

இதுதான் ஜனநாயக மாதர் சங்கம் தயாரித்துள்ள 'எலிபதி' டெலி பிலிமின் கதை.

திரைக்கதை, வசனம், இயக்கம் விஸ்வநாதன்.

குடும்பத் தலைவியாக யதார்த்தமாக நடித்திருக்கிறார் சுகன்யா. ரேவதி, அர்ச்சனா இரண்டு பேரும் கதையைக் கேட்டு, நடிக்க ஆர்வமாக இருந்தாலும், தேதி ஒத்துவராததால், சுகன்யாவுக்குச் சான்ஸ்.

பெண்ணுரிமை பேசும் இயக்கத்தின் தயாரிப்பு என்றாலும், பிரசார நெடி இல்லை என்பது முக்கியமான விஷயம். 'குடும்பத் தலைவி' என்றால் சும்மா இல்லை என்று நெத்தியடியாய்ச் சொல்லும் கதை இது!

எலியைத் தேடிப் பிடித்து நடிக்க வைத்த (?) அனுபவத்தைச் சொன்னார் இயக்குனர் விஸ்வநாதன்:

"கதை எனக்கு ரொம்பப் பிடித்துப் போனது. எலியில்லாமல் படமெடுக்க முடியாது. மெரினா போய் அலைந்து திரிந்து, கடைசியில் ஒரு கிளி ஜோசியரின் தகவலின் பேரில், எலி ஜோசியர் ஒருவரைப் பிடித்தேன். கூண்டைத் திறந்து விட்டால் வெளியே நடந்து வந்து, ஒரு சீட்டை எடுத்துக் கொடுத்து விட்டு, மறுபடி கூண்டுக்குள் போகும்படியாக மட்டுமே பழக்கப்பட்ட பெரிய வெள்ளை எலி. கொஞ்சம் பெண்டு வாங்கிவிட்டது. நிறையப் படமெடுத்து கதையின் தேவைக்கேற்ற காட்சிகளை மட்டும் பயன்படுத்திக் கொண்டோம்."

— மானஸா

# விஸ்வநாதன் எலிபிடிக்கப் போன கதை!

• 'எலி'பதி!

# தேர்தல் வந்துடுச்சு!

— கிச்சா



"இருந்தாலும் நம்ம எம்.பி. இவ்ளோ அஞ்ஞானியா இருக்கக் கூடாது!"

"என்ன சொன்னார்?"

"என்னங்க, இடைத் தேர்தல் வந்துருச் சென்னதும், 'ஐயோ, நான் என்ன செத்தா போயிட்டேன்? இங்க எதுக்கு இடைத் தேர்தல்'ங்கறாரு."

"போன தபா பிரசாரத்துக்குப் போனப்ப தொகுதி மக்கள் செருப்பால அடிச்சி அனுப்பிட்டாங்க இல்லே, அதான்!"



"என்னது? தொகுதிப் பங்கீட்டுப் பேச்சு வார்த்தைல அடிதடி வந்திடுச்சா?"

"பின்ன? தமிழ்நாட்டுல மட்டும் சீட் கேக்காதீங்க. வேணுமானா அமெரிக்காவுல நாலு தொகுதி எடுத்துக்கங்க. அங்கேயும் நம்ம கட்சிக்கு வாக்காளர்கள் இருக்காங் கன்னு தலைவி சொன்னா எப்படி?"



"என்ன, எல்லா குட்டித் தலைவர்களும் பேரண்ட்ஸோட தலைவரைப் பார்க்க வந் திருக்காங்க?"

"ஆதரவை வாபஸ் வாங்க மாட்டேன்னு ஆத்தா, அப்பன் தலைல அடிச்சி சத்தியம் பண்ணாத்தான் கூட்டணின்னு நம்ம தலைவர் சொல்லிட்டாரில்லே?"



''வாக்காளப் பெருமக்களே! இம்முறை சத்தியமாக எங்கள் கூட்டணி உடையாது என்று உறுதி கூறுகிறோம்!''



''தலைவரே! பிரசாரத்துக்கு நடிகைகள் வேணும்னு கேட்டீங்களே! பழம்பெரும் நடிகைகள்தான் கிடைச்சாங்க!''

''தலைவர் ஆனாலும் ரொம்ப அநியாயமா கண்டிஷன் போடறாரு!''

''என்னவாம்?''

''கூட்டணியை உறுதிப்படுத்தறவிதமா அத்தனை பேரும் அவங்க பொண்ணுங்களை இவர் சொந்தக்காரப் பசங்களுக்குக் கட்டிக் கொடுக்கணுமாம்.''





''அண்ணன் ஏன் அதிர்ந்து போய் வெளிய வராரு?''

''இந்த முறை ஜெயிச்சு உள்ள போற சான்ஸ் கம்மி; அதனால, பார்லிமெண்ட் பில்டிங் என்ன விலைக்கு வரும்னு தலைவி விசாரிக்கச் சொன்னாங்களாம்.''

● பா. கிருஷ்ணகுமார், கோவில்பட்டி.

*? நிலையான ஆட்சி, திறமையான பிரதமர் என்று மக்களிடம் வோட்டுக் கேட்ட ஜெயலலிதா அடுத்தத் தேர்தலில் என்ன சொல்லி வோட்டுக் கேட்பார்...?*

! அது கூட்டணிகள் எப்படி அமைகின்றன என்பதைப் பொறுத்தது. ஆனால், நம் விருப்பம் :

"கூட்டணிகள் ஒதுக்கின
அநாதையானேன்;
வாக்காளரும் கைவிட்டால் என்ன
ஆவேன்!"

● வி. ரெங்கநாதன், திருநெல்வேலி.

*? பா.ஜ.க. அரசு கவிழ்ந்ததைக் கிண்டல் செய்யும் வகையில் அ.தி.மு.க. எம்.எல்.ஏ. சுந்தரம் பட்டை நாமத்துடன் சட்ட சபைக்கு வந்தாராமே?*

! அம்மையாரின் மாற்றுக் கூட்டணி ஆட்சி முயற்சி தோல்வி அடைந்ததற்கு அவர் இன்னொரு நாமம் போட்டுக் கொள்ளலாம். அது சரி, ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஆட்சேபிக்க வேண்டாமோ!

● என். பாலகிருஷ்ணன், மதுரை - 1.

*? வோட்டுப் போடுவதுடன் நம் ஜனநாயகக் கடமை முடிந்து விடுகிறதா?*

! அதெப்படி முடிந்துவிடும்? நாம் யாரைத் தேர்ந்தெடுத்து அனுப்பினோமோ, அவர்கள் சரியாகத் தங்கள் கடமைகளைச் செய்கிறார்களா என்று கண்காணிக்க வேண்டாமா? தப்பு செய்தால் அடுத்தத் தேர்தலில் தண்டிக்கத் தயாராக வேண்டாமா? அது போக, வீட்டிலும் பணியிடத்திலும் நாம், நமக்கு என்று ஏற்பட்டுள்ள கடமைகளை ஒழுங்காகச் செய்து கொண்டிருக்க வேண்டாமா? ஜனநாயகக் கடமை இதையும் உள்ளடக்கியதுதான்.

● செ. மலர்விழி, மதுரை - 10.

*? வாஜ்பாய் ஒரு வடநாட்டுக் கருணாநிதி என்று காளிமுத்து கூறுகிறாரே?*

! பின்னே, ஜெயலலிதா ஒரு தென்னாட்டு ராஜநாராயண் என்றா காளிமுத்துவால் சொல்ல முடியும்?

● பி. பிரகாஷ், மதுரை - 16.

*? பிரதமருக்குத் தெரியாமலே ஜெயலலிதாவின் வழக்குகளை வேறு நீதிமன்றங்களுக்குத் தம்பிதுரை மாற்றி உத்தரவிட்டதாக, ஆட்சி கவிழ்ந்த பின் ராம் ஜெத்மலானி கூறுவது சரியா?*

! ஜெ. பேரிலான வழக்குகளில் தம்பி துரையின் தலையீடு இருந்தது என்பது நிதர்சனமாக முன்பே தெரிந்த விஷயம்தானே. அதை உடனடியாக ஜெத்மலானி எதிர்த்தார் என்பதுதான் இப்போது புதிதாகத் தெரியவந்துள்ள விஷயம்.

சு. சுவாமியின்

● டி.ஏ.பி. பிரகாஷ், திருச்செங்கோடு.

*? கல்கி அவர்களைத் தந்தையாகப் பார்க்கிறீர்களா? எழுத்தாளராகப் பார்க்கிறீர்களா? முன்னாள் ஆசிரியராகப் பார்க்கிறீர்களா...?*

! எழுத்துத் துறை, பத்திரிகைத் துறை, கலைத் துறை, பொது வாழ்க்கை எனப் பல துறைகளிலும் அப்பழுக்கின்றிப் பிரகாசிக்கும் 'வாரிசு'களின் முன்னோடியாக; ஆதர்ச புருஷராக!

● அ. ராஜா ரஹ்மான், கம்பம்.

*? தெலுங்கு தேசக் கட்சி எம்.பி. விஜயராம ராஜு காங்கிரசுக்கு ஆதரவளிக்க முன்வந்திருப்பது பற்றி என்ன நினைக்கிறீர்கள்?*

! அவசரப்பட்டு, குதிரை வியாபாரத்தில் தம்மை பலிகொடுத்துக் கொண்டார். அவரைத் தொடர்ந்து வேறு பலரும் பிரிவார்கள் என்ற காங்கிரஸின் எதிர்பார்ப்பில் மண் விழுந்தது. நாயுடுவுக்கு இந்தச் சின்ன சரிவிலும் ஒரு பெரிய வெற்றி.

● ரஞ்சனிப்ரியன், ஈரோடு.

*? உயிரை விட்டாலும் விடுவோமே தவிர ஜெயலலிதாவை விட்டுப் போக மாட்டோம் என்று அ.தி.மு.க. எம்.பிக்கள் ராஜரத்தினம், ராஜா பரமசிவம், சரோஜா ஆகியோர் உணர்ச்சிவசப்பட்டுள்ளனரே...?*



• சரிவில் வெற்றி



• இரட்டை நாமம்!



• கபாலியின் பவனி!



• புதிதாய்ச் சொன்னது!

! இத்தகைய விச்வாசத்தை ஆக்கபூர்வமாகப் பயன்படுத்தும் புத்தி இல்லாத தலைவியை நினைத்தால் வருத்தமாயிருக்கிறது.

● வாசுதேவன், பரோடா – 20.

? மோர் சாதம், மோர்க் குழம்பு, மோர் மிளகாய், நீர்மோர் – எதற்குத் தங்கள் வோட்டு?

! மோர் சாதம் + மோர் மிளகாய்!

● ரா. ராசமாணிக்கம், கோவில்பட்டி.

? 'நாம் தமிழ் மாநாடு கொண்டாடவில்லையா? அதைப் போல் சமஸ்கிருத ஆண்டு கொண்டாடுவதில் தவறென்ன?' என்று நீங்கள் பதில் கூறியிருப்பது பொருத்தமாகத் தோன்றவில்லை. தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட மக்களை ஆள்கிற அரசு, அந்த மொழிக்கு மாநாடு நடத்துவதும் அனைத்து இந்திய மக்களுக்கும் உரிய மத்திய அரசு ஒரே ஒரு மொழிக்குச் சிறப்புச் சேர்க்கும் வகையில் சமஸ்கிருத ஆண்டு கொண்டாடுவதும் ஒரு நிலையில் அமைவதாகச் சொல்ல முடியாதே?

! சமஸ்கிருதத்தைத் தாய்மொழியாகக் கொண்ட தனி மாநிலம் இல்லையே... அதனாலேயே இதை இழுத்துப் போட்டுக் கொண்டு நடத்தும் கடமை மத்திய அரசுக்கு இருக்கிறது அல்லவா?

● கே. சுதர்ஷன், தூத்துக்குடி.

? தூத்துக்குடி சமீர் வியாஸ் நகரில் உள்ள தென்னிந்திய திருச்சபை பேராலயத்தில் காலை பிரார்த்தனையில், வாஜ்பாய் அரசு கவிழ்ந்ததற்காகக் கர்த்தருக்கு நன்றி தெரிவித்து, ஏசு கிறிஸ்துவை அடி பணியாத எந்த அரசும் நிலைக்கக் கூடாது என பிரார்த்தனையும் செய்யப்பட்டது. இது குறித்துத் தங்களின் கருத்து என்ன...?

! இது உண்மையாயின் மிகவும் வருத்தத்துக்குரிய நிகழ்ச்சி. கிறிஸ்துவத் தத்துவத்துக்கே விரோதமானது.

● கலை அரசு, கோவை – 42. ❑

? ஜெயலலிதா 'எக்ஸைடிங் மோமண்ட்ஸ்' அளிப்பதாக உறுதி அளித்தார். ஆனால் எல்லாம் சப்பென்று போய்விட்டதே...?

! தி மோஸ்ட் எக்ஸைடிங் மோமண்ட்ஸ் ஆர் யெட் டு கம் – தேர்தலைச் சொல்கிறேன். காரணம் 'ஜெ'தானே!

● பா. வடிவேல், தேவனாங்குறிச்சி.

? தவிப்பட்ட முறையில் காணும் போது சு. சுவாமியின் சாணக்கியம் பாராட்டுக்குரியது தானே...?

! அதற்குப் பெயர் சாணக்கியம் அல்ல. சாணக்கியம் என்பது ராஜதந்திரத்தால் நன்மை விளைவிப்பது. சுவாமி செய்வது நாசவேலை!



• ஏது நன்மை!



• தேர்தல் வாசகம்!

# சாணக்கியம் பாராட்டுக்குரியதுதானே?

● நா. வந்தியக்குமாரன், சென்னை – 41.

? 'காணக் கண்கோடி வேண்டும்' என்கிறார்களே... எதைக் காணக் கண் கோடி வேண்டும் என்று சொல்லுங்கள்...?

! 'கபாலியின் பவனி'யைத்தான்! 'மதியொடு தாரா கணமொளிரும் அந்தி வானமோ, கமல வனமோ...?' என்று வியந்து பாடியிருக்கிறாரே பாபநாசம் சிவன்.

● பி.எம். வள்ளி, மதுரை – 16.

? திரைப்படங்களிலும் தொலைக்காட்சியிலும் அரசியல்வாதிகளை வில்லன்களாகச் சித்திரிப்பது நமது ஜனநாயகத்தின் பேரில் மக்கள் வைத்துள்ள நம்பிக்கையைச் சிதைத்துவிடும் என்று மத்திய அமைச்சர் நக்வி தெரிவித்துள்ளது பற்றி...?

! திரைப்பட வில்லன்கள் பிடிபட்டு தண்டனை அடைவதுதான் வழக்கம். ஆனால் நிஜ வாழ்க்கையில் அரசியல்வாதிகளின் கதை வேறாச்சே.. திரைக்கதையைக் காட்டிலும் நம்பிக்கையைக் குலைக்கும் விஷயம் நிஜம்தான். ⊙

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
கலை அரசு
அருண் இல்லம், 2, லட்சுமி நகர்,
கோவைப் புதூர், 641 042.



• மருதமலை

# மருத மலையிலிருந்து விரட்டப்படுகிறார்களா மலைவாசிகள்...?

**கோவை மாவட்டத்தில் புகழ் மிக்க மருதமலையில் பல காலமாகக் குடியிருந்து வரும் மலைவாசிகளை, மருதமலை தேவஸ்தான நிர்வாகம், மலையிலிருந்து கீழே இறங்கச் சொல்லி வற்புறுத்துவதாகவும், இறங்க மறுப்பவர்களுக்குப் பல வகையில் இடையூறு கொடுப்பதாகவும் செய்தி வந்தது. உடனே மருதமலைக்குச் சென்று பார்த்தோம்.**

"கொஞ்ச நாள் கோயில்காரங்க எங்களுக்குக் குடிக்கவே தண்ணி விட மாட்டேன்னுட்டாங்க சாமி!"

"சத்திரத்துல சோறு வாங்கிப் பொழைச்சிட்டிருந்தோம். இது இருந்தாத்தானே இவங்க இங்கேயே இருப்பாங்கன்னு சத்திரத்தைக்கூட இடிச்சுட்டாங்க!"

"பரம்பரையா செஞ்சுட்டு வந்த தொழில் தப்புன்னு (இருட்டுத் தொழில்) சொல்லி ஃபாரஸ்ட் அதிகாரிக கடை வச்சுப் பொழைக்க லோன் கொடுத்தாங்க. அதையும் செய்யக்கூடாதுன்னு தேவஸ்தானம் தடுக்குது. மிரட்டுது. கடை வச்சே ஆகணும்னா அடிவாரத்துல போய்க் கடை வையுங்கன்னு விரட்டுது. பொறந்த இடத்தை விட்டுட்டுப் போய் எங்கே, எப்படி சார் பொழைக்கறது?"

மருதமலை அருள்மிகு சுப்ரமண்யர் எழுந்தருளியிருக்கும் கோயிலின் வாசலில், பத்துப் பதினைந்து படிக்கட்டுக்குக் கீழே, இடது பக்கம் நீண்டு நெடுக இருக்கும் மலைவாசிகள் குடியிருப்பில் இப்படிப்பட்ட அவலக்குரல்கள்தாம் அதிகம் எழுகின்றன. மொத்தம் சுமார் ஐம்பது வீடுகள். நூறுக்கும் மேல் குடும்பங்கள். ஏராளமாய் மலைவாசிகள். பெரும்பாலும் ஒருமித்த குரலில் ஒரே கருத்தைத்தான் பிரதிபலிக்கின்றனர்.

தேன்மொழி, கண்பார்வை அற்றவர். காலங்காலமாய் பாட்டி கொண்டு வரும் விறகுகளை விற்றுப் பிழைப்பு நடத்திக் கொண்டிருந்தாராம். பாட்டியின்



• தேன்மொழி - பாட்டியுடன்

தொழிலுக்கு வனத்துறையின் பசுமை வளர்ப்புத் திட்டம் மூலம் தடையேற்பட, பிழைப்புக்கு வகை செய்யும் நோக்கில் தேன்மொழி பெட்டிக்கடை வைத்துக் கொள்ள வனத்துறையே 'கடன்' ஏற்பாடு செய்திருக்கிறது.

லோன் மூலம் தம் இருப்பிடத்தில் கடை வைக்கப் போக, தடை விதித்தது தேவஸ்தானம். இன்னும் மூன்று பேர் கதியும் இதுதான்.

''நீங்கள் கடை வைத்தால் ஏலம் எடுத்தவர்களுக்கு நாங்கள் என்ன பதில் சொல்வது? அப்படிக் கடை வைத்துத்தான் பிழைப்பு நடத்த வேணும்னா கீழே போங்க'' என்று தேவஸ்தானம் விரட்ட, இவர்கள் முரண்டு பிடிக்க, தேவஸ்தானம் வக்கீல் நோட்டீஸ் விட, அரண்டு போயிருக்கின்றனர் மருத மலைவாசிகள். செலவு செய்து தயாரிக்கப் பட்ட 'பெட்டிக்கடை' அம்போ என அனாதையாய்க் கிடக்கிறது. 'லோன்' தவணை வேறு வந்து மென்னியைப் பிடிக்கிறது என்கிறார்கள்.



• மலைவாசிகள் இனத் தலைவர்கள்

''பூர்வீகமே எங்களுக்கு இதுதான். கோயில் இரவுக் காவலர்களாகவும், நாட்டாண்மைக்காரர்களாகவும் ஆதிகாலத்திலிருந்தே நாங்கதான் இருந்து வந்திருக்கிறோம். அதுவும் கொஞ்ச கொஞ்சமா மாறி இப்ப 'மெரவணை' (சப்பரம்) தூக்கறதுக்கு மட்டுமே உரிமையுள்ளவங்களா ஆக்கப்பட்டிருக்கிறோம். இதுவும் இனிமே வரப் போற தேவஸ்தான அதிகாரிகளைப் பொறுத்து எப்படி எப்படியெல்லாம் மாறுமோன்னு பயமாகவும் இருக்கு.

''இந்த நிலைமையில விறகு பொறுக்கறது, ஆடு மாடு மேய்க்கறதெல்லாம் செய்யக்கூடாது; சூழல் கெடும்னு ஃபாரஸ்ட்காரங்க சொல்லி, எங்க ஜனங்களுக்கு ஊதுபத்தி, மெழுகுவர்த்தி செய்யக் கத்துக் கொடுத்தாங்க, தையல் பயிற்சிக்கெல்லாம் ஏற்பாடு செஞ்சாங்க. உடல் ஊனமுற்றவங்களுக்கு கடை வச்சுக்க லோனும் கொடுத்தாங்க. அதை வாங்கி நாங்க எங்க இடத்துலதானே கடை வைக்க முடியும்? அப்படி வைக்கப் போகத்தான் தடை. கீழே போய்க் கடை வையுங்கன்னு சொல்றாங்க. கீழே நூறுக்கும் மேல கடை இருக்கு. அவங்க எல்லாம் எக்கச்சக்கமா முதலீடு போட்டுத் தொழில் செய்யறவங்க. அவங்களுக்கு நடுவே இந்த லோன் பணம் அஞ்சாயிரம், பத்தாயிரத்தை வச்சு என்ன கடை போடறது? எப்படி வாடகை கொடுக்கறது? எப்படிப் பொழைக்கிறது?

''இப்ப ஏற்கெனவே எங்க குடியிருப்புகளுக்குள்ளேயே வச்சிருந்த டீக்கடை, மளிகைக்கடையை எல்லாம் எடுக்கச் சொல்றாங்க. எங்கப் பேச்சைக் கேட்காதவங்க எதுக்கு இங்கே இருக்கணும்ங்கறாப்பல நடக்கறாங்க. நாங்க குடியிருக்கிற பகுதியையே மறைச்சு, எட்டடி உயரத்துக்கு ஒரு சுவர் எழுப்பப் போறதாகவும் மிரட்டறாங்க. கலெக்டருக்கும் வனத்துறை அமைச்சருக்கும் பெட்டிஷன் கொடுத்திருக்கோம். பதிலில்லை.



• ஆதிவாசிகள் குடியிருப்புப் பகுதி

''நீங்க குடியிருக்கிற இடம் உட்பட அனைத்தும் ஃபாரஸ்ட்டுக்குச் சொந்தமானது; தேவஸ்தானத்திற்கும் இதற்கும்

## எழிலும் எம்.ஏ.வும்

**முதல் படத்தை வெளியிட்ட பின்புதான் திருமணம் செய்து கொள்வேன் என்று விடாப்பிடியாக இருந்த 'துள்ளாத மனமும் துள்ளும்' பட டைரக்டர் எழிலுக்குத் திருமணம் நிச்சயிக்கப்பட்டுள்ளது. அவருடைய சொந்த மாவட்டத்தைச் சேர்ந்த (நாகைப்பட்டினம்) சொந்தக்காரப் பெண்தான். நாகை நகரில் எம்.ஏ., (வித்தவுட் அரியர்ஸ்) படித்துக் கொண்டிருக்கிறாராம் மணமகள். அடுத்த மாதம் நடக்க இருக்கும் திருமணத்துக்கு அவரது பெரியப்பா ஏனங்குடி ஜெகதீசன்தான் ஆடி ஓடி வேலை செய்து கொண்டிருக்கிறார். இனியென்ன...? எழிலின் துள்ளாத மனமும் துள்ளும் — அது சொல்லாத கதைகள் சொல்லும்!**

**— ஆதலை சூர்யா**




துளி சம்பந்தமில்லை. நீங்கள் பயப்படாமக் கடை வைக்கலாம்'ன்னு தைரியம் கொடுத்த ஃபாரஸ்ட்டுக்காரங் களே இப்ப திரும்பி வந்து 'நாங்க சொல்ற வரைக்கும் கடை வைக்க வேண் டாம்'ன்னு சொல்லிட்டுப் போயிருக் காங்க. எங்களுக்கு ஒண்ணுமே புரி யலை...!''

தமிழ்நாடு மலைவாழ் மக்கள் சங்கத் தின் இப்பகுதி அமைப்பாளர்களான ராமன், எம். ராமசாமி, கே. ராமசாமி ஆகி யோர் இப்படிப் பிரச்னைகளை அடுத் தடுத்து அடுக்குகின்றனர்.

இவர்கள் சொல்வது எந்த அளவு உண்மை? மலைவாழ் மக்களுக்குப் புரி யாதவற்றைப் புரிய வைக்க விழிப்புணர்வு ஊட்டலாம். விரட்டியடிக்கலாமா?

மருதமலை தேவஸ்தான நிர்வாகத்தின் துணை கமிஷனர் சண்முகத்திடம் கேட் டோம்.

''அவர்கள் இந்த மண்ணின் மைந் தர்கள். அவர்களுக்கில்லாத உரிமை எங் களுக்கு ஏது சார்? அவர்கள் இப்படி உங் களிடம் பேசியிருப்பதுகூட எங்களுக்கு ஆச்சர்யமாகவே உள்ளது. நாங்கள் இது வரை அவர்களுக்கு எந்தப் பிரச்னையும் கொடுத்ததில்லை. இங்கே பிரசாதம், பூஜை சாமான்கள் விற்கிற கடைகள் ஏற்கெனவே தேவஸ்தானத்தால் ஏலம் விடப்பட்டவை. அதே வியாபாரத்தை இவர்களும் செய்தால் எழும் நிர்வாகச் சிக்கல்களைக் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள். இதை ஃபாரஸ்ட் ஆபீஸர், அமைச்சர், கலெக்டர் எல்லோரிடமும் எடுத்துச் சொன்னோம். அவர்களுடன் பேசியதில் மலை அடி வாரத்தில் உள்ள தேவஸ்தானக் கடைகள் பதினான்கில் ஒன்றைக் குறைந்த வாட கையில் இவர்களுக்குக் கொடுக்கவும் ஒப்புக் கொண்டுள்ளோம். அதை இவர்கள் ஏற்றுக் கொள்ள மறுக்கின்றனர். அதற்கு நாங்கள் என்ன செய்ய முடி யும்?

''தேவஸ்தானம் இவர்களுக்கு ஒன்றுமே செய்யவில்லை என்றால் எப்படி? குடி தண்ணீர், கழிப்பிட வசதி மட்டுமல்ல, பள்ளி செல்லும் குழந்தை களுக்கு மலை அடிவாரம் வரை மினி பஸ் கூட நாங்கள் ஏற்பாடு செய்து கொடுத் துள்ளோம். பழனி மலை முதல் வேறெந்த மலை மீதுள்ள கோயில்களில் பார்த் தாலும் தேவஸ்தான அனுமதியில்லாத கடைகளோ, குடியிருப்புகளோ இருக்கவே இருக்காது. அதுபோல் இங்கும் நிர்வாக நடைமுறைகளைச் சரிப்படுத்தவே இங்கே தடுப்புச்சுவர் கட்ட, தேவஸ்தானம் திட்டம் செய்துள்ளது. அதேபோல் சத்திரத்தைக் கட்டிய சமூகத்தவர் அதனைச் சரியான முறையில் பராமரிப்பு செய்யாததால் இடிந்து விட்டது. அதற்கு நிர்வாகம் எப்படிப் பொறுப்பேற்க முடியும்? இதற்காகவே நிர்வாகம் அவர்களை மலையை விட்டுக் கீழே விரட்டுவதாகச் சொல்லி விஷயத்தை திசை திருப்புவது எந்த வகையில் நியாயம்?'' என்றார்.

சமாதானங்கள் ஒருபோதும் தீர்வாகப் போவதில்லை. மருதமலை வாழ் மலை வாசிகளை முதல்வராவது, முருகனாவது தான் காக்க வேண்டும்.

— கட்டுரை, படங்கள்: **கேயெஸ்வி**

## "5 வருட இடுப்பு வலியிலிருந்து ஆப்ரேஷன் இன்றி குணமடைந்தேன்!!!"



Lakshmi Iyer

ஸ்ரீமதி. லக்ஷ்மிஐயர்,
மேட்டூர்டேம் R.S.,
சேலம் மாவட்டம்,
தமிழ்நாடு.

கடந்த ஐந்து வருடங்களாக இடுப்பில் வலி இருந்து வந்தது. இதனால் குனிந்து நிமிரும் பொழுதும், சிறிது தூரம் நடக்கும் பொழுதும், உட்கார்ந்து எழுந்திருக்கும் பொழுதும், மாடிப்படி ஏறி இறங்கும்பொழுதும் , பிடிப்புடன் கூடிய வலி இருந்தது. ஆங்கில மருத்துவரிடம் சென்று **C.T. Scan** எடுத்துப் பார்த்த போது. இடுப்பில் கடைசி இரண்டு எலும்புகள் விலகி இருப்பதாக கூறினார்கள் **(L4, L5, DISC PROLAPSE)**இதற்கு சில மருந்துகளையும், இடுப்பில் போட்டு கொள்வதற்கு **Belt**-ம் எழுதிக் கொடுத்தார்கள். இருப்பினும் வலி நிற்கவில்லை. பின்பு ஆப்ரேஷன் **(Operation)**செய்தால் குணமடையும் என்று கூறினார்கள் அப்பொழுது **"MARC HERBAL CARE(P)LTD."** நிறுவனத்தின் விளம்பரத்தை செய்தித்தாள்களில் கண்டு நானும் எனது கணவரும் அங்கு சென்றோம். டாக்டரின் ஆலோசனைபடி அவர்கள் கொடுத்த மூலிகை பவுல்டீசை (Poultice) வெளிப்பிரயோகமாக தினமும் தவறாமல் தடவி வந்தேன். 9 வார தொடர்ச்சியான சிகிச்சைக்குப் பிறகு தற்பொழுது எனது வலிகள் அனைத்தும் நீங்கி பரிபூரண நிவாரணம் அடைந்தேன். நன்றி.

★ காலம் காலமாக வேதமகரிஷிகள் சித்தர்கள் கண்டுபிடித்து பரிசோதித்து அனுபவப்பட்டு வெற்றிகண்ட ஆயுர்வேத மூலிகை மருத்துவமுறைப்படி எங்களது நிறுவனம் ஒரு வெளிப்பிரயோக மூலிகை பவுல்டீசை (Poultice) கொண்டு ஆர்த்திரைட்டிஸ், ஸ்பான்டிலைட்டிஸ், தோள்பட்டை வலி, முதுகுவலி, குதிக்கால்வலி, கைகால் மூட்டுவலி ஆகியவைகளுக்கு தகுதிவாய்ந்த அனுபவம் மிக்க ஆயுர்வேத, சித்தா மற்றும் அலோபதி மருத்துவர்களின் மேற்பார்வைகளின் கீழ் சிகிச்சை அளித்து வருகிறோம்.

★ ஒரு வரைப்போல் மற்றொருவரது உடல்வன்மை இருப்பது இல்லை என்பது யாவரும் அறிந்த உண்மை எனவே கால மாற்ற விளைவுகளால் மனிதனின் உடல்வன்மையில் ஏற்படும் மாறுதல்களுக்கு ஏற்ப சிகிச்சையும் பலன்களும் வேறுபடலாம் என்பதை **MARC HERBAL CARE (P) LTD** நன்கு உணர்ந்துள்ளன.

கலந்து ஆலோசிக்க இப்போதே தொடர்பு கொள்க.
தொலைபேசி
**0413-346683**

காலை 9 மணி முதல், இரவு 7 மணி வரை
வாரத்தில் 7 நாட்களும் திறந்திருக்கும்.

**MARC ஹெர்பல் கேர் (பி) லிமிடெட்**
32, செயிண்ட் தெரெஸ் வீதி, பாண்டிச்சேரி – 1
(ராமன் தியேட்டர் எதிர் வீதி, ஃபார்ச்சூன் பேக்கரி எதிரில்)
**Fax : 91 - 0413 - 346683**





# TAMILNADU GOVT. EMPLOYEES' AND INDUSTRIAL EMPLOYEES' WELFARE SOCIETY (REGD)

'NGO NAGAR' Housing & House Sites

மாநில, மத்திய, பொதுத்துறை மற்றும் தொழில் துறை அலுவலர்கள் / பணியாளர்களுக்காக தாம்பரம் - பெருங்களத்தூர் அருகே அமைந்துள்ள NGO நகர் PHASE II வீட்டுமனைத் திட்டத்தில் வீட்டுமனைகள் ஒதுக்கீடு செய்வதற்கான விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

| | | |
|---|---|---|
| இடம் | : | ஆலப்பாக்கம் தாம்பரம் அருகில் |
| மனையின் அளவு | : | 2400 சதுர அடி |
| விலை | : | 1 சதுர அடி ரூ.42/- |

**இவ்விடத்தின் சிறப்பு அம்சங்கள்:**

பொறியியல் கல்லூரி, அரசாங்க / தனியார் உயர்நிலைப்பள்ளிகளுடன், 150 அடி அகல Proposed Ring Road-ம், எங்கள் layout - ல் 80 அடி, 60 அடி, 50 அடி and 33 அடி (Minimum) அகலத்தில் சாலைகள் அமைந்து வருகிற Layout உங்களுக்காகவே உருவாக்குகிறோம்.

தகுதி : மாநில, மத்திய, பொதுத்துறை அலுவலர் / பணியாளர்கள். விண்ணப்பப்படிவம் பெற நேரிலோ அல்லது தபாலிலோ சுயவிலாசமிட்ட தபால் தலை ரூ. 4/- ஒட்டிய கவருடன் ( 12" x 5" ) அனுப்பவேண்டிய முகவரி :

**Shanthi Complex, 2nd Floor, 26, Ranganathan Street, T. Nagar, Chennai - 17. Ph : 433 7016 / 852 9136**

ADCHOICE

Allotment on First Come First Served Basis ■ Site Inspection on Sundays from Tambaram.

♦ துருக்கி நாட்டில் குடித்து விட்டுக் கார் ஓட்டுபவர்களுக்கு ஒரு விநோதமான தண்டனை வழங்கப்படுகிறது. குடித்து விட்டுக் கார் ஓட்டுபவரை அவர் காரிலேயே ஏற்றி இருபது மைல்களுக்கு அப்பால் கொண்டு போய் விட்டு விட்டுக் காரை மட்டும் எடுத்துக் கொண்டு வந்து விடுவார்கள், போலீஸார். குடித்தவர் இருபது மைல் நடந்தே வந்து காரை அடைய வேண்டும். அவர் எந்த வாகனத்திலாவது லிஃப்ட் கேட்டு ஏறி வந்து விடலாம் என்று நினைத்தால் அதுவும் முடியாது. அவர் நடந்து வரும்போது போலீஸ் வேன் ஒன்று அவரைக் கண்காணித்தபடி மிக மெதுவாக அவர் பின்னாலேயே வந்து கொண்டிருக்கும்! அவர் இருபது மைல்கள் நடப்பதற்குள் குடிபோதை அடங்கி, அவமானப்பட்டதால் திருந்தி குடியை மறந்து விடுகிறார்.

– ஆர். ஆர். பூபதி.

♦ புதுதில்லியில் ஓர் ஆச்சர்யமான ஓவியக் கண்காட்சி நடந்தது. இந்த ஓவியக் கண்காட்சியில் இடம்பெற்ற ஓவியங்கள் அனைத்தும் திஹார் சிறையில் உள்ள கைதிகளால் வரையப்பட்டவை! திஹார் சிறையில் ஓவியம் தீட்டுதல் போன்ற பல கலைகளும் தொழில்களும் கற்றுத் தரப் படுகின்றன.

– ஆலன்
ஆதாரம் : 'த வீக்'

♦ ஆந்திர மாநிலத்தைச் சேர்ந்த பாபா கான் தோமே இசையமைத்துப் பாடல் பாடும் கலைஞர். இவர் பெயர் 1989லேயே கின்னஸில் இடம்பெற்றுள்ளது. இவரது பாடல்கள் 27 மொழிகளில் வெளிவந்துள்ளன. தமது பாடல்களுக்காக இவர் இசைக் கருவிகளைப் பயன்படுத்துவது இல்லை. அன்றாடம் பயன்படுத்தும் டிபன் பாக்ஸ், கம்பிகள், குடைகள் போன்றவற்றையே இசைக் கருவியாகப் பயன்படுத்துகின்றார். அண்மையில் இவரது 95,000மாவது நிகழ்ச்சி ஆந்திராவில் நடைபெற்றது!

நன்றி : நமது எம்.ஜி.ஆர்.
தகவல் : ப. இராம் முருகன்

♦ காரல் மார்க்சின் மனைவி ஜென்னி, பெரும் பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவர். ஆனால், அவர் மார்க்சை மணந்த பின் வறுமையால் மிகவும் துன்பமடைந்தார். கணவர் இறந்தபின் அவர் சொன்னார் :
" 'மூலதனம்' என்னும் நூலை மார்க்ஸ் எழுதியதற்குப் பதிலாக மூலதனத்தை அவர் தேடியிருந்தால், எங்களுடைய வாழ்க்கை எவ்வளவோ நன்றாக இருந்திருக்கும்!"

– டி.எஸ். பாலு

♦ ஏ.கே. 47 துப்பாக்கியை வடிவமைத்தவர் காலஷினிகோவ் என்ற ருஷ்ய ராணுவ ஜெனரல். போரில் காயமுற்று மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வந்தபோது இந்தத் துப்பாக்கியை வடிவமைத்தார். 1947-ல் முதலில் தயாரிக்கப் பெற்றது. எனவே ஏ.கே. 47 என்று அழைக்கப் பெற்றது. (ஆடோமேடிக் காலஷினிகோவ் – 47) தற்சமயம் இதில் பல முன்னேற்றங்களைச் செய்து ஏ.கே. – 52, ஏ.கே. – 56, ஏ.கே. – 72 என்று பல துப்பாக்கிகள் ராணுவச் சந்தையில் உள்ளன.

இதனை முதலில் வடிவமைத்த காலஷினிகோவ் சமீபத்தில் இந்தியாவிற்கு வந்திருந்தபோது, 'உலகில் அமைதியை ஏற்படுத்தவே இத்துப்பாக்கியை வடிவமைத்தேன்' எனக் கூறினார்!

ஆதாரம் : 'ஹிந்து'
தகவல் : பி. ஆர். பாலகிருஷ்ணன்

♦ சென்ற ஆண்டுக்கான சிறந்த சேவை செய்த விருது, "பாத்ரா பிரசாத்" என்ற ஆண் யானைக்கு வழங்கப்பட்டுள்ளது. இது

# என்றால் என்ன?

செய்த சிறந்த சேவை என்ன? பயங்கரமாகத் தொல்லை கொடுத்து வந்த இரண்டு காட்டு யானைகளை ஓட ஓட விரட்டித் துரத்தி அடித்து பொது மக்களைக் காப் பாற்றியதுதான்! சமீபத்தில் ஓய்வு பெற் றுள்ள இந்த யானைக்கு ஓய்வு ஊதியமும் வழங்கப்பட்டுள்ளது! சிறந்த சேவையை கௌரவிக் கின்ற வகையில் மேற்கு வங் கத்தின் வன அலுவலகத்தில் இதன் உருவச் சிலையும் வைக்கப்பட்டுள்ளது!

ஆதாரம் : **'டைம்ஸ் ஆஃப் இந்தியா'**
தகவல் : **கடல் நாகராசன்.**

♦ கோக்கோ கோலா முதலில் பச்சை வண்ணத்தில்தான் தயாரிக்கப்பட்டது.

♦ ஒரு பசுவை மாடிப்படியில் சுலபமாக ஏற்றலாம்; ஆனால் இறக்குவது மிகக் கடி னம்.

♦ ஆண்களுக்குப் பார்வை தீக்ஷண்யம் அதிகம். பெண்களுக்குக் கேட்கும் திறன் மிகுதி.

♦ சிறு சப்தமும் எதிரொலிக்கும் இடத்தில் கூட வாத்தின் 'க்வாக்' ஒலி மட்டும் எதி ரொலிப்பதேயில்லை. இது ஏனென்று யாருக்கும் தெரியவில்லை.

♦ குதிரை மீது வீரர் ஆரோகணித்து இருக் கும் சிலைகள் பற்றி ஒரு தகவல். குதிரை தன் முன்னங்கால்கள் இரண்டையும் தூக்கியபடி இருந்தால் அவ் வீரர் போர்க் களத்தில் இறந்தார் என்று பொருள். நான்கு கால்களையும் ஊன்றி நின்றால் அவர் இயற்கையாக மரணமடைந்ததைக் குறிக்கும். இப்படி சிலைகள் வடிப்பதுதான் மரபு.

♦ ஓ.கே. (O.K.) என்ற குறியீடு 'ஆல் கரெக்ட்' என்பதன் சுருக்கம் என்று பலர் எண்ணுகிறார்கள். அது தவறு. ஃபோர்ட் மோட்டார் தொழிற்சாலையில் ஒட்டோ க்ராஸ் (Otto Krause) என்ற ஜெர்மானியர் தரத்தைச் சோதிக்கும் பிரிவின் தலைவராக இருந்தார். முடிவில் எல்லாம் சரி என்றால் O.K. என்ற தம் இனிஷியலைக் கார் மீது கைப்பட எழுதி நகர விடுவார்.

'ஓகே' என்ற சுருக்கம் இதிலிருந்துதான் வழக்கில் வந்தது.

– **'டெக்கான் ஹெரால்ட்'**
தகவல் : **அ. ஷண்முகசுந்தரம்**

♦ இடி இடிக்கும் போது வாயைத் திறந்து வைத்துக் கொள்ள வேண்டும். ஏன் தெரி யுமா? இடி இடிக்கும் போது அதன் ஒலி அலை கள் மிக வேகமாக வந்து செவிப்பறையில் மோதும். அதனால், செவிப்பறை கிழிந்து காது செவிடாகி விட நேரலாம். இதைத் தவிர்க்க, நாம் வாயைத் திறந்து கொண்டோமானால், வாய் வழியாக வெளிக் காற்று உட்சென்று செவிப் பறையின் மறுபக்கம் மோதும். அப்போது, அவ்வெளிக்காற்று செவிப்பறையைத் தாக்கும் அதீத அதிர்வை வாங்கிக் கொண்டு செவிப்பறை பாதிக்கப்படாமல் பாது காக்கும்.

– **'உங்களுக்குத் தெரியுமா?'**
நூலிலிருந்து : **வயலூர் மு. இராமசாமி**

# தெய்வத்திற்கு உணவை





## நைவேத்தியமாகப் படைப்பது ஏன் ?

மிக அண்மையில் தோன்றியவரும் ஆலய வழிபாடு செய்துவந்தவருமான ஸ்ரீராம கிருஷ்ண பரமஹம்சர் இதற்குச் சாட்சி ஆகிறார்.

தூய அன்புடனும் பூரண விசுவாசத்துடனும் தெய்வத்துக படைக்கப்படும் நைவேத்தியத்தை மூர்த்தியினிடமிருந்து அருட்ஜோதி ஒன்று கிளம்பி வந்து ஸ்பரிசிக்கிறது.

அத்தகைய அருள் ஸ்பர்சம் ஆன பின்பே, அது பிரசாதமாகின்றது. ஈசுவரப்பிரசாதமாக அன்பன் அதை ஏற்றுக் கொள்கின்ற பொழுது அவனுடைய அந்தக்கரண சுத்திக்கு அது பேர் உதவிபுரிகின்றது.

ஆதாரம் : தர்மசக்கரம்






ஸ்வீட்களில் சிறந்தது
கிராண்ட் ஸ்வீட்ஸ்

திருமண
வைபவங்களுக்கு:-

சிர்முறுக்கு, சீர் அதிரசம்,
முள்ளுத்தேன்குழல், பருப்புத்
தேங்காய் வகைகள்,
திரட்டுப்பால், அப்பம்
முதலியன.

Swathy

தி கிராண்ட்
ஸ்வீட்ஸ் &
ஸ்நாக்ஸ்

24, 2வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை - 600 020.
போன் : 4915662, 4914213



# நரகத்திலிருந்து விடுதலை!

"மூன்று வருடங்களைக் கொடிய நரகத்தில் நாங்கள் கழித்தோம். வெளியே வந்து சுதந்திரக் காற்றை சுவாசிப்போம் என்ற நம்பிக்கை எங்களுக்குத் துளிக்கூட இல்லை. அதிருஷ்டம்! இன்று விடுதலையடைந்து, நாங்கள் பிறந்த மண்ணில் இருக்கிறோம்" என்கிறார் நாற்பத்து ஐந்து வயது அசோக் குமார்.

யார் இந்த அசோக் குமார்?

பாகிஸ்தான் போலீசால் கைது செய்யப்பட்டு, எந்தவித விசாரணையும் இல்லாமல் பல்வேறு பாகிஸ்தானிய சிறைகளிலும் கொடூரமான சித்ரவதைகளை அனுபவித்தவர். தனியாக இல்லை! இவருடைய மூன்று மகன்களுடன்! வாஜ்பாய், பாகிஸ்தானுக்கு நல்லெண்ண பஸ் பயணம் மேற்கொண்டதையடுத்து, இரு தரப்பிலும் கைதாகி சிறையிலிருந்த கைதிகளைப் பரஸ்பரம் விடுதலை செய்தார்கள் அல்லவா? அப்படி பாகிஸ்தானிய பெஷாவர் சிறைச் சாலையிலிருந்து விடுதலையானவர்கள்தாம் அசோக் குமாரும் அவரது மூன்று பையன்களும்.

"அது ஒரு பெரிய கதை! நான் டில்லி சர்க்காரில் வேலை பார்த்துக் கொண்டிருந்தவன். வெளிப்படையான மனிதன்! மனத்தில் ஒன்றை வைத்துக் கொண்டு, வேறு ஒன்றைப் பேசுவது எனக்கு சுத்தமாகப் பிடிக்காது. எனவே, சக ஊழியர்களானாலும் சரி, மேலதிகாரிகளானாலும் சரி; முகதாட்சண்யம் பார்க்காமல் பேசி விடுவேன்! இதனால் எனக்கு ஏகப்பட்ட பிரச்னைகள். ஒருசிலர் என்னைக் கொலை செய்யவும் முயற்சி செய்தார்கள். கடைசியில் எனக்குக் கிடைத்தது 'பைத்தியக்காரன்' பட்டம்!

சர்க்கார் வேலையை விட்டு உதறினேன். ஆப்கானிஸ்தான் போனால் பிழைத்துக் கொள்ளலாம் என்று சொன்னார்கள். அங்கே போக முடிவு செய்தேன். என் மனைவி என்னுடன் வருவதற்குத் தயாராக இல்லை. எனக்கு என் மூன்று மகன்கள் (அஜய், அமர், சமுந்தர்) என்றால் உயிர். அவர்களை எப்போதும் என் கூடவே வைத்துக் கொண்டிருப்பேன். என்னைக் குறி வைப்பவர்களால், என் மகன்களுக்கு ஆபத்து ஏதும் வரக் கூடாதே என்று கவலைப்படுவேன்.

"மூன்று வருடங்களுக்கு முன்னால், ஒருநாள் மகன்களுடன் சொந்த ஊரிலிருந்து பஸ் பிடித்து சோன்பட் வந்து அங்கிருந்து அமிர்தசரசுக்கு ரயில் பிடித்தேன். அங்கிருந்து லாகூர் போய்ச் சேர்ந்தோம். மறுபடி பெஷாவருக்கு ரயில் பயணம் தொடர்ந்தது. ஆப்கானிஸ்தான்

# சென்றவார டீ.வி.

— விமர்சிக்கிறார் ஓவியர் ஆதிமூலம்

● திரைப்படக் கல்லூரியின் குறும்படம் ஒன்று. ஜாதிக் கொடுமையைக் காட்டியது. 'கீழ்' ஜாதிக்காரர் வழங்கிய



சிறுநீரகத்தால்தான் தாம் உயிர்பிழைத்தோம் என்பது தெரிந்ததும் மனம் மாறுகிறார் 'மேல் சாதிக்'காரர் இது போன்ற படங்கள் நம் நாட்டுக்குத் தேவை என்ற நிலை இன்னும் இருப்பது சோகமான விஷயம்!

● மர்மதேசத்துக்குப் பிறகு அதே போன்ற பல த்ரில்லர்கள். அறிவைப் பெருக்கிக் கொள்ளவும் மனத்தை ரிலாக்ஸ் செய்யவும் மட்டுமே நிகழ்ச்சிகள் இருந்தால் போதுமே!

● சன் டீ.வி., ராஜ் டீ.வி. ஆகிய இரு சானல்களின் செய்திகளையும் மிக்ஸ் செய்தால்தான் உண்மையான செய்திகளை அறியமுடியுமென்று தோன்றுகிறது. எத்தனை முரண்பாடுகள்!

● அரசியல் நெருக்கடியைத் தொடர்ந்து பல்வேறு கட்சிகளின் பிரதிநிதிகளைக் கொண்டு 'நேருக்கு நேரி'லும், ஸ்டார் நியூஸிலும் கலந்துரையாடலுக்கு ஏற்பாடு செய்திருந்தனர். ஆனால் இவற்றைவிட பி.பி.சி நியூஸில் ரங்கராஜன் என்பவர் செய்த அலசல் உண்மையாகவும், பொறுப்புணர்வோடும் இருந்தது.

● மிஸ்ஸியம்மா திரைப்படம். நாற்பது வருடங்களுக்குப் பிறகும் ரசிக்க முடிந்தது. கதையம்சமும் யாரையும் புண்படுத்தாத வசனமும் கொண்ட முழுநீள நகைச்சுவைப் படம் இதற்குப் பிறகு வேறு வந்திருக்கிறதா?

தொகுப்பு:- ஜி.எஸ்.எஸ்.

எல்லையை அடைந்தபோது, பாகிஸ்தான் போலீஸ் எங்களைத் தடுத்து நிறுத்தியது.

''ஆப்கானிஸ்தான் போகிற ரயில் நாளைக்குத்தான். அதுவரை எங்களுடன் இருங்கள் என்று சொல்லி, அழைத்துப் போனது.

ஆனால் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனதும், ''உங்களிடம் பயணத்துக்குத் தேவையான தஸ்தாவேஜுகள் இல்லை. உங்கள் மீது எங்களுக்குச் சந்தேகம் ஏற்படுகிறது'' என்று சொல்லி கைது செய்து சிறையில் அடைத்தனர். எங்களிடம் பாஸ்போர்ட், ஆப்கானிஸ்தான் செல்ல விசா, நாடு கடந்து செல்ல பர்மிட் எல்லாம் இருந்தது. பாக். போலீஸ் அவற்றைக் கண்டுகொள்ளவேயில்லை.''

மூன்று வருடங்களில் அடிலா, பெஷாவர், லாகூர் என்று மூன்று ஜெயில்களை இவர்கள் பார்த்து விட்டனர்.

ஜெயிலில் எதற்காக நாம் அடைத்து வைக்கப்பட்டிருக்கிறோம் என்பதற்கு பதில் தெரியாமலேயே சித்ரவதைகளை அனுபவித்திருக்கிறார்கள் அசோக் குமாரும் அவரது மூன்று மகன்களும்!

''சிறையில், கடும் குளிர்காலங்களில் நானும் மகன்களும் ஒரே கம்பளிக்குள் படுத்துக் கொள்ள வேண்டும். தாங்கமுடியாத குளிரில் குழந்தைகளின் வேதனை, என் மனத்தில் ரணத்தை ஏற்படுத்தும். நாற்றமடிக்கும் உணவுதான் பெரும்பாலும். உணவை உண்ண மறுத்தால் அடி, உதைதான். விஷ ஊசி செலுத்திக் கொல்ல முயன்றபோது, நாங்கள் தப்பிப் பிழைத்தது யார் செய்த புண்ணியமோ தெரியவில்லை. எங்களைத் தூக்கிலிடுவது என்று எடுக்கப்பட்ட முடிவு, செயல்படுத்தப்படாமல் போனது ஏன் என்று கூடத் தெரியாது. இடையிடையே முஸ்லிமாக மதமாற்றம் செய்யவும் முயன்றார்கள். ஒவ்வொரு நாள் இரவும், படுக்கப் போகிற போது, 'ஆண்டவனே! நாளைய பொழுது விடியாமலேயே இருந்து விடக் கூடாதா?' என்று வேண்டிக் கொள்வேன்!'' என்கிறார்.

இப்போது விடிந்து விட்டது! சந்தோஷமான விடியல்!

தொகுப்பு : பாரதி

# KALKI SHOPPING PAGE


ஸ்ரீ ராமஜெயம்

## ஸ்ரீ மீனாக்ஷி டிராவல்ஸ் (டில்லி)

**5A/77 W.E.A. KAROL BAGH, NEW DELHI - 110 005.**
**PH: 5726891, Pager: 9628049922**

### Our Daily Conducted Tours

- DELHI-NEW DELHI, TAJ-MAHAL, AGRA, HARIDWAR, JAIPUR, etc.

### Seasonal Package Tours

- JAIPUR, AGRA, MATHURA, (Every Monday)
- MUSSORIE, HARIDWAR, RISHIKESH, (Every Friday)
- SHIMLA, CHANDIGARH, KUFRI, (Every Thursday)
- KULU, MANALI, SHIMLA, CHANDIGARH, (Every Friday)
- BADRINATH, KEDARNATH, YATRA (Every Friday)
- BADRINATH, KEDARNATH, GANGOTRI, YAMUNOTRI YATRA
- SRI AMARNATH YATRA

[Book Your Seats In Advance]

All Types of Accommodation are Available
All Flight tickets are Available
Buses, Cars, Matadors, Vans, and Tata Sumo are available.
Spl. Arrangments For
OUT DOOR FILM SHOOTING.



FOR COMFORTABLE AND ECONOMICAL STAY AT

**NEW DELHI**

VISIT

## HOTEL DURGA DELUX

(Govt. Approved)
5/40, W.E.A. SARSWATI-MARG
KAROL BAGH, NEW DELHI - 110005
Telephone: 011-5785648
011-5785610, 011-5766243
FAX : 011-5753040

TOUR & TRAVEL FACILITY

STD/ISD FACILITY

FOR LOCAL ENQUIRY AT **CHENNAI**
CONTACT: 044-4724327
(AFTER 6 PM ONLY)





**ESTD : 1955** ஸ்ரீ **PHONE : 0431 - 706823 & 704312**

## சம சீதோஷண கால வடதேச யாத்திரைகள்

23 நாட்கள் & 29 நாட்கள் கொண்ட பத்ரிநாத், கேதார்நாத், நேபாள், காசி யாத்திரை

1.7.1999-ம் தேதி (ஆனி 17) சென்னையிலிருந்து நித்திரை வசதி கொண்ட 3 டயர் கோச் மூலம் புறப்பட்டு மீண்டும் சென்னை திரும்புகிறது. யாத்திரை மார்க்கம், சென்னை, பூரி, புவனேஸ்வர், கோனார்க், கல்கத்தா, கயா, காசி, நேபாள், அயோத்யா, அலகாபாத், அரித்வார், பத்ரிநாத், கேதார்நாத், ரிஷிகேஷ், அரித்வார், டில்லி, மதுரா, ஆக்ரா, டில்லி, சென்னை. நபருக்கு ஸ்லீப்பர் சார்ஜ் உள்பட ரயில் கட்டணம், நமது கோச்சில் தங்கும் வாடகை கட்டணம், நகர் சுற்றி பார்க்கும், பஸ் கட்டணம், காலை காபி, டிபன், மாலை காபி, இரண்டு வேளை போஜனம் உள்பட கட்டணம் ரூ. 9975/-. பத்ரி - கேதார், நேபாள் போன்ற மலைப் பிரதேச யாத்திரைக்கு கட்டணம் ரூ. 4250/- தனி. வராதவர்கள் செலுத்த வேண்டியதில்லை. இந்த யாத்திரையில் திருச்சி, சென்னை, செங்கல்பட்டு, சேலம், வேப்படிதாளம், திருவண்ணாமலை, மதுரை, திருக்காட்டுப்பள்ளி, கும்பகோணம், பெரம்பலூர், கம்பரசம் பேட்டை, திருப்பூர் முதலிய ஊர்களில் இருந்து பதிவு செய்துள்ளார்கள் என்பதை தெரிவித்துக் கொள்கிறோம்.

**பழநி அஷ்டலட்சுமி குழுவினரின் பத்ரி – கேதார், காசி யாத்திரை**

22.7.99 ம் தேதி சென்னையிலிருந்து ஒரு தனி 3 டயர் கோச் மூலம் ஆரம்பமாகிறது. ரயில் கட்டணம், காலை காபி, டிபன், நகர் சுற்றிப் பார்க்கும் பஸ் சார்ஜ் உள்பட ரூ. 11,250/-

இந்த யாத்திரையில் திரு. ஏ. மகேந்திரநாத் அவர்களின் தலைமையில் டி. ராமகிருஷ்ணன், ஆர். விஜயலெக்ஷ்மி, ஆர். பாண்டுரெங்கன், பி. கிரிஜா, எஸ். தண்டபாணி, டி. உமா தேவி, ஆர். செல்வரத்தினம், எஸ். லெக்ஷ்மி, எம். மோகன் பாபு, எம். ஸ்ரீலெக்ஷ்மி, ஏ. கேசவன், கே. தனிஸி, ஆர்.எஸ். ரவீந்திரன், ஆர். புவனேஸ்வரி, கே. ஜெயராம், ஜெ. லெக்ஷ்மி, ஆர். வாசவாம்பாள், வி. சுஜாதா, எம். ஸ்ரீனிவாசன், எஸ். உமாராணி, எஸ். கனகலெக்ஷ்மி, எஸ். கிருத்திகா, எஸ். தீபிகா, எஸ். கோபால், டி. அன்னபூரணி, கே. சந்திரசேகர், எஸ். தனலெக்ஷ்மி, எஸ். வசந்தா, ஏ. ராஜேஸ்வரி, ரத்தின சபாபதி, சரஸ்வதி, பத்மவத்சலம் முதலிய அன்பர்கள் பதிவு செய்துள்ளார்கள் என்பதை தெரிவித்துக் கொள்கிறோம். இன்னும் சில பர்த்துகளே உள்ளதால் உங்கள் டிக்கெட்டை முன்கூட்டியே பதிவு செய்து கொள்வது நலம்.

*19 நாட்கள், நேபாள், காசி யாத்திரை, 27.9.99ம் தேதி ஆரம்பம். ரூ. 8750/- 14 நாட்கள் தீபாவளி கங்கா ஸ்நானம் காசி யாத்திரை ரூ. 6975/-*

விபரத்திற்கு 3 ரூபாய் ஸ்டாம்ப் அனுப்புதல் வேண்டும்

## ஸ்ரீ நாமகிரி டிராவெல் சர்வீஸ்

34, A/2, அக்ரஹாரம், மேலசிந்தாமணி, திருச்சி – 2.
உரிமையாளர் : K.E. நம்பிள்ளை, ஆர்கனைசர் : N.K. சேகர்






• ஜாவேத் மியான்டாட்

உலகக் கோப்பைப் பந்தயங்களுக்காக இங்கிலாந்து செல்லும் பாகிஸ்தான் அணிக்கு இப்போது பயிற்சியாளரே இல்லை! என்ன செய்ய, அந்தப் பதவியை ஏற்றிருந்த ஜாவேத் மியான்டாட் ராஜினாமா செய்து விட்டார்!

ஷார்ஜாவில் இங்கிலாந்துக்கு எதிராகப் பாகிஸ்தான் அணி மோதியபோது அஃப்ரிடியும், இஜாஸ் அகமதும் மட்டமான முறையில் அவுட்டானதைத் தொடர்ந்து அந்த அணியின் பயிற்சியாளராகச் சென்றிருந்த மியான்டாட் அங்கேயே கத்தினார்: "நீங்கள் எதற்காக இப்படி ஆடுகிறீர்கள் என்பது எனக்குத் தெரியும்!"

அதாவது 'பெட்டிங் ஏஜெண்டுகளிடம் பணம் வாங்கிக் கொண்டு இப்படி அவுட்டானார்கள்' என்று பொருள். அஸார் மகமூத், இன்ஜமாம்-உல்-ஹக், சக்லின் முஷ்டாக் ஆகியோர்

# கோப்பை நழுவும் குற்றச்சாட்டு!

மீதும் இது போன்ற பழியைச் சுமத்தினார், மியான்டாட்.

இதைத் தொடர்ந்து வாஸிம் அக்ரம், மோயின்கான், இன்ஜமாம் போன்ற சீனியர் விளையாட்டுக்காரர்கள் மியான்டாடை எதிர்த்துப் பேச, ஒரே களேபரம்! உடை மாற்றும் அறையில் உண்டான தகராறைத் தொடர்ந்து, உலகக் கோப்பை தொடங்க மூன்று வாரங்களே இருக்கும் போது தம் பதவியை ராஜினாமா செய்திருக்கிறார் மியான்டாட்.

இதற்கு நடுவே மியான்டாட் மீதே குற்றச்சாட்டுகள் - பணத்தைக் கையாடியதாக. ஷார்ஜாவில் உள்ள பிரபல வியாபாரப் புள்ளிகள் பாகிஸ்தான் கிரிக்கெட் வீரர்களுக்குப் பலவித பரிசுகளையும் சலுகைகளையும் அளித்ததாகவும், அவற்றைக் குழுவினருக்குக் கொடுக்காமல் மியான்டாடே எடுத்துக் கொண்டு விட்டதாகவும் குற்றச்சாட்டு!

இங்கிலாந்துக்காரரும், தென்னாப்பிரிக்க அணிக்குப் பயிற்சியாளராகப் பணியாற்றியவருமான ரிச்சர்ட் பைபஸ் என்பவரை பாகிஸ்தான் அணிக்கு 'டெக்னிகல் கோச்'சாக நியமித்ததும் மியான்டாடின் ராஜினாமாவுக்குக் காரணம் என்று பேசப்படுகிறது.

இந்தக் கெடுபிடியான நேரத்தில் ராஜினாமாவை அளித்தால் 'இதை ஏற்றுக் கொள்ள மாட்டோம். உலகக் கோப்பைப் போட்டி முடிவடையும்வரையாவது நீங்கள் தொடர்ந்து பயிற்சியாளராக இருக்க வேண்டும்' என்று பாகிஸ்தான் கிரிக்கெட் கட்டுப்பாட்டு அமைப்பு தன்னை வேண்டிக் கொள்ளும் என்று மியான்டாட் எதிர்பார்த்ததாகச் சொல்கிறார்கள்.

ஆனால், "அவருக்குத் தொடர விருப்பமில்லையென்றால், வற்புறுத்த முடியுமா என்ன?" என்று கழன்று கொண்டு விட்டது கண்ட்ரோல் போர்டு!

— குல்ஜூ

— சந்திரசேகர்



# எனக்கேது ஆதரவு?

"ஜனாதிபதி கேட்டுக் கொண்டதன் பேரில் நம்பிக்கை வாக்கு கோரினார் வாஜ்பாய். வாக்கெடுப்பில் தோல்வி அடைந் தார். ஆனால் நீங்கள் 'ஜனாதிபதி நம்பிக்கை வாக்கு கோரும்படி உத்தர விட்டிருக்க வேண்டிய அவசியமில்லை' என்று ஒரு சர்ச்சை கிளப்பினீர்களே! அது ஏன்?"

"பட்ஜெட் கூட்டத்தொடரில், பிரத்யேகமாக நம்பிக்கை வாக்கு கோர வேண்டிய அவசியம் கிடையாது. பட் ஜெட் நிறைவேற்றுவதிலோ, அல்லது எதிர்க் கட்சிகள் வெட்டுத் தீர்மானம் கொண்டு வரு கிறபோதோ, ஆளும் கட்சிக்கு மெஜாரிடி பலம் இருக்கிறதா இல்லையா என்று தெரிந்து போய் விடுமே! அப்புறம் எதற்காக நம்பிக்கை வாக்கெடுப்பு?"

"நீங்கள், பி.ஜே.பி. அர சுக்கு ஆதரவு திரட்டும் முயற் சியில் ஈடுபட் டீர்கள். ஆனால், நம்பிக்கை வாக் கெடுப்பில் பி.ஜே.பியை எதிர்த்து வாக்கு அளித்தீர்கள். இது ஏன்?"

"நான் பி.ஜே.பி. அரசைக் காப்பாற்று வதற்காக, ஆதரவு திரட்ட முயற்சி செய்ய வில்லை. பி.ஜே.பி. ஆட்சி, நாட்டு நலனில் அக்கறை காட்டவில்லை. எனவே அது வீழ்ந்தது."

"இப்போது இடைத்தேர்தல் நடக்கப் போகிறது. அதன் முடிவுகள் எப்படி இருக்கும்?"

"மறுபடியும் குழப்பமான நிலைமைதான் நீடிக்கும்!"

"வடக்கே காங்கிரஸ் மறுபடி பெருமன வில் வெற்றிபெற வாய்ப்பு இல்லை என் கிறீர்களா?"

"ம.பி மற்றும் ராஜஸ்தானில் சென்ற முறை நடந்தது போல, காங்கிரஸ் மறுபடி யும் செல்வாக்கு பெறக்கூடும். ஆனால், உடனடியாக உ.பி. முதலிய முக்கிய வட மாநிலங்களில் காங்கிரஸ் பெருவாரியாக வெற்றிபெற வாய்ப்பு இல்லை."

"பி.ஜே.பி. விழுந்த பின்பும் மீண்டும் உங் களைப் பிரதமராக்க யாரும் முன் வரவில்லை. தேர்தலுக்குப் பிறகு பிரதம ராக வாய்ப்பு இருப்பதாக நினைக்கிறீர்களா?"

"எனக்கு பாராளுமன்றத்தில் செல் வாக்கு கிடையாது. நான் கற்பனையில் சஞ் சரித்து எதிர்பார்ப்புகளை வளர்த்துக் கொள் வது கிடையாது."

"சோனியாவைப் பிரதமராக்குவதை ஏற்றுக் கொள்ளாத நீங்கள், ஜோதிபாசு பிரதமராவதற்கு ஆதரவு தந்தது ஏன்?"

"அவர் பழுத்த அனுபவசாலி. 52 வருடங் கள் அரசியலில் ஊறிப்போனவர்! மேற்கு வங்காளத்தில் மிகச் சிறப்பாகக் கூட்டணி ஆட்சி நடத்தி வெற்றி காண்பவர். எனவே, மத்தியிலும் பிரதமராகப் பொறுப்பேற்றால், கூட்டணி ஆட்சியைத் திறம்பட அவரால் நடத்த முடியும் என்பது என் கருத்து."

நன்றி: இந்துஸ்தான் டைம்ஸ்

தமிழில்: கௌதம்

காதில் விழுந்தவை


• ராமதாஸ்

# போண்டா வடையும் இரண்டாயிரம்

● மாநகராட்சியில் உள்ள வசூல் மன்னர்கள் புதிய உத்திகளைக் கையாண்டு காரியங்களைச் சாதிப்பவர்கள். வடசென்னையில் உள்ள ஒரு வட்டத்தில் சமீபத்தில் பதினைந்து டீக்கடைகளுக்குப் பூட்டுப் போட்டு ஸீல் வைத்து விட்டார்கள். காரணம் என்ன தெரியுமா?

டீக்கடையில் போண்டா, வடையும், மூசுண்டையும் (சென்னை பட்டணத்து மக்களுக்கு மட்டுமே தெரிந்த சாப்பிடும் பொருள்) விற்பது சட்டப்படி குற்றமாம்! கடைக்கு இரண்டாயிரம் அழுத பின் மாலையில் மனமிரங்கியது மாநகராட்சி. "வடை, போண்டா விற்றால் அவற்றைக் கைப்பற்றி வழக்குத் தான் போட வேண்டுமே தவிர, கடையை ஸீல் வைக்க மாநகராட்சிக்கு உரிமை கிடையாது. ஒரு நாள் விற்பனை + 2000 போயிற்று" என்று மூக்கால் புலம்பினார் ஒரு டீக்கடைக்காரர்.

இதற்கிடையில், "எனக்குத் தெரியாமல் என் வட்டத்திலேயே வசூலா?" என்று அதிகாரிகளிடம் எகிறி ஆர்ப்பாட்டம் செய்து விட்டாராம் வட்டக் கவுன்ஸிலர்.

● தமிழகம் முழுவதும் உள்ள 1200 மேல்நிலைப் பள்ளிகளில் கம்ப்யூட்டர் மென்பொருள் தொழில் நுட்பம் கற்றுத் தர கம்ப்யூட்டர் பயிற்சி நிறுவனங்களிடமிருந்து டெண்டர்கள் பெற்றுள்ளது தமிழக அரசு. இந்தத் திட்டத்தில் மாநகராட்சிப் பள்ளிகளும் அடக்கம். பயிற்சி தரும் நிறுவனங்கள் கம்ப்யூட்டரையும் கொடுத்து உதவ வேண்டும். இந்த நிலையில் பள்ளிகளுக்குப் புதிய கம்ப்யூட்டர்கள் வாங்க வேண்டிய அவசியமே இல்லை! ஆனால், சென்னை மாநகராட்சி சமீபத்தில் இரண்டு கோடி ரூபாய்க்கு கம்ப்யூட்டர் வாங்க ஆர்டர் கொடுத்திருக்கிறதாம். கல்வி நிலைக் குழு, "தமிழக அரசு எடுத்துள்ள நடவடிக்கை காரணமாக கம்ப்யூட்டர் வாங்கத் தேவையில்லை" என்று சொல்லியும், அந்த வாதம் நிராகரிக்கப் பட்டு, "வாங்குதல்" முயற்சி தொடர்கிறதாம். அதுவும் பத்து லட்சத்துக்கு மேல் உள்ள மதிப்பில் வாங்க வேண்டுமென்றால் அரசுக்குச் சொல்லி அனுமதி பெற வேண்டுமாம். அந்த விதிமுறையைச் சமாளிக்க, பத்து லட்சம் மேற்படாத வகையில் ஆர்டர்கள் போட்டு கம்ப்யூட்டர்கள் வாங்க இருக்கிறார்களாம். ''நகரத் தந்தைக்கு தவறான வழி காட்டும் அதிகாரிகள், கதையைக் கந்தலாக்கி விடுவார்கள் போலிருக்கிறதே'' என்று வருத்தப் படுகிறார் உடன் பிறப்பு ஒருவர்.

● பாராளுமன்றத் தேர்தலில் பா.ம.க.வும் ம.தி.மு.க.வும் தி.மு.க.வுடன் கூட்டணி அமைக்கும் என்பது எல்லோரது எதிர் பார்ப்பு. இதற்குக் காரணம் பா.ஜ.க. அரசு தொடர நடந்த முயற்சியில் இந்த கட்சி களுக்குள் உண்டான ஒற்றுமை. ஆனால் பா.ம.க. வேறுவிதமாகக் காய்களை நகர்த்து கிறதாம்.

'அ.இ.அ.தி.மு.க.வுடன் வரும் தேர்தலிலும் கூட்டணி தொடர வேண்டும்' என்பது இப் போது உறுப்பினராக உள்ளவர்களின் விருப் பமாம். இதற்கு முக்கியக் காரணம், தி.மு.க. வுடனான கூட்டணியில் இடம் பெற்றால் தொகுதிப் பங்கீட்டில் ஏற்கெனவே வெற்றி

பெற்றுள்ள இரண்டு, மூன்று தொகுதிகளைக் கைவிட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுமாம். ஜெ.வும், பா.ம.க. தோழமையைத் தொடர விரும்புகிறாராம். ஜெயலலிதா காங்கிரஸோடு போவார் என்று பரவலாக எல்லோரும் சொல்கிறார்கள். ஆனால் பாராளுமன்றத்தில் அதிக இடங்களை வைத்திருந்தால்தான் பேரம் பேசும்; மற்றும் நிபந்தனைகள் விதிக்கும் வாய்ப்பு இருக்கும் என்பது மாநிலக் கட்சிகளுக்குத் தெரியாதா? எனவே, இனி தேசியக் கட்சிகளுக்கு அதிக இடங்களை மாநிலக் கட்சிகளால் விட்டுத் தர முடியாது. இதன் காரணமாக காங்கிரஸுடன் கூடத் தொகுதி உடன்பாடு வர முடியாத நிலையும் அ.தி.மு.க.வுக்கு உண்டாகலாம்'' என்று நம்மிடம் சொன்னார் பா.ம.க. பிரமுகர் ஒருவர். ''ஸார்... ம.தி.மு.க.வும் எங்கள் கூட்டணியில் தொடரும் வாய்ப்பு உண்டு'' என்று போனஸ் தகவலையும் சொன்னார் அவர். ராமதாசுடன் ஜெ.வின் நட்பு தொடர்கிறதாம்!

- சென்னை முழுக்க மேம்பாலங்கள் கட்டும் மாபெரும் பணியில் இறங்கியிருக்கிறது மாநகராட்சி. பெரம்பூரில் ஒரு பள்ளியின் விளையாட்டு மைதானத்தைக் குறுக்காகப் பிளந்து கொண்டு மேம்பாலம் செல்வதால், அந்தப் பள்ளியின் விளையாட்டு மைதானத்தைக் கையகப்படுத்த இருக்கிறார்கள். பாலத்துக்கு எவ்வளவு இடம் தேவையோ அந்த அளவு இடத்தை மட்டும் கையகப்படுத்த முயலாமல் தேவைக்கும் அதிகமாகக் கையகப்படுத்தும் திட்டத்தில் இருக்கிறார்களாம் வடசென்னையைச் சேர்ந்த இரண்டு சட்டமன்ற உறுப்பினர்கள். எதிர்காலத்தில் பாலம் கட்டிய பிறகு, அதிகப்படியாகக் கையகப்படுத்திய இடத்தைக் கூறு போட்டு விற்றுவிடத்தான் இந்தத் திட்டம். சட்டமன்ற உறுப்பினர்களின் இந்தக் கபளீகர திட்டத்தைக் கண்டித்து போராட்டத்தில் இறங்கப் போகிறார்களாம் ஆசிரியர்கள்!

— சஞ்சயன்

படம்: சௌந்தர்ராஜன்


BRIM

DIGITAL

CLOCKS

12:23

MODEL NO. B-10. MRP. 875/-

9:36

MODEL NO. M-40. MRP. 1100/-

7:08

MODEL NO. B-20. MRP. 2450/-

★ DISPLAY COLOUR RED (or) GREEN

★ MORE THAN 10 YEARS MEMORY BACK UP

★ DISPLAY VISIBILITY ALSO AT NIGHT TIME

3 years warranty

B.R. Electronics

26, Ramakrishna street, I floor
Adambakkam,
Chennai - 600 088.
Ph: 2456925, 2452369,
Fax: 2452369.

DEALERSHIP ENQUIRIES INVITED



**சா**ர்லி சாப்ளின் வாத்து நடை நடந்தார். குடையைத் தவற விட்டார். அதைக் குனிந்து எடுக்கும்போது தொப்பியைத் தவறவிட்டார். தொப்பியை மீட்கும்போது பாண்ட் நழுவியது. ஒரு கையால் பாண்ட்டை சரிசெய்து கொண்ட போது மறு கையிலிருந்த குடைக்கம்பி எதிரில் வந்த குண்டுப் பெண்மணியின் பின் புறத்தைக் குத்தியது. அவள் வசைமாரி பொழிய, அந்தத் திட்டின் வேகத்தில் சாப்ளின் தலை யிலிருந்த தொப்பி மேலும் கீழுமாக ஏறி இறங்கியது.

திரையரங்கம் நிரம்பி விட்டிருக்கவில்லை யென்றாலும் வந்திருந்தவர்கள் சிரித்த சிரிப்பில் அதன் அத்தனை சுவர்களிலும், கூரையிலும் சந்தோஷம் மோதி வழிந்தது.

சிரிப்பு முழுவதும் அடங்காத நிலையிலேயே ''சார்லி சாப்ளின் ஒரு ஜீனியஸ் சங்கீதா'' என்றான் சரவணன், தனது இடப்பக்க இருக்கையில் அமர்ந்திருந்த அவளைத் தன்புறமாகச் சற்றே இழுத்தபடி.

''மௌனப்பட யுகத்திலே இப்படி ஒரு சாதனை செய்திருக்கிறாரே. பிரமிப்பான முயற்சிதான்'' என்றாள், அவள் தன் தலையை அவன் தோளில் சாய்த்தபடி.

படம் தொடர, புன்னகை, கவீர் சிரிப்பு,

# கொஞ்சம் சிரித்தாலென்ன?

அருண் சரண்யா

கிண்கிணிச் சிரிப்பு, வெடிச்சிரிப்பு என்று சாப்ளினின் விஷமங்களுக்கேற்ப ரியாக்ட் செய்து கொண்டிருந்தனர். பிறகு படம் முடிந்து கதவுகள் திறக்க, உள்ளே ஒளி ப்ர வியது. எழுந்து கொண்டார்கள்.

"ஆதித்யாவையும் கூட்டிக்கிட்டு வந்திருக் கலாம். இப்போ என்ன செய்யறானோ பாவம்" என்ற சங்கீதாவைப் பார்வையி லேயே அடக்க முயற்சி செய்தான் சர வணன். பிறகு "இன்னைக்கு முழுசும் நாம ரெண்டு பேர் மட்டும் என்ஜாய் பண்ண வேண்டிய நாள். ஆதித்யாவை பாலு பார்த் துக்குவான். தவிர, ஆதித்யா கைக்குழந்தையா என்ன?" என்றான். பாலு சரவணனின் சிநே கிதன். நாக்பூரிலிருந்து பத்து நாள் விடுமுறை யில் இங்கு தங்கிவிட்டுப் போக வந்தவன்.

அதற்குப் பிறகும் மறுப்பாக எதையோ பேசவந்தவளை பதில் பேச விடாமல் "இப்ப நாம நேரே 'தீம்பார்க்'குக்குப் போறோம்" என் றான்.

தூரத்திலிருந்தே பசுமை அவர்களை வரவேற்றது. நுழைவு வாசலை நோக்கிச் சென்ற பாதையில் குறும்புச் சிறுவன் டென் னிஸ், ஆர்ச்சி, டொனால்ட் டக், மிக்கி மவுஸ், ஆஸ்டெரிக்ஸ், டின்டின் போன்ற பிர பல காமிக்ஸ் நாயகர்களின் உருவங்கள் வைக்கப்பட்டிருந்தன. ஆஸ்டெரிக்ஸ் உரு வத்தை நெருங்கியதும் "இந்த காமிக்ஸிலே காகொபோனிக்ஸ்னு ஒரு பாத்திரம் வரும் சங்கீதா. தான் ரொம்பப் பிரமாதமாகப் பாடு வதா நினைப்பு அவனுக்கு. ஆனால் அவன் வாயைத் திறந்தா எல்லாரும் அலறிக்கிட்டு ஓடுவாங்க. ஊர்மொத்தமும் விருந்து சாப்பிடும்போது அவனை மட்டும் வாயை அடைச்சு மரத்துமேலே கட்டி வச்சிருப்பாங்க. அப்படி ஒரு குரல்வளம்."

சங்கீதாவும் சிரித்தபடி தான் படித்த ஒரு சம்பவத்தை நினைவு கூர்ந்தாள். நோய்வாய்ப்பட்டிருந்த ஒருவரிடம் ஓர் எழுத்தாளர் தன்னுடைய புதிய நெடுங்கதை ஒன்றை நீட்டிப் படிக்கச் சொன்னாராம். அதற்கு அவர் "நானே என் இறுதி நாளை நெருங்கிக் கொண்டிருக்கிறேன். அதை இன்னும் சீக்கிரமே வரவழைப்பதில் உங்களுக்கென்ன அவ்வளவு ஆர்வம்?" என்றாராம் வெறுப்புடன்.

உடனே ஒரு பொக்ரான் சிரிப்பை வெளிப்படுத்திய சரவணன், தமிழில் அதுபோன்ற 'பெருமைமிகு' எழுத்தாளர்கள் யார் என்பதைப் பட்டியலிடத் தொடங்கினான். டக்கென்று நாலுபேர் நினைவுக்கு வந்தார்கள்.

"இப்பவெல்லாம் நீங்க படிக்கறதை ரொம்பக் குறைச்சிட்டீங்க. இல்லேன்னா இன்னும் பெரிய பட்டியலாக இது இருந்திருக்கும்" என்றாள்.

அனுமதிச்சீட்டு விற்குமிடம் நெருங் கியது. 'பெரியவர்களுக்கு நூறு ரூபாய். குழந் தைகளுக்கு ஐம்பது ரூபாய்'' என்றது அறி விப்பு. "எங்கப்பாவுக்கு நான் இன்னும் குழந் தைதான். அப்போ எனக்கும் என் மனை விக்குமாக 150 ரூபா கொடுத்தால் போதுமா?" என்று கேட்ட சரவணனை ஊழியர் கடுப் பாகப் பார்த்தார்.

"சிரிக்கத் தெரிஞ்சுக்குங்க சார். அற்புத ஜோக்கோ, அசட்டு ஜோக்கோ, சிரிச்சா உடம்புக்கு நல்லதுதானே" என்றபடி இரு முழு டிக்கெட்டுகளை வாங்கிக் கொண் டான்.

"என்னங்க இது, சம்பந்தமில்லாத ஒருத் தர்கிட்டே போய் ஜோக் அடிச்சுக்கிட்டு.

அதுவும் 'இதெல்லாம் ஒரு ஜோக்கா?'ன்னு சொல்லும்படியான ஜோக்" என்று செல்லமாகக் கடிந்து கொண்டாள் சங்கீதா.

"அதுதான் சொன்னேனே, அற்புத ஜோக்கோ, அசட்டு ஜோக்கோ, சிரிச்சா..."

"ஓகே, ஓகே.... உடம்புக்கு நல்லதுதான், நல்லதுதான்" என்றபோது சங்கீதாவின் புன்னகை பெரிதானது.

தண்ணீர் சாகசப் பிரிவில்தான் நிறையக் கூட்டம். நீண்ட க்யூ.

"ஏதோ அனகோண்டா பாம்பின் வாலாட்டம் இப்ப நாம இருக்கோம்" என்றான் அந்த வரிசையில் சேர்ந்து கொண்டே.

"நீங்க எப்படியுமே வால்தான். நம்ம முதலிரவன்னிக்கு நீங்க செய்த விஷமம் ஞாபகமிருக்கா?"

வயிற்றைப் பிடித்துக் கொண்டு சிரிக்கத் தொடங்கினான் சரவணன். "ஓ. பால் தம்ளர்... பட்டுவேட்டி.... அதைத்தானே சொல்றே?"

"சரி சரி மெதுவாப் பேசுங்க. பக்கத்திலே இருக்கறவங்களுக்குக் கேட்கப் போகுது" என்றாலும் அவசரமாகத் தன் தோல் பையிலிருந்து கைக்குட்டையை எடுத்து அவள் தன் வாயைப் பொத்திக் கொள்ள வேண்டியிருந்தது, சிரிப்பைப் பிறர் அறியாமல் மறைத்துக் கொள்ள.

ஃபைபரில் செய்யப்பட்ட படகு போன்ற பெட்டிகளில் வரிசையில் நின்றவர்களை ஊழியர் ஏற்றிவிட, அவை கிடுகிடுவென ஏதோ மலையில் ஏறி இறங்குவதைப் போல் மேலும் கீழுமாகப் பயணம் செய்தன. கடைசியில் ஆழம் குறைந்த நீர்ப்பகுதியில் இறங்கின. அவர்கள் தொப்பலாக நனைந்து விட்டிருந்தனர்.

தூரத்தில் சென்று கொண்டிருந்த ஒரு பெண்மணியை சுட்டிக் காட்டி "உன் பெரியப்பா பெண் மாதிரியே இருக்கா இல்லே. நான் உன்னைப் பெண்பார்க்க வந்த போது நடந்தது நினைவிருக்கா?" என்றான்.

அது ஒரு சுவாரசியமான குளறுபடி. "சங்கீதா, வாம்மா. மாப்பிள்ளை வீட்டுக்காரங்க காத்துக்கிட்டிருக்காங்க பாரு" என்று அவள் அப்பா அழைக்க, தற்செயலாக அவரது அண்ணன் மகள் ஒருத்தி உள்ளேயிருந்து வந்து அவர் அருகே அமர்ந்து கொண்டாள். இரட்டைக்கும் மேற்பட்ட நாடியாக, தன்னைவிடச் சற்றே உயரமாகவும் இருந்த அவளைக் கண்டு உண்மை புரியாத சரவணன் "இவளா என் வருங்கால மனைவி?" என்று மிரண்டு போனான். முழுசாக ஒரு நிமிடத்திற்குப் பின் சங்கீதா வந்து சேர்ந்த பிறகுதான் அவன் இதயம் 'தடக் தடக்'கிலிருந்து 'லப்டப்'புக்கு மாறியது.

திருமணமான பிறகு இதை அடிக்கடி அவன் குறிப்பிடுவதும், சங்கீதா விழுந்து விழுந்து சிரிப்பதுமாக... பிறகு ஆதித்யா பிறந்து விட்டான்.

"ஒரு சோளா பூரி. ஒரு பட்டர்நான். காஜு மசாலா".

கம்பீரமாக ஆர்டர் கொடுத்த சரவணன் "என்ன சங்கீத், உன்னைக் கேட்காமலேயே ஆர்டர் கொடுத்திட்டேனேன்னு பார்க்கறியா? ஆதித்யா பிறப்பதற்கு முன்னே வாரம் ஒருமுறை நாம பீச், ஹோட்டல்னு சுத்துவோமே, உன் டேஸ்ட் எனக்கு இந்த ஆறேழு வருடங்களிலே மறந்துடுமா?" என்றான். பிறகு "என்னம்மா, கலகலன்னு பேச மாட்டேங்கறியே?" என்றான்.

**"நவீன ஓவியங்களைக் காதால் பார்க்க வேண்டும், கண்ணால் கேட்க வேண்டும்" என்பார்கள். சமீபத்தில் தாம் வரைந்த ஓவியங்களை, சென்னை லலித்கலா அகடமியில் காட்சிக்காக வைத்திருந்தார் கௌரி சங்கர் என்ற இளைஞர். இவர் சென்னை ஓவியக் கல்லூரியில் முதுகலைப் பட்டதாரி. நவீன ஓவியங்களை எப்படிப் பார்ப்பது என்பது ஒருபுறமிருக்கட்டும்; கௌரி சங்கர் வரைந்த ஓவியங்கள் அனைத்தும்,**



- கௌரிசங்கர்

**அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டிக்குக் கதைகள் அனுப்பக் கடைசி தேதி ஜூன் 15. முழு விவரங்களுக்குச் சென்ற வார/அடுத்த வார இதழைப் பார்க்கவும்.**
**— ஆசிரியர்.**

## இதை மூக்கால் படியுங்கள்!

வண்ணக் கலவையில் 'பளிச்' ரகம்!

கௌரிசங்கருக்கு சொந்த ஊர் பாண்டிச்சேரி. சிறு வயதில் பாடம் படிக்காமல், எப்பொழுதும் படம் வரைந்து கொண்டே இருப்பதற்காக வீட்டில் திட்டு வாங்குவார். நோட்டுப் புத்தகங்களைப் படம் வரைந்தே காலி பண்ணி விடுவார். வீட்டுக்குப் பக்கத்திலிருக்கும் பூங்காவுக்குச் சென்று மரம், செடி, கொடிகளைப் பார்த்துக் கொண்டிருப்பதும், கடற்கரைக்குச் சென்று அலைகளை ரசிப்பதும் கௌரிசங்கருக்குப் பிடித்தமான பொழுதுபோக்கு. இவைதான் தமக்கு ஓவியம் வரையத் தூண்டுதலாக இருந்தன என்கிறார் கௌரிசங்கர்.

இவருக்கு ஓவியத்தில் ஈடுபாடு வருவதற்கு உந்துதலாய் இருந்தவர் இவரது அப்பா. அப்பாவின் எழுத்துக்களில் கௌரிசங்கருக்கு ரொம்பப் பிடித்தது 'வானம் வசப்படும்', 'சந்தியா' ஆகிய நூல்கள்.

'அப்பா'வைத் தெரிகிறதா? ஆம், பிரபஞ்சன்.

— பாலு



• கௌரிசங்கரின் ஓவியம்...

அவன் முகத்தைப் பார்த்தாள். பாளமாய் வெடித்த மண்ணைப் போல் கனிவுச் சாரலுக்கு அவன் ஏங்குவது புரிந்தது.

"ஏங்க, இந்தச் சூழலிலே நான் படிச்ச ஒரு ஜோக் ஞாபகத்து வருது. மசால் தோசைக்கு ஆர்டர் செய்த ஒருவர் தன் மேஜையைத் தாண்டிச் சென்ற ஒரு சர்வரைப் பார்த்து "நீ எவ்வளவு நாளா இங்கே வேலை செய் யறே?"ன்னு கேட்டாராம். "ரெண்டு நாளா"ன்னு பதில் வந்ததாம். "அப்படின்னா நான் தோசை ஆர்டர் கொடுத்தது உன் னிடம் இல்லே"ன்னாராம்."

சரவணன் சிரித்தான். தன் பங்குக்கு அவளை சிரிக்க வைக்கப் பரபரத்தான். "தான் ஆர்டர் செய்த ஐட்டம் ரொம்ப நேரமாக வந்து சேராததைக் கண்டு 'இந்தாப்பா. எங்கள் ஆபீசில் மதிய உணவு இடைவேளை வெறும் ஒரு மணி நேரம்தான்'னு சர்வர் கிட்டே சுடுப்படிச்சாராம் ஒருத்தர். அதற்கு அந்த சர்வர் கூலாக 'இதெல்லாம் நீங்க உங்கள் உயரதிகாரிகள் கிட்டே பேசி ஒரு முடிவுக்கு வரவேண்டிய விஷயம்'னாராம்."

இருவரும் சிரித்தனர். பிறகு தன்னிச்சையாகச் சுற்றும் முற்றும் பார்த்துக் கொண்டனர். தெரிந்தவர்கள் யாரும் பார்த்துவிடக் கூடாதே!

**வீ**ட்டுக்குள் நுழையும்போதே பதற்றம் தலைதூக்கியது. ஆதித்யா என்ன செய்து கொண்டிருப்பான்?

கதவைத் திறந்ததுமே பாலு, "ஆதித்யா மாடியிலே தூங்கிக்கிட்டிருக்கான். நோப்ராப்ளம்" என்றான் குறிப்பறிந்தவனாக.

நிம்மதி. கூடவே குற்ற உணர்வு. பிறகு பின்னதன் பளு அதிகமாக, சட்டென்று நண்பனின் கைகளைப் பிடித்துக் கொண்டான் சரவணன்.

"சாரிடா பாலு, ஊரைச் சுற்றிப் பார்க்க வந்த உன்னை வீட்டிலே வச்சுட்டு நாங்க வெளியே போயிட்டு வந்திருக்கோம். முடியல்லேடா. வலதுகை சூம்பிப் போய், மூளை வளர்ச்சியும் குறைந்து போய் எங்களுக்கு ஆதித்யா பிறந்ததில் நாங்க இடிஞ்சு போயிருப்பது உண்மைதான். ஆனா இதுக்காக எங்களைப் பார்த்து பரிதாபப்படும் ஜனங்க, நாங்க எதுக்காகவாவது சிரிச்சுப் பேசினாலோ கலகலப்பாக இருந்தாலோ ஏதோ குற்றவாளியைப் பார்ப்பதுப் போலப் பார்க்கிறாங்க. அப்படி சிரிச்சாலோ சந்தோஷப்பட்டாலோ எங்கள் குழந்தையைப் பற்றிய கவலை குறைந்து விட்டதா அர்த்தமாயிடுமா? மனசிலே கொஞ்சமாவது தெம்பைச் செயற்கையாகவாவது ஏத்திக்கிட்டாதான் இந்த மனபாரத்தை சுமக்க முடியுதுடா... அதனால்தான்..."

குமுறி அழும் நண்பனின் முதுகைத் தட்டி அணைத்துக் கொண்டான் பாலு. ●

3

# துயவு செய்து

அவசரமாக வந்து பைக்கை ஸ்டாண்ட் போட்டு நிறுத்திய மகேஷ், இரண்டிரண்டு படிகளாக ஏறி இரண்டாவது மாடியில் இருந்த தனது ஃபிளாட்டுக்கு வந்து அழைப்பு மணியை ஒலிக்கச் செய்தான்.

கதவைத் திறந்த சித்ராவின் அழுது முடித்த கண்களும் படுக்கையறையிலிருந்து வந்து கொண்டிருந்த அனிதாவின் விசும்பலும் அவனைக் கலவரப்படுத்தின.

"என்ன சித்ரா? எதுக்கு அவசரமா வரச் சொல்லி போன் செஞ்சே? அனிதாவா அழறா? அவளுக்கு என்ன? எதாச்சும் ஆக்ஸிடெண்டா? சீக்கிரம் சொல்லு! பதறுது!"

"முதல்ல உள்ளே வாங்க" என்று கதவை மூடிவிட்டு குரலைக் குறைத்துக் கொண்டு பதற்றத்தோடு சித்ரா சொல்லச் சொல்ல மகேஷின் ரத்தம் சூடேறியது.

"எந்தப் பொறுக்கி அவன்?" கத்தினான்.

"ஸ்! கத்தாதிங்க! அந்த நாசமாப் போறவன் பேர் செல்வாவாம். இந்தக் கண்றாவிக் கூத்து நடந்தப்போ பக்கத்தில டெய்லர் கடையிலேர்ந்து நம்ம கண்ணன் பார்த்திருக்கான். அவன்தான் அழுதுகிட்டிருந்த அனிதாவை சமாதானப் படுத்தி வீட்டுக்குக் கூட்டிட்டு வந்தான். அந்தக் கேடுகெட்டவனுங்க அங்கே அடிக்கடி இதே மாதிரி பல பேர்கிட்ட வம்பு பண்ணிட்டு இருக்காங்களாம்."

"சின்னக் குழந்தைடி இவ, இவகிட்டப் போயி... கண்ணனுக்கு அவனை நல்லாத் தெரியும்னு சொன்னானா? இரு... அவனை..."

மகேஷ் அவிழ்த்த ஷூவை மறுபடி அணியப் போக...

"இருங்க! என்ன செய்யப் போறீங்க?"

"என்ன கேள்வி இது? பப்ளிக்கா நம்ம பொண்ணுக்கிட்டே வம்பிழுத்து முத்தம் கொடுத்து அசிங்கம் பண்ணிருக்கான். அவனை உதைக்க வேணாம்? கை வலிக்க வலிக்க அறைய வேணாம்?"

"அவசரப்படாதீங்க. முதல்ல அனிதாவைப் பார்த்து ஆறுதல் சொல்லுங்க. வந்ததிலேர்ந்து விடாம அழுதுகிட்டிருக்கா. நான் என்ன சொன்னாலும் சமாதானமாக மாட்டேங்கறா!"

"விஷ்ணு எங்கே?"

"அவன்தான் வேன்ல ஸ்கூலுக்குப் போய்ட்டானே, ஈவினிங்தானே வருவான்."

படுக்கையறைக்குள் வந்த மகேஷைப் பார்த்ததும், 'டாடி!' என்று அவன் மேல் சாய்ந்து கொண்டு மேலும் அழத் துவங்கின அனிதாவுக்கு என்ன சொல்வதென்று புரியாமல் அவள் முதுகில் தடவிக் கொடுத்தான்.

"இல்லம்மா! நீ அழக் கூடாதும்மா. நீ எதுக்கு அழணும். ஒண்ணும் இல்லடா! ஒண்ணும் இல்லை."

அனிதாவின் உடல் முழுவதும் மெலிதாக நடுங்கிக் கொண்டிருப்பதை அவனால் உணர முடிந்தது.

"எனக்கு பயமா இருக்கு டாடி! ரொம்ப பயமா இருக்கு டாடி."

அனிதா அவனை மேலும் இறுக்கமாக அணைத்துக் கொண்டாள்.

"என்னம்மா இது, எதுக்கு பயப்படணும்? நான் இல்ல? அம்மா இல்ல? தைரியமா இருக்கணும். அந்த ராஸ்கலை போலீஸ்ல சொல்லி உள்ளே தள்றேன் பாரு! மறந்துடும்மா!"

"ரோட்ல வச்சி.. என்னை.. அவன்..." விம்மினாள்.

"சொல்லாதம்மா. இத பாரு கண்ணு, அவன் மனுஷன் இல்லை, மிருகம்! மிருகத்துக்குத்தான் நாகரிகம், பண்பாடு எதுவும் தெரியாது. காக்கா நம்ம மேல எச்சம் போட்டுடுச்சின்னு நினைச்சுக்கோ. அதையே நினைக்காதே! இப்ப நீ சின்னக் குழந்தை இல்லை. இந்த மாதிரி பிரச்னைகளை இனிமே நீ சந்திச்சாகணும். ஆனா... இது.. நீ அமைதியா இரு! டாடி இதோ வந்துட்டேன்."

அனிதாவை விலக்கி படுக்க வைத்துவிட்டு வெளியே வந்தான். கூடவே வந்தாள் சித்ரா.

"அவன் ரொம்ப மோசமானவனாங்க. எப்பவும் கூட நாலு பேரோட இருப்பானாம். எனக்கு பயமா இருக்குங்க. நீங்க இப்ப என்ன செய்யப் போறீங்க?"

"எவ்வளவு திமிர் இருந்தா இப்படி கேவலமா நடந்துக்கிட்டிருப்பான் அவன்! பத்தாததுக்கு நாளைக்கு ஸ்கூலுக்குப் போறப்போ நீ எனக்கு முத்தம் கொடுக்கணும்னு மிரட்டிருக்கான்னு வேற சொல்றே! இதை இப்படியே விட்டுட முடியுமா?"

"அவனை செருப்பால அடிக்கணும்னு தான் எனக்கும் ஆத்திரமா இருக்கு. கொஞ்சம் பொறுமையா யோசிச்சிட்டு..."

"எதெதுல பொறுமையாப் போறதுன்னு இல்லையா? ஒண்ணும் பயப்படாதே! நான் ஒண்ணும் சினிமா ஹீரோ இல்லை. நேரா அவன்கிட்ட சண்டைக்குப் போகப் போறதில்லை. அவ்வளவுதூரம் விவேகம் இல்லாதவன் இல்லை நான். அந்தக் கண்ணனைக் கூட்டிக்கிட்டு போலீஸ் ஸ்டேஷன் போயிட்டு வந்துடறேன்."

"பிரச்னை பெரிசாய்டாதே!"

"ஒண்ணும் ஆய்டாது. நமக்கு உதவறதுக்கும் காவலா இருக்கறதுக்கும்தான் காவல் துறையே இருக்கு! அவங்ககிட்ட போறதுக்கு பயப்பட்டா எப்படி? நீ அவ பக்கத்திலேயே இரு. சமாதானப்படுத்து."

மகேஷ் பைக் சாவியுடன், துடிக்கும் உதடுகளுடன் புறப்பட்டான்.

**போ**லீஸ் ஸ்டேஷன் நோக்கி மகேஷ் பைக்கில் விரைந்தபோது பின்னால் அமர்ந்திருந்த கண்ணன் தான் பார்த்ததை விலாவாரியாகச் சொல்லிக் கொண்டே வந்தான்.

ஸ்டேஷனில் நுழைந்து விசாரித்து, இன்ஸ்பெக்டர் தேவநாதனிடம் தன் அலுவலக விசிட்டிங் கார்டைக் கொடுத்து அறிமுகப்படுத்திக் கொண்டு படபடப்பாக மகேஷ் விவரித்தான்.

தேவநாதனுக்கு காதோரங்களில் நரையிருந்தது. தொப்பியைக் கழற்றி மேஜை மேல் வைத்திருந்தார். ஃபேன் காற்று போதாமல் மண்டையில் வியர்த்திருந்தது. சட்டையில் இரண்டு பட்டன்களைக் கழற்றி விட்டிருந்தார்.

விசிட்டிங் கார்டைப் பார்த்து, "மிஸ்டர் மகேஷ், உங்க பொண்ணுக்கு நடந்திருக்கிறது

**பட்டுக்கோட்டை பிரபாகர்**



## தெரியுமா?

◆ நாஞ்சில் மனோகரன் கையில் வைத்திருக்கும் சிறிய கைத்தடிகள் (மந்திரக்கோல்?) சந்தனத்திலானவை. பெங்களூரிலிருந்து வழக்கமாக வாங்கப்படுபவை. ஒரு கைத்தடியை சிறிது காலம் உபயோகித்துவிட்டு நண்பர்களுக்கு அன்பளிப்பாகக் கொடுத்து விடுவார்!

◆ வாழப்பாடியார் கையில் வைத்திருக்கும் சிறிய கைத்தறித் துண்டு, அவர் மனைவி வாங்கித் தருபவை. வருடத்திற்கு ஒரு முறை சேலத்தில் நடக்கும் கைத்தறிக் கண்காட்சியில் மொத்தமாக வாங்கிவிடுவார் வாழப்பாடியாரின் மனைவி.

◆ கலைஞர் தோளில் போடும் மஞ்சள் உல்லன் துண்டுகள் காஷ்மீரிலிருந்து தருவிக்கப்படுபவை. நண்பர் ஒருவர் பொறுப்பாக வாங்கிக் கொடுத்து விடுவார்.

◆ அரசியலமைப்புச் சட்டத்தைப் பற்றி, தாம் தமிழில் எழுதிய புத்தகத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்துக் கொண்டிருக்கிறார் ஆலடி அருணா.

◆ எப்போதும் சுற்றுப் பயணத்தில் இருக்கும் டாக்டர் ராமதாஸ், திண்டிவனத்தில் இருக்கும்போது, கழுத்தில் ஸ்டெத்தை மாட்டிக் கொண்டு கன்ஸல்டிங் அறைக்குப் போய் நோயாளிகளைப் பார்ப்பதை வழக்கமாக வைத்திருக்கிறார்.

— தில்லப்பா



• நாஞ்சில் மனோகரன்



• வாழப்பாடி ராமமூர்த்தி



• கலைஞர்



• ஆலடி அருணா



• டாக்டர் ராமதாஸ்

அநியாயம்தான். உங்க கோபம், ஆத்திரம் எல்லாம் ரொம்ப நியாயம். அந்த செல்வா ரொம்ப லோ கிளாஸ் ஆசாமி. ஏற்கெனவே அடி, தடி கேஸ்ல ரெண்டு தடவை அவனை நானே புக் பண்ணி கோர்ட்ல அபராதம் கட்டிருக்கான். அவனைக் கூட்டிட்டு வரச் சொல்லி ஸ்ட்ராங்கா கண்டிக்கிறேன். மேற்கொண்டு உங்க பொண்ணுகிட்ட எந்த வம்பும் வெச்சுக்காத அளவுக்கு வார்ன் பண்றேன். எதுக்கும் கொஞ்ச நாளைக்கு ஸ்கூலுக்குப் போறப்போ வர்றப்போ யாராச்சும் துணையா போய்ட்டு வாங்க. சரியாப் போயிடும்'' என்றார்.

மகேஷுக்கு ஏமாற்றமாக இருந்தது.

''இவ்வளவு மோசமா நடந்துகிட்டிருக்கான்னு சொல்றேன். அவனைக் கூப்புட்டு கண்டிக்கிறேன்னு சொல்றீங்க? அவன் மேல கேஸ் போட்டு உள்ளே தள்ளப் போறதில்லையா நீங்க? நான் கம்ப்ளைண்ட் எழுதித் தர்றேன் சார். கண்ணால பார்த்த சாட்சி இருக்கு சார். இன்னும் என்ன வேணும் உங்களுக்கு?''

கர்சீப் எடுத்து தன் மண்டை வியர்வையைத் துடைத்துக் கொண்ட தேவநாதன், ''ரொம்ப எமோஷனலா இருக்கீங்க. நீங்க பாதிக்கப்பட்டவர். அப்படித்தான் இருப்பீங்க. ஆனா நாங்க இதே மாதிரி ஒவ்வொரு கேசுக்கும் எமோஷனலாயிட்டிருந்தோம்னா டூட்டில சேர்ந்த ஆறு மாசத்தில ரத்தக் குழாய் வெடிச்சி செத்துப் போய்டுவோம். தண்ணி குடிக்கிறீங்களா?'' என்றார்.

''எனக்கு நியாயம்தான் சார் வேணும்! எங்களுக்குப் பாதுகாப்பு கொடுக்கறதுக்காகத் தான் சார் நீங்க இருக்கீங்க.''

''இப்ப யாரு இல்லைன்னது?''

''என் பொண்ணைக் கூட்டிட்டு வந்து கம்ப்ளைண்ட் தரணுமா? கோர்ட்ல அவளை சாட்சி சொல்லச் சொல்லட்டுமா? நான் ரெடி சார். இந்த மாதிரி அயோக்கியனுங்களுக்கு சப்போர்ட்டாப் பேசாதீங்க சார்! இந்த மாதிரி பொறுக்கிங்க மேல நடவடிக்கை எடுத்தாத்தான் மத்தவங்க இதே தப்பை செய்ய பயப்படுவாங்க.''

''இருங்க! அடுக்கிக்கிட்டே போகாதீங்க. எனக்கு இந்த செல்வா மேல கேஸ் போடறது ஒண்ணும் பிரமாதமான வேலையே இல்லை. உங்க பொண்ணு எங்கயும் வர வேண்டியதில்லை. அதெல்லாம் நானே பார்த்துக்க முடியும்.''

''அப்புறம் என்ன?''

"ஈவ் டீசிங்குக்கு தண்டனை கொடுத்து சட்டம் வந்தப்புறம் இந்த ஸ்டேஷன்லையே இருபத்தி ஆறு பேர் மேல கேஸ் புக் பண்ணி உள்ளே அனுப்பியிருக்கேன். இந்த செல்வாவைப் பத்தி எனக்குத் தெரியும், சரியான தறுதலை! வெட்டி ரோஷம் எக்கச்சக்கம்! பணம் உள்ள பார்ட்டி! கட்சில வேற இருக்கான். உங்க நன்மைக்காகத்தான் சொல்றேன். கேஸ் எதுவும் வேணாம். அவனால உங்களுக்கு எந்தத் தொந்தரவும் வராது. என்னை நம்புங்க."

"என்னோட ஃபீலிங்ஸ் உங்களுக்குப் புரியவே இல்லையா? பத்தாவது படிக்கிறா சார். பதினஞ்சி வயசு சார். புரிஞ்சும் புரியாத வயசு சார். எவ்வளவு தூரம் இந்த சம்பவத்துல பாதிக்கப்பட்டிருக்கா தெரியுமா? அழுதுகிட்டே இருக்கா சார்! நடுங்கிக்கிட்டே இருக்கா. நீங்க என்னடான்னா சமாதானம் சொல்றீங்க? எதுக்காக ஒரு ரவுடிப் பயலுக்கு இவ்வளவு வக்காலத்து வாங்கறீங்க?"

மகேஷை வெறுப்புடன் பார்த்தார் இன்ஸ்பெக்டர் தேவநாதன்.

"நீங்க எல்லாம் வொய்ட் காலர் சொசைட்டி. உங்களுக்கு கிரிமினல்ஸ் பத்தித் தெரியாது. உணர்ச்சிவசப்பட மட்டும்தான் தெரியும். சொன்னால் புரிஞ்சுக்க மாட்டீங்க," என்று கடுப்படித்த அவர் மேஜை டிராயரில் இருந்து வெள்ளைக் காகிதம் எடுத்து அவன் முன்னால் போட்டு, "கம்ப்ளைண்டா எழுதிக் கொடுங்க. நான் ஆக்ஷன் எடுக்கறேன், போதுமா?" என்றார்.

மகேஷ் அவரை முறைத்துவிட்டு பேனா எடுத்து விடுவிடுவென்று எழுதத் துவங்கினான்.

சமையலறையில் பாத்திரங்களை எடுத்து வைத்துக் கொண்டிருந்தாள் சித்ரா.

படுக்கையறையில் அனிதாவும், விஷ்ணுவும் உறங்கி விட்டார்கள் என்பதை நிச்சயப்படுத்திக் கொண்டு மெதுவாக எழுந்த மகேஷ் கதவை ஓசை வராமல் மூடிவிட்டு சித்ராவிடம் வந்தான்.

"குழந்தைங்க முன்னாடி பேச வேணாம்னுதான் போலீஸ் ஸ்டேஷன்ல நடந்ததை உன்கிட்ட விபரமாச் சொல்லலை சித்ரா. கம்ப்ளைண்டை வாங்கிக்கிறதுக்கே அந்த இன்ஸ்பெக்டரை நான் அவ்வளவு வற்புறுத்த வேண்டியிருந்திச்சு தெரியுமா?"

"ஏன் அப்படி?"

"அந்த படுபாவியை இன்ஸ்பெக்டருக்குத் தெரியுமாம். அவன்கிட்ட இவரு கடன் எதுவும் வாங்கியிருக்காரோ என்னவோ. இல்ல, வேற என்ன மாதிரி அண்டர்ஸ்டாண்டிங்கோ?"

ஹாலில் இருந்த டெலிபோன் ஒலித்தது. மகேஷ் வந்து எடுத்தான்.

"என்னடா பெரிய இவன்னு நினைப்பா உனக்கு? நான் செல்வா பேசறேண்டா. என் மேல கம்ப்ளைண்ட் கொடுத்திருக்கியா நீ? உன் பொண்ணுக்கு நடந்தது போதாதா?



"சினிமாவுக்கான கதைய கேட்டா ஏன் பைக்குள்ளருந்து பஸ் டிக்கட்டை எடுக்கறீங்க?"

"அந்த டிக்கட் பின்னாடிதான் கதைய எழுதி வச்சுருக்கேன்!"

– அம்பை தேவா

காலைல என்ன நடக்கப் போவுதுன்னு வேடிக்கைப் பாரு! மவனே, என்னை என்னன்னு நினைச்சிட்டிருக்கே நீ? உன் பொண்ணு அனிதா உருப்படியா இருக்க மாட்டா! ஆட்டோல அள்ளிப் போட்டுட்டுப் போய்டுவேன். திரும்பி கந்தலா வூடு வந்து சேருவா! யோசனை பண்ணுடா இன்ஜினியரு! வைக்கட்டா?" என்றது எதிர்முனை.

முகம் முழுக்க வியர்த்துப் போய் நின்றான் மகேஷ்.

(தொடரும்)

"**எ**ங்கடா தொலஞ்சான் ராஜி?'' என்றபடி கல்லூரி ஹாஸ்டல் காரிடரில் கும்பலாக மாணவர்கள் ஓடிக் கொண்டிருந்தனர். இங்கே அங்கேயென்று இறுதியில் பாத்ரூமிலிருந்து அவனை வெளியே இழுத்தார்கள்.

"எப்ப வயித்துவலி வரணுங்கிற விவஸ்தையே கிடையாதா உனக்கு? பாரு, மந்திரி வந்து பேசிட்டுப் போயிட்டாரு. ச்சே! நல்ல சான்ஸ மிஸ் பண்ணிட்டோம்."

"ராட்சஸ வலிடா'' முனகினான் ராஜி.

"ஆமா, பெரிய பிரசவ வலி! இப்ப சரியாயிடுச்சில்ல? போலாம் வா! நல்லவேளை, பாஸ் மந்திரி பேச்சை ரிகார்ட் பண்ணியிருக்கான்!"

"அய்யோ, விட்றுங்கடா!"

"ராஜி, நீ அவர் பேசும்போதே கூடா செஞ்சிருந்தே, பிரமாதமாயிருந்திருக்கும். போச்சு, பரவாயில்ல, இப்ப பார்த்திடுவோம்" என்று அவனைப் பிடித்து இழுத்தான் சுரேந்தர்.

''ம்... இன்னும் ஏதோ செய்யுதுடா'' வயிற்றைக் காட்டி கெஞ்சியும் ராஜியை அவர்கள் விடவில்லை.

" 'வோர்ல்ட் கப்'க்கு இலவச டிக்கெட் தரேன், செய். பாரு பெப்சி, கோக், சிப்ஸ் எல்லாம் ரெடி."

**ரி**ப்பார்ட்டியில் பலே கில்லாடி ராஜி (எ) ராஜேந்திரன். பாட்டுக்குப் பாட்டு போல பேச்சுக்குப் பேச்சு... அதுவும் ஹாஸ்யமாக பதிலடி கொடுப்பது நிச்சயமாக அவனது மரபணுவில் இருக்க வேண்டும். இல்லையென்றால் அவனைச் சுற்றி இந்தக் கூட்டம் இல்லை!

பொதுவாக இம்மாதிரி நிகழ்ச்சிகளில், ஆடிட்டோரியத்தின் ஒரு மூலையில் கோஷ்டியோடு உட்கார்ந்து கொண்டு 'லைவ்'வாக வர்ணிப்பான். அந்த மூலை மட்டும் ஏன் அதிர்கிறது என்று வினவாத பேச்சாளரே இல்லை. வயிற்று வலி கட்டிக் கொண்ட புண்ணியம், அமைச்சர் லைவ் கவரேஜிலிருந்து தப்பித்தார்.

ஆனாலும் மாணவ நண்பர்கள் விடுவதாகயில்லை. 'ரெகார்டெட் வெர்ஷ'னுக்கு அதே மூலையில் தயாரானார்கள். ராஜியைக் கண்டதும் கூட்டம் சேர ஆரம்பித்தது.

"சைலன்ஸ்... சைலன்ஸ்... ராஜி ரெடியா?''

"ம்...''

டேப் ஓட, மந்திரி ஒலித்தார்.

**மந்திரி** : பேரன்புமிக்க மாணவ மாணவிகளே...!

**ராஜி** : வோட்டுப் போடற வயசு வந்திட்டதால எங்க மீது அன்பு பொழியுதோ?

ம : உண்மையைச் சொல்லப் போனால்...

ரா : சொல்லப் போனால்தானே. உங்க மாதிரி அரசியல்வாதிகளுக்குச் சொல்ல வேண்டிய அவசியமே இல்லையே.

ம : என் இளம்பிராயத்தில் மழைக்குக் கூட கல்லூரிப் பக்கம் ஒதுங்கியதில்லை...

ரா : இப்ப மழைக்கு ஒதுங்கினாலே கேப்பிடேஷன் ஃபீஸ் கேக்கறாங்க.

ம : அப்படிப்பட்ட என்னை நீங்கள்தான் இந்தப் பட்டமளிப்பு விழாவிற்குத் தலைமைதாங்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டபோது அதிர்ச்சியுற்றேன்!

ரா : நாங்களுந்தான்!

ம : சிந்தித்தேன்...

ரா : எப்போதாவது செய்வேன்!

ம : கல்வியின் கருவூலத்தைப் பார்ப்பதற்கு இது ஒரு நல்ல சந்தர்ப்பம். மாணவர்களைச் சந்திக்க பெரும் வாய்ப்பு. சம்மதித்தேன்!

# பேச்சுக்குப்

ரா : எங்க போதாத காலம்!

ம : இன்றைய மாணவன் நாளைய தலைவன்....

ரா : நிச்சயம் உங்களை மாதிரியில்ல!

ம : வருங்காலத் தலைவர்களைக் காணப் போகும் உற்சாகம் மேலிட்டது...

ரா : லஞ்சம் வாங்கும்போது மட்டுமே ஏற்படும் உற்சாகம்.

ம : திடீரென ஒருவித பயமும் என்னை ஆட்கொண்டது. ஆயிரக்கணக்கான மாணவர்களை ஒருசேர சந்திக்கப் போகிறோமே என்கிற அச்சம். பெரும் படையல்லவோ அவர்கள்?

ரா : பாம்பென்றால் படையும் நடுங்கும்னு தெரியாதா தலைவரே. பயம் எங்களுக்குத்தான்.

ம : இரண்டு நாள் உறக்கம் வரவில்லை!

ரா : 'போட்டது' கம்மியோ?

ம : இவர்கள் மத்தியில் நான் என்ன பேசப் போகிறேன்? மேடையிலும், எதிரிலும் குழுமியிருக்கும் அறிவு ஜீவிகளின் முன் என்ன பேசப் போகிறேன்?

ரா: நியாயந்தான். சட்டசபைன்னா கண்டபடி பேசிடலாம்!

ம : சிந்தித்தேன்...

ரா : மறுபடியுமா?



# பேச்சு

ம : ஒரு முடிவிற்கு வந்தேன்.

ரா : பிரதான காரியதரிசி என் பேச்சை எழுதித் தரவேண்டும்.

ம : சமீபத்தில் மூன்று வாரம் அமெரிக்கா சென்றேனல்லவா...

ரா : ஸ்விஸ் பாங்க் போற வழிலதானே?

ம : அங்கு நான் கண்டு பிரமித்த, பொறாமைப்பட்ட, மெய்சிலிர்த்த அனுபவங்களை உங்களுடன் பகிர்ந்து கொள்வதென்று முடிவு செய்தேன்.

ரா : உங்க ஆஸ்தியைப் பகிர்ந்துகிட்டா எவ்வளவு சந்தோஷமாயிருப்போம்?

ம : அவர்கள் எங்கோ போய் விட்டார்கள்.

ரா : நீங்க வர்றது தெரிஞ்சு நாட்டையே காலி பண்ணிட்டாங்களா?

ம : என்ன முன்னேற்றம்! என்ன சாதனை!

ரா : பார்த்தோமே, க்ளின்டன் மகா காவியத்தில்.

ம : விஞ்ஞானத்தை தினசரி வாழ்க்கைக்கு தொழில்நுட்பம் கொண்டு பதப்படுத்தியிருக்கிறார்கள். பட்டனை அமுக்கினால் வங்கியில் காசு!

ரா : அது மட்டுந்தான் கண்ணுக்குத் தெரியும்! பட்டனை தட்டினா ராக்கெட் போறது தெரியாது!

ம : வானளாவிய கட்டடங்கள்...

ரா: ஒழுங்கான அப்ருவலோட!

ம : பரந்து நீண்ட சீரான சாலைகள்...

ரா : ரோடு போடக் கடன் வாங்கி கோடு தானே போடறீங்க இங்க?

ம : இப்படிச் சொல்லிக் கொண்டே போகலாம். என் அவா அந்த விஞ்ஞானமும் தொழில்நுட்பமும் நம் நாட்டுக்கு வர வேண்டும்.

ரா : ஏன் அங்கிருக்கும் அரசியல்வாதிகளையும் இங்கு கொண்டு வரலாமே!

ம : நம் நாடும் அதுபோலாகாதா என்ற ஏக்கத்தினிடையே ஒரு விஷயம் மட்டும் மனத்திற்கு இதமளித்தது.

ரா : ஏதாவது லாட்டரி அடிச்சிதா?

ம : சென்ற இடங்களிலெல்லாம் பல இந்தியர்கள், தமிழர்கள்! எங்கெங்கு காணினும் தமிழனடா எனக் கூவ வேண்டும் போலிருந்தது.

ரா : உங்க கூத்தை தாங்க முடியாம ஓடிப் போறவங்கதான்!

ம : பல முக்கியத் துறைகளில் அவர்கள் செயலாற்றுவதைக் காணும் போது, நம்மூர் கல்விக்கு அங்கிருக்கும் மதிப்பு விளங்குகிறது.

ரா : மக்கடை கணக்கா காலேஜ் திறந்தா அதுவும் புட்டுக்கும்!

**மாதுரி**

கும்பகோணம் நகரில்
தஞ்சை, நாகை, திருவாரூர்
மாவட்ட எழுத்தாளர்
கூட்டமைப்பு நடத்தும்

**அமரர் கல்கி நூற்றாண்டு விழா**



நாள்:
**9.5.99 (ஞாயிற்றுக்கிழமை)**
இடம்:
**ராயா மஹால் திருமண மண்டபம்**
(காந்தியடிகள் சாலை)
கும்பகோணம்
நேரம்:
**மாலை 6 மணி**
முன்னிலை:
**திரு. க. அன்பழகன்**
ஊராட்சி ஒன்றியப் பெருந்தலைவர், குடந்தை.
தலைமை:
**திரு. G.R. மூப்பனார்**
அமரர் கல்கி படத்திறப்பு:
**திரு. வி. நாராயணன்,**
தலைவர், சிட்டி யூனியன் வங்கி.
சிறப்புரை:
**திரு. டி. ராஜேந்தர்**
**திரு. பிரபஞ்சன்**
**திருமதி அனுராதா ரமணன்**
**திரு. ஆர்னிகா நாசர்**
**திரு. எஸ். எழில்**

**அனைவரும் வருக**


அடுத்த அரைமணி நேரத்திற்குப் 'பேச்சுக்குப் பேச்சு' தொடர்ந்தது. முடிந்ததும் ராஜியைத் தலைமேல் தூக்கிக் கொண்டு ஆடினார்கள்.

"டேய்.. டேய்.. ப்ளீஸ்.. வயிறு குலுங்குதுடா... விட்ருங்க. ப்ளீஸ்.."

ஒரு மாதிரியாக ஹாஸ்டலுக்குத் திரும்ப நடந்தனர். அப்போது ஒருவர் ராஜியின் தோளை லேசாகத் தட்டினார். அவன் திரும்ப,

"ரொம்ப நல்லா இருந்தது. நானும் கேட்டேன்"

"தாங்க்ஸ். நீங்க?"

"நான் இருக்கட்டும். உங்ககிட்ட இருக்கிறது ரொம்ப அபூர்வமான டாலன்ட்."

"..............."

"நாங்க உங்களை செலக்ட் பண்ணிட்டோம்."

"செலக்ட்டா? நீங்க யாருன்னே சொல்லலை?"

"நான் கேம்ப்பஸ் இன்டர்வ்யூ நடத்த வந்தேன்."

"சார் நான் செகண்ட் இயர்! பைனல் இயர் இல்லை. வேலைல சேர முடியாது."

"அதனாலென்ன?"

"குழப்பாதீங்க சார். விவரமா நீங்க யாரு, எந்தக் கம்பெனின்னு சொல்லுங்க."

"என் பேரு சுப்புரத்தின ஸ்வாமி. திமுதிமு கட்சியோட கொள்கை விரிப்புச் செயலாளர்."

"கட்சியா?..."

"ஏன், என்ன தப்பு? கட்சி கேம்ப்பஸ் இன்டர்வ்யூ நடத்தக் கூடாதா? படிச்சவங்களை சேர்த்துக் கொள்ளக் கூடாதா...?"

"அமைச்சர் பரவாயில்ல போலிருக்கே?"

"ராஜி எங்க கட்சில ஏற்கெனவே ஹார்வேர்ட் உட்பட பல வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்கள்ல படிச்சவங்க இருக்காங்க. அவங்கவங்க திறமைக்குத் தக்கபடி வேலை."

"நிஜமாவா?"

"உன்கிட்ட திறமையிருக்கு! எதிர்க்கட்சிக்கு பல்லு மேல பதிலடி கொடுக்கிற திறமை. பேச்சுக்குப் பேச்சு என்ன, சொல்லுக்கு சொல், எழுத்துக்கு எழுத்தே உன்னால முடியும்!"

"சார், என்ன சார் சொல்றீங்க?"

"எங்களோட வேலைக்குத்தான் சேரப் போற. நாங்க அரசியல் தொழில் செய்றோம். கம்பெனி மாதிரி பேலன்ஷீட் உண்டு; லாபம் உண்டு, பங்குதாரர்கள் உண்டு, டிவிடென்டும் உண்டு!"

"போச்சுடா! சரி சம்பளம்?"

"பத்து தலைமுறைக்கு போதுங்கிற அளவு கிடைக்கும் வா!"

பேச்சடைத்து நின்றான் ராஜி.

# பிஞ்சு பழுத்தும் வெடிக்கும்!

சுமார் ஒரு வருடத்துக்கு முன் அமெரிக்காவின் அர்கன்ஸாஸ் பகுதியில் உள்ள வெஸ்ட்சைட் எலிமெண்டரி என்ற பள்ளியில் நடந்தது அந்த விபரீதம். இரண்டு பேர் அங்கு நுழைந்து நான்கு சிறுமிகளையும், ஒரு டீச்சரையும் தீர்த்துக் கட்டினார்கள். இந்த இரண்டு கொலைகாரர்களின் வயது முறையே 13 மற்றும் 11. அமெரிக்கப் பெற்றோரிடையே இது ஏற்படுத்திய பாதிப்பு முழுமையாக அடங்குவதற்குமுன் சென்ற வாரம் இன்னொரு பயங்கரம்.



• போன வருட ஜோடி

கொலராடாவில் உள்ள கொலம்பைன் உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் இரண்டு பதினோராம் வகுப்பு மாணவர்கள் துப்பாக்கிகளும், வெடிகுண்டுகளுமாக வந்து சக மாணவர்கள் மற்றும் ஆசிரியர்கள் மீது அவற்றைப் பயன்படுத்தியதில், இருபத்தி ஐந்து பேர் இறந்திருக்கிறார்கள். கடைசியில் அந்த இருவரும் தற்கொலையும் செய்து கொண்டிருக்கிறார்கள்!

''சிறுபான்மை இனத்தைச் சேர்ந்த மாணவர்கள் மற்றும் விளையாட்டு வீரர்களின் மீதுதான் இந்தத் தாக்குதல்'' என்கிற கோணத்தில் சில விசாரணைகள் தொடங்கி விட்டன.

''மத நம்பிக்கைக்கு எதிரான இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் அந்தக் கொலைகார மாணவர்கள்'' என்று சிலர் கூற, ''அதெல்லாமில்லை. போதை மருந்துகளைக் கடத்தும் மாபியா கூட்டத்தில் சேர்ந்ததால்தான் இந்த வெறி'' என்று அடித்துச் சொல்கிறார்கள் வேறு சிலர்.

எப்படி வந்தது பிஞ்சு உள்ளங்களில் இந்த வன்முறை நஞ்சு?

அமெரிக்கப் பின்னணியை மனத்தில் வைத்துப் பார்க்கும்போது பல காரணங்கள் புலப்படுகின்றன.

சுலபத்தில் கிடைக்கும் வன்முறை ஆயுதங்கள். கூட்டுக் குடும்பங்கள் இல்லாதது மட்டுமல்லாமல், அதிகமான விவாகரத்துகள் நடப்பதன் காரணமாகப் பெற்றோர் பிரிந்து போக, அன்புக்கு ஏங்கும் இளம் உள்ளம் வன்முறையை வடிகாலாக்குவது.

ஹாலிவுட் ஹீரோக்கள், சினிமாவில் எத்தனை எதிரிகளைக் கொல்கிறார்கள் என்பதைப் பொறுத்து அவர்களுடைய திறமையை மதிப்பிடுவது... வன்முறையைத் தூண்டும் தொலைக்காட்சி சானல்கள்.





• இந்த வருடக் கொலைகாரர்கள்

இந்த நச்சுச் சூழல் உலகெங்கும் பரவக் கூடும் என்று அச்சம் தெரிவித்திருக்கிறார்கள், மனிதவளத் துறையினர். இந்தியப் பெற்றோரும் சிந்திக்க வேண்டிய கட்டம் இது. ஒருபுறம் குழந்தைகளைப் பாதுகாப்போடு வளர்ப்பதோடு, மறுபுறம் அன்பை வெளிக்காட்டி அவர்கள் மனம் வறண்டு விடாமல் பார்த்துக் கொள்வது முக்கியம். முரட்டுத்தனம் அதிகம் கொண்ட சிறுவர்களை விளையாட்டுகளில் திசை திருப்பி, அதில் அந்த killer instinct உணர்வைத் திருப்ப ஊக்கமளிப்பது, பாஸிடிவான முயற்சி.

— குல்லூ

# குப்பியின் குடும்பம்

அரஸ்,
அலமு













Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager; Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax : 2345621
Annual Subscription : India Rs. 250/-; Overseas Rs. 1900/- (Air Mail)
Half Yearly Subscription : India Rs. 125/-; Overseas Rs. 950/- (Air Mail)



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



16,காமராஜ் சாலை,பழையபெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம்,சென்னை-600063.
Tel&FAX : 2376129,Cell Ph : 9841050464
E-mail: sspeetam@md3.vsnl.net.in
& sspeetam@hotmail.com
WEB SITE: WWW.intamm.com / Sarada

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர்! வணக்கம்

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த் ஒன்பது ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, வசதியற்ற, திக்கற்ற 75 மாணவர்களும் 25 மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை, மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன் உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்த்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே, தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியை செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | |
|---|---|
| காலை சிற்றுண்டி ( 100 பேருக்கு ) | ரூ. 750/- |
| மதிய உணவு ( இனிப்புடன் ) | ரூ. 1,500/- |
| இரவு சிற்றுண்டி | ரூ. 1,000/- |
| இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. 500/- |
| ஒரு மாணவனுக்கு ஓரண்டிற்கு கல்வி உதவித் தொகை | ரூ. 1,000/- |
| ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு ( உணவு, உடை, கல்வி ) | ரூ. 6,000/- |
| குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. 75,000/- |

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம்.

உங்கள் நன்கொடைகளை "ஸ்ரீ சாரதா சக்தி பீடம்" என்ற பெயருக்கு Cheque/DD/ MO மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

நன்கொடைகளுக்கு 80 G பிரிவின்படி
வருமானவரி விலக்கு உண்டு

இறைவன் தொண்டில்
சுவாமி சர்வாத்மானந்தர்.

